# தண்டியலங்கார நோக்கில் திரையிசைப் பாடல்கள்

(அழகப்பா பல்கலைக்கழகத்தில் தமிழில் முனைவர் (Ph.D) பட்டத்திற்காகப் பகுதி நிறைவாக அளிக்கப் பெறும் ஆய்வேடு)


ஆய்வாளர்

**சு.தொண்டியம்மாள்**

**(பதிவுஎண்:1509)**

நெறியாளர்

**முனைவர் மு.பழனியப்பன்**






## தமிழ்த்துறை

## அழகப்பா பல்கலைக்கழகம்

(சேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி பெற்றது மற்றும்

மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு - இந்தியா


**செப்டம்பர் - 2020**

# தண்டியலங்கார நோக்கில் திரையிசைப் பாடல்கள்

(அழகப்பா பல்கலைக்கழகத்தில் தமிழில் முனைவர் (Ph.D) பட்டத்திற்காகப் பகுதி நிறைவாக அளிக்கப் பெறும் ஆய்வேடு)


ஆய்வாளர்

**சு.தொண்டியம்மாள்**

**(பதிவுஎண்:1509)**

நெறியாளர்

**முனைவர் மு.பழனியப்பன்**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி பெற்றது மற்றும்

மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு - இந்தியா


**செப்டம்பர் - 2020**

**முனைவர் மு.பழனியப்பன்,**

இணைப்பேராசிரியர், மற்றும் தமிழ்த்துறைத்தலைவர்,

அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி

திருவாடானை, 623407

**நாள்: 09.2020**

**நெறியாளர் சான்றிதழ்**

**“தண்டியலங்கார நோக்கில் திரையிசைப் பாடல்கள்”** என்னும் தலைப்பில் திருமதி **சு.தொண்டியம்மாள்** அவர்கள் பகுதிநேர முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காகச் செய்த இவ்வாய்வு அழகப்பா பல்கலைக்கழகத்தில் அவர் முனைவர் பட்ட ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**(முனைவர் மு.பழனியப்பன்)**

**நெறியாளர்**

**சு.தொண்டியம்மாள்**

**(பதிவுஎண்:1509)**

முனைவா் பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்)

அழகப்பா பல்கலைக்கழகம்,

காரைக்குடி – 630 003.

**நாள்: 09.2020**

## ஆய்வாளர் உறுதிமொழி

**“தண்டியலங்கார நோக்கில் திரையிசைப் பாடல்கள்”** என்னும் தலைப்பில் பகுதிநேர முனைவா் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**(சு.தொண்டியம்மாள்)**

**ஆய்வாளர்**

உறுதிக்கையொப்பம்

**முனைவா் மு.பழனியப்பன்,**

இணைப்பேராசிரியர் மற்றும் தமிழ்த்துறைத்தலைவர்,

அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி,

திருவாடானை

## நன்றியுரை

அழகப்பா பல்கலைக்கழகத்தில்**“தண்டியலங்கார நோக்கில் திரையிசைப் பாடல்கள்”** என்னும் தலைப்பிலான முனைவா் பட்ட ஆய்வு நிகழ்த்த வாய்ப்பு நல்கிய அழகப்பா பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தா் அவா்களுக்கும் மதிப்பிற்குரிய பதிவாளா் அவா்களுக்கும் என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வினைச் செய்ய வாய்ப்பளித்த திருவாடானை அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரியின் அந்நாளைய முதல்வர் முனைவர் டே.சரளா தேம்பாவணி அவர்களுக்கு என் நன்றிகள் உரித்தாகுக.

இன்றைக்கு இவ்வாய்வேட்டினைச் சமர்ப்பிக்கவும், ஆய்வு சிறக்கவும் உதவி செய்து வரும், திருவாடானை அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரியின் முதல்வர் திருமதி அ. மாதவி அவர்களுக்கும் எந்நன்றிகள் உரித்தாகுக.

முனைவர் பட்ட ஆய்வுக்காலத்தில் வேண்டிய நிலையில் ஆய்வுக் கூட்டங்களை நடத்தி, எம்மை நல்வழிப்படுத்திய அழகப்பா பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் சு.இராசாராம் அவர்களுக்கு என் நன்றிகள்.

என் ஆய்விற்குத் துணை நின்ற அழகப்பா பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறை சார்ந்த அனைத்துப் பேராசிரியர்களுக்கும், அலுவலர்களுக்கும் என் நன்றிகள்.

என் ஆய்வேட்டினை மதீப்பீடு செய்து மேலும் செம்மைப்படுத்தி உதவிய முனைவர் பேராசிரியர் ஜெ.தேவி தமிழ்த்துறைத்தலைவர் (தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்) அவர்களுக்கு என் நன்றிகள்.

என் ஆய்வின் நெறியாளராக இருந்து ஆய்வேட்டைச் செம்மையாக உருவாக்குவதற்கு உதவிய திருவாடானை அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரியின் முனைவர் மு.பழனியப்பன் தமிழ்த்துறைத்தலைவர் அவர்களுக்கு என் உள்ளம் நிறைந்த நன்றி என்றும் உரியது.

எனக்கு ஆய்வு செய்வதற்கு உதவி செய்த திருவாடானை அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரியின் தமிழ்த்துறை சார்ந்த பேராசிரியர்கள் அனைவருக்கும், மற்றும் பிற துறை சார்ந்த நண்பர்களுக்கும், கல்லூரியின் அலுவலகப் பெருமக்களுக்கும் என் நன்றிகள்.

ஆய்வு தொடர்பான செய்திகளையும் நூல்களையும் பல்வேறு வழிகாட்டுதல்களையும் வழங்கிய நல்உள்ளங்கள் திருமிகு ப.சின்னக்கண்ணு, பெ.குபேந்திரன் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என் ஆய்விற்கு வேண்டிய நூல்களை வழங்கிய திருவாடானை அரசுகலை மற்றும் அறிவியல் கல்லூரியின் தமிழ்த்துறை நூலகத்திற்கும், கல்லூரியின் பொது நூலகத்திற்கும், அழகப்பா பல்கலைக்கழக பொது நூலகத்திற்கும், பாரதிதாசன் பல்கலைக்கழக நூலகத்திற்கும் என் நன்றிகள்.

நான் நன்னிலை பெற்றுயர நாளும் உதவும் என் கணவர் பி.திருநாவுக்கரசு அவர்களுக்கும், என் மகன்கள் பி.தி.வெங்கடேசன், பி.தி.ஹரிஹரசுதன் ஆகியோருக்கும் என் தாய் தந்தையருக்கும் மற்றும் என் குடும்பத்தினர், நண்பர்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நேரிய முறையில் கணினி அச்சு புரிந்த திருமதிப. விஜி அவர்களுக்கும் என் நன்றிகள்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கங்கள்

| | | |
|---|---|---|
| உ.ஆ | - | உரையாசிரியர் |
| குறள் | - | திருக்குறள் |
| ப | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| பா | - | பாடல் |
| பா | – | பாகம் |
| நூ | - | நூற்பா |
| தொ | - | தொகுதி |
| தொல் | - | தொல்காப்பியம் |
| மேலது | - | மேற்கூறிய நூல் |

# முன்னுரை

தமிழ் இலக்கண மரபு என்பது தொடர்ந்து பின்பற்றப்பெற்று வரும் பெருமை உடையது ஆகும். தொல்காப்பியம் தொடங்கி இன்றுவரை இலக்கண மரபுகளைத் தமிழ் இலக்கியங்கள் பெரிதும் பேணிக் காத்து வருகின்றன. இதனால் தமிழுக்கெனத் தனித்த இலக்கண இலக்கிய மரபுகள் அமைந்து தனித்துவமான மொழியாக அது வளர்ந்து வருகிறது. இவ்வணியிலக்கண மரபினைத் தற்காலத் திரையிசைப் பாடல்களும் பின்பற்றி நிற்கின்றன. தொல்காப்பியம், தண்டியலங்காரம் போன்ற இலக்கண நூல்கள் காட்டிய அணி இலக்கண மரபுகளை இற்றைக்காலப் புலவர்களும் எடுத்துக் கொண்டு அதனைக் கையாள்வதும் தமிழ் இலக்கண மரபின் தொடர்ச்சி ஆகும்.

அணி இலக்கணம் அணிகள் பற்றிய தெளிவான வரையறையைத் தருகின்றது. இம்மரபுகளை முழுவதும் அறிந்து கொள்ளதக்க எடுத்துக்காட்டுகளும் வழங்கப்பெற்றுள்ளன. இவ்வெடுத்துக்காட்டுகள் தற்கால சூழலில் புரிந்து கொள்ளுதலில் சில தடைபாடுகளை ஏற்படுத்தும் எனும் நிலையில், எடுத்துக்காட்டிற்குத் தற்கால மக்களின் இலக்கியமாக விளங்குகிற திரையிசைப்பாடல்களைச் சான்றுகளாக காட்ட இயலும் என்று இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது. இவ்வாய்வின் வழியாகத் தண்டியலங்காரம் காட்டும் அணி இலக்கண மரபுகளைத் தற்கால திரையிசைப்பாடல்கள் கொண்டு விளங்கிக் கொள்வதன்வழி சிறந்த புரிதல் ஏற்படும் என்பதில் ஐயமில்லை. இதனை நோக்கியே இவ்வாய்வு செய்ய முனையப்பெற்றது.

**ஆய்வுத்தலைப்பு**

**“தண்டியலங்கார நோக்கில் திரையிசைப்பாடல்கள்”** என்பது இவ்வாய்வின் தலைப்பாகும்.தண்டியலங்காரம் என்ற நூலில் வழங்கப்பெற்றுள்ள அணி இலக்கண மரபுகளைத் திரையிசைப்பாடல்களுடன் பொருத்திப் பார்த்து ஆராய்வதாக இத்தலைப்பு தரப்பெற்றுள்ளது.

**ஆய்வின் நோக்கம்**

தண்டியலங்கார அணி மரபுகளைத் திரையிசைப்பாடல்களுடன் பொருத்திப் பார்த்து தண்டியலங்கார அணி மரபுகளைப் புரிந்து கொள்ளச் செய்வதும், அணி

இலக்கணத்தைத் தற்கால நிலையில் தமிழ் பயில்வோர் அறிந்து கொள்ளத்தக்க நிலையில் வெளிப்படுத்துவதும், திரையிசைப் பாடலாசிரியர்களின் அணி இலக்கணப் பயன்பாட்டு அளவினை ஆராய்வதும் இவ்வாய்வின் நோக்கங்களாக அமைகின்றன.

**ஆய்வின் எல்லை**

இவ்வாய்வின் எல்லையாகத் தண்டியலங்கார நூலில் உள்ள பொருள் அணியியல் பகுதி எடுத்துக்கொள்ளப்பெறுகின்றது. இது இலக்கண வரையறைக்கு உட்பட்ட ஆய்வு எல்லையாகும். அதாவது இலக்கியத்தில் சான்று காட்டும் நிலையில் **கண்ணதாசன், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், வாலி,வைரமுத்து, பா.விஜய்** போன்ற திரையிசைப் பாடலாசிரியர்கள் எழுதிய திரையிசைப்பாடல்களின் தொகுப்புகள் ஆய்வு எல்லைகளாக அமைகின்றன. அவ்வகையில் பின்வரும் தொகுப்புகள்,

1. கவிஞர் கண்ணதாசனின் திரையிசைப்பாடல்கள், முதல் தொகுதி
2. கவிஞர் கண்ணதாசனின் திரையிசைப்பாடல்கள் இரண்டாம் தொகுதி
3. கவிஞர் கண்ணதாசனின் திரையிசைப்பாடல்கள், மூன்றாம் தொகுதி,
4. கவிஞர் கண்ணதாசனின் திரையிசைப்பாடல்கள், ஐந்தாம் தொகுதி,
5. பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடல்கள்,
6. வாலி, ஆயிரம் திரையிசைப் பாடல்கள் இரண்டாம் தொகுதி
7. வைரமுத்து, ஆயிரம் பாடல்கள்
8. பா. விஜய் பாடல்கள் பாகம் -1
9. பா. விஜய் பாடல்கள் பாகம் -2

ஆகிய ஒன்பது தொகுதிகள் இவ்வாய்வின் எல்லைகளாக அமைகின்றன. இத்தொகுப்புகள் ஆய்வாளருக்குக் கிடைத்த நிலையிலும், முனைவர் பட்ட ஆய்வேட்டிற்கு பக்க எல்லைகள் இவ்வளவு போதுமானது என்பதாலும் மேற்காண் தொகுப்புகள் மட்டும் இங்கு எல்லையாகக் கொள்ளப்பெற்றன.

**ஆய்வு அணுகுமுறை**

இவ்வாய்வு இலக்கண நெறிகாட்டல், இலக்கணத்திற்கு உரிய இலக்கியம் காட்டல் என்ற அணுகுமுறையில் அமைந்துள்ளது. அக்காலத்தில் எழுதப்பட்ட தண்டியலங்காரத்தோடு பிற்காலச் திரையிசைப் பாடல்களை ஒப்பீடு செய்து

விளக்குவதால் ஒப்பீட்டுமுறை அணுகுமுறையும்,அணிநயங்களைத் திரையிசைப் பாடல்களில் கவிஞர்கள் முருகியல் தன்மையோடு எடுத்தாண்டுள்ளதை ஆய்வில் சுட்டிக்காட்டியுள்ளதால் அழகியல் அணுகுமுறையும் இவ்வாய்வுக்குரிய அணுகுமுறைகளாக அமைகின்றன.

**ஆய்வின் கருதுகோள்**

அணி இலக்கண மரபுகளை அறிந்து அவற்றைப் பின்பற்றித் தற்காலத் திரையிசைப் பாடலாசிரியர்கள் பாடல்களைப் படைத்துள்ளனர் என்ற கருதுகோளை முன்வைத்து இவ்வாய்வு நிகழ்த்தப்படுகிறது.

**முன்னாய்வுகள்**

ஆய்வு எல்லையில் தரப்பெற்றுள்ள ஐந்து கவிஞர்களின் திரையிசைப்பாடல்களில் அணி இலக்கணம் பற்றிய முன்ஆய்வுகள் ஏதும் இல்லை. எனினும் மலேசியாவில் இருந்து வெளிவரும் தமிழ்ப்பேராய்வு ஆய்விதழில் இரண்டாயிரத்து பதினெட்டாம் ஆண்டில் பிரேமா நந்தினி என்பவர் எழுதியுள்ள கண்ணதாசன் பாடல்களில் அணி இலக்கணம் என்ற கட்டுரை முன் ஆய்வாகக் கொள்ளப் பெறுகிறது. கண்ணதாசன் திரையிசைப்பாடல்களில் இலக்கிய நயம் என்ற ஆய்வேட்டில் அணிநலன் என்ற மூன்றாவது இயல் முன்னோடி ஆய்வாகக் கொள்ளத்தக்கது. மேலும் வைரமுத்து திரையிசைப்பாடல்கள் பற்றிய ஆய்விலும் அணி பற்றிய ஆய்வுகள் அமைந்துள்ளன. இவை முன்னாய்வுகளாகக் கொள்ளத்தக்க.

**இயல்பாகுபாடு**

**“தண்டியலங்கார நோக்கில் திரையிசைப்பாடல்கள்”**என்னும் தலைப்பிலான இவ்வாய்வு முன்னுரை,முடிவுரை நீங்களாக நான்கு இயல்களாக பகுக்கப்பெற்றுள்ளன.

அவை

1.தண்டியலங்கார அணி மரபுகள்

2.திரையிசைப்பாடல்களில் உவமை அணி

3.திரையிசைப்பாடல்களில் தன்மையணி,பின்வருநிலையணி,சுவையணி

4.திரையிசைப்பாடல்களில் பிற அணிகள்

என்பனவாகும். அவை பற்றிய விளக்கங்கள் பின்வருமாறு.

**இயல் .1. தண்டியலங்கார அணி மரபுகள்**

தண்டியால் எழுதப் பெற்ற தண்டியலங்காரம் என்ற அணி இலக்கண நூலில் பொதுவணியியலில் காட்டப்பெற்றுள்ள முப்பத்தைந்து அணிகள் பற்றிய விளக்கங்கள், அவற்றின் வகைகள் மேலும் அவ்வணிவகைகளுக்குக் காட்டப்பெற்ற பழைய பாடல்கள் போன்றன எடுத்துரைக்கப்பெற்று அணிகள் பற்றிய அடிப்படை செய்திகள் தரப்பெறுகின்றன.

**இயல்.2. திரையிசைப் பாடல்களில் உவமை அணி**

இரண்டாம் இயலில் உவமை அணி பற்றிய விளக்கங்களும், அதன் வகைகள் இருபத்து நான்கு குறித்த விளக்கங்களும், அவற்றிற்கு தற்காலத் திரையிசைப் பாடலாசிரியர்கள் பொருத்தமாக எழுதியுள்ள திரையிசைப்பாடல்களும் பொருத்தி உரைக்கப் பெற்றுள்ளன. தொல்காப்பியத்தில் காணப்படும் அணி உவமை என்பதால் இங்கு இவ்வியல் முன்வைக்கப்பட்டுள்ளது.

**இயல். 3. திரையிசைப் பாடல்களில் தன்மையணி,பின்வருநிலையணி,சுவையணி**

மூன்றாம் இயலில் தன்மையணி,பின்வருநிலையணி,சுவையணி ஆகிய அணிகள் குறித்தும் அவற்றின் வகைகள் குறித்தும், அவ்வகைகளுக்குத் தற்காலத் திரையிசைப் பாடலாசிரியர்கள் எழுதியுள்ள பாடல்கள் குறித்தும் எடுத்துரைக்கப் பெறுகின்றன.

**இயல். 4. திரையிசைப் பாடல்களில் பிற அணிகள்**

நான்காம் இயலான திரையிசைப் பாடல்களில் பிற அணிகள் என்ற இயலில், தன்மையணி,உவமையணி,பின்வருநிலையணி,சுவையணி ஆகிய அணிகள் தவிர பிற அணிகள் குறித்தும், அவ்வணிகளுக்குத் தற்காலத்

திரையிசைப் பாடலாசிரியர்கள் எழுதியுள்ள பாடல்கள் குறித்தும் எடுத்துரைக்கப் பெறுகின்றன.

இவ்வியல்கள் வழியாகப் பெறப்பட்ட முடிவுகள் தொகுப்புரையாக நிறைவில் தொகுத்துரைக்கப்பெறுகின்றன.

ஆய்விற்கு உதவிய நூல்களின் பட்டியல் துணைநூற்பட்டியலாகத் தரப்பெற்றுள்ளது. உரிய வரைபடங்கள் பின்னிணைப்பாகத் தரப்பெற்றுள்ளன.

## பொருளடக்கம்

## இயல். 1

## தண்டியலங்கார அணி மரபுகள்

தமிழில் இலக்கிய நூல்களும், இலக்கண நூல்களும் பரந்துபட்டு காணப்படுகின்றன. தமிழில் இலக்கிய வரலாறு நீண்ட நெடிய பரப்பளவு உடையதைப் போலவே இலக்கண வரலாறும் நீண்ட நெடிய பரப்பினை உடையது. தொல்காப்பியம் தொடங்கி இன்றைக்கு ஒலியனியல் நூல்கள் வரை ஏராளமாக இலக்கண நூல்கள் படைக்கப் பெற்று வருகின்றன.

தமிழ் இலக்கணம் தொல்காப்பியர் காலத்தில் எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று வகைப்பாட்டினைக் கொண்டிருந்தது. தொல்காப்பியர் காலத்திற்கு பின்பு தோன்றிய இலக்கண ஆசிரியர்கள் தொல்காப்பியம் காட்டிய மூவிலக்கணத்திற்குள் ஐந்து இலக்கணம் கண்டு அதனை வளர்த்தனர். தமிழ்மொழியை ஐந்து இலக்கண வகையாக வளர்ச்சி பெறச் செய்தனர். எழுத்து, சொல், பொருளோடு தொல்காப்பியச் செய்யுளியியல், உவமையியல் ஆகியனவற்றை அடிப்படையாகக் கொண்டு "யாப்பு, அணி" என்பதையும் இணைத்து ஐந்திலக்கணமாக வளர்த்தனர். தண்டபாணி சுவாமிகள் புலமை இலக்கணம் என்பதை இணைத்து அறுவகை இலக்கணமாக்கினார். இவரே ஏழாம் இலக்கணம் என்ற அடிப்படையில் துறவினையும் இணைத்து ஏழாம் இலக்கணம் என்ற நூல் படைத்துள்ளார். இதன்பிறகு பாட்டியல் நூல்கள் எழுந்தன. இவற்றோடு நிகண்டுகளும் தமிழ் இலக்கண மரபைச் செழுமைப்படுத்தின.

தமிழ் இலக்கண நூல்கள் பலவாகப் பெருகியுள்ளன. இறையனார் அகப்பொருள், தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை,அவிநயம், காக்கை பாடினியம், சங்க யாப்பு,சிறுகாக்கை பாடினியம், நற்றத்தம், பல்காயம், பன்னிரு படலம், மயேச்சுவரம், இந்திரகாளியம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை, அமுதசாகரம், வீரசோழியம், தமிழ்நெறி விளக்கம், நேமிநாதம், சின்னூல், வெண்பாப் பாட்டியல், தண்டியலங்காரம், அகப்பொருள் விளக்கம், நன்னூல், நம்பி அகப்பொருள், களவியற் காரிகை, பன்னிரு பாட்டியல், நவநீதப் பாட்டியல், வரையறுத்த பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், மாறனலங்காரம், மாறன் அகப்பொருள்,பாப்பாவினம், பிரபந்த மரபியல், சிதம்பரச் செய்யுட்கோவை, பிரயோக விவேகம், இலக்கண விளக்கம், இலக்கண விளக்கச்

சூறாவளி,இலக்கண கொத்து, தொன்னூல் விளக்கம்,பிரபந்த தீபிகை, பிரபந்த தீபம், பிரபந்தத் திரட்டு, இரத்தினச் சுருக்கம், உவமான சங்கிரகம், முத்து வீரியம், சாமிநாதம், குவலயானந்தம்,அறுவகை இலக்கணம், ஏழாம் இலக்கணம், வண்ணத்தியல்பு, பொருத்த விளக்கம், யாப்பொளி, திருவலங்கல் திரட்டு, காக்கைபாடினியம், இலக்கண தீபம், விருத்தப் பாவியல், வச்சனந்திமாலை போன்ற பல நூல்கள் தமிழ் இலக்கண நூல்களாகப் படைக்கப்பெற்றுள்ளன.

தமிழ் இலக்கண மரபில் ஐந்திலக்கணங்களையும் விளக்கும் நூல்களும் உள்ளன. ஏதேனும் ஒரு அணியை விளக்கி நிற்கும் நூல்களும் உள்ளன. அவ்வகையில் அணி இலக்கணத்திற்கு மட்டும் தனிநூலாக விளங்குவது தண்டியலங்காரமாகும்.

**அணி இலக்கண வளர்ச்சி**

தொல்காப்பியம் பொருளதிகாரத்தில் உவமை அணியை மட்டும் விளக்கும் நிலையில் உவமயியல் என்ற தனி இயலைப் பெற்றுள்ளது. இதுவே தமிழ் அணியிலக்கண மரபின் தொடக்கம் ஆகும். இதன் பின் பதினோராம் நூற்றாண்டில் எழுந்த வீரசோழியம் என்ற ஐந்திலக்கண நூல் அணிகள் பற்றிய செய்திகளைத் தருகின்றது. இந்நூலில், முப்பத்தைந்து பொருளணிகளும், இரண்டு சொல்லணிகளும் விளக்கப்பெற்றுள்ளன.

இதனை அடுத்துத் தோன்றியது தண்டியலங்காரம். இந்நூல் அணி இலக்கண மரபில் திருந்திய நிலைப்பாடு உடையது. பொருளணிகள், சொல்லணிகள் இவை என வரையறுத்துச் செய்யப்பெற்றுள்ளது.

இதனைத் தொடர்ந்து திவாகர நிகண்டில் பல்பொருள் கூட்டத்து ஒருபெயர்த் தொகுதியில் இருபத்தெட்டு பொருளணிகளும் இருபத்தோரு சொல்லணிகளும் சுட்டப் பட்டுள்ளன.

மாறனலங்காரம் என்ற நூல் திருக்குருகைப் பெருமாள் கவிராயரால்இயற்றப்பட்டது. இதனுள் அறுபத்துநான்கு பொருள் அணிகளும், இரண்டு சொல்லணிகளும் காட்டப்பெற்றுள்ளன. இதனைத் தொடர்ந்து இலக்கண விளக்கம் என்ற நூல் திருவாரூர் வைத்தியநாத தேசிகரால்

இயற்றப்பட்டது.இதனுள் முப்பத்தைந்து பொருளணிகளும், இரண்டு சொல்லணிகளும் காட்டப்பெற்றுள்ளன.

வீரமாமுனிவர் இயற்றிய தொன்னூல் விளக்க நூலில் முப்பதுபொருளணிகளும், முப்பது சொல்லணிகளும் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன.

இதனைத் தொடர்ந்து முத்துவீரியம் என்ற நூல் முத்துவீர உபாத்தியாயரால் ஐம்பத்தெட்டு பொருளணிகளும், பதினான்கு சொல்லணிகளும் அமைத்துச் செய்யப் பெற்றுள்ளது.

சந்திராலோகம் என்ற நூல் திருத்தணிகை விசாகப் பெருமாள் ஐயர் என்பவரால் எழுதப்பெற்றுள்ளது. இதில் நூறு பொருள் அணிகளும், இரண்டு சொல்லணிகளும் உள்ளன.

குவலயானந்தம் என்ற பெயரில் இரு நூல்கள் கிடைக்கின்றன. ஒன்று மாணிக்கவாசகரால் எழுதப்பெற்றுள்ளது. மற்றொன்று அப்பைய தீட்சிதரால் இயற்றப்பெற்றுள்ளது. முன்னது முழுவதும் கிடைக்காத நிலையில் பின்னது நூற்று இருபது பொருள் அணிகளைக் கொண்டு விளங்குகிறது.

குவலயானந்தத்தை அடுத்து சுவாமிநாதம் என்ற நூல் முப்பத்தொரு பொருள் அணிகளையும், இருபத்து மூன்று சொல்லணிகளையும் காட்டுகிறது. தண்டபாணி சுவாமிகள் இயற்றிய அறுவகை இலக்கணம் என்ற நூல் உவமை, உடைமை, கற்பனை, நிகழ்ச்சி, ஆக்கம் ஆகிய ஐந்துநிலைகளில் அணி இலக்கண மரபுகளைத் தருகின்றது.

இந்நூலினைத் தொடர்ந்து பின்னங்குடி சா. சுப்பிரமணிய சாத்திரியார் என்பவர் தொனிவிளக்கு என்ற நூலைத் தந்துள்ளார். இதிலும் அணி இலக்கண மரபுகள் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன.

இவ்வகையில் தொடர்ந்து அணி இலக்கண மரபுகள் குறித்த முயற்சிகள் தமிழ் இலக்கண உலகில் நடைபெற்று வந்துள்ளன. இவற்றில் குறிக்கத்தக்க நூல் தண்டியலங்காரம் ஆகும். இந்நூலானது தற்பொழுது அணி இலக்கணம் பற்றி அறிவோர்க்கு உரிய நூலாகவும் விளங்குகிறது.

**தண்டியலங்காரம்**

தண்டியலங்காரம் என்ற நூல் காவியதர்சம் என்ற வடமொழி நூலின் மொழிபெயர்ப்பாகும்."இந்நூல் தொகுத்தல் முதலிய நால்வகையுள் மொழி பெயர்ப்பு வகையைச் சார்ந்தது. இதன் முதனூல் காவியதர்சம் என்பதாகும். இதன் ஆசிரியர் தண்டி என்பவராவர். இவர் இராசசிம்ம பல்லவன் (கி.பி. 666-705) காலத்தவர்."[1]என்கிறார் கு.சுந்தரமூர்த்தி

இவரைப் பற்றியக் குறிப்புகள் சிறப்புப் பாயிரம் வழங்குகிறது. இதனை,

"வடதிசை யிருந்து தென்மலைக் கேகி
மதிதவழ் குடுமிப் பொதிய மால்வரை
இருந்தவன் தன்பால் அருந்தமிழ் உணர்ந்த
பன்னிரு புலவரின் முன்னவன் பகர்ந்த
தொல்காப் பியநெறி பல்காப் பியத்தும்
அணிபெறு மிலக்கணம் அரிதினில் தெரிந்து
வடநூல் வழிமுறை மரபினின் வழா அது
ஈரிரன் டெல்லையின் இகவா மும்மைப்
பாரத விலக்கணம் பண்புறத் தழீஇத்
திருந்திய மணிமுடிச் செம்பியன் அவையத்து
அரும்பொருள் யாப்பி னமைவுற வகுத்தனன்
ஆடக மன்றத்து நாடக நவிற்றும்
வடநூ லுணர்ந்த தமிழ்நூற் புலவன்
பூவிரி தண்பொழிற் காவிரி நாட்டு
வம்பவிழ் தெரியல் அம்பி காபதி
மேவருந் தவத்தினிற் பயந்த
தாவருஞ் சீர்த்தித் தண்டியென் பவனே."[2]

என விளக்கும் இச்சிறப்புப் பாயிரம் தண்டியாசிரியரின் கவியாற்றல் கருதி இவரை அம்பிகாவதியின் புதல்வர் என்று குறிக்கிறது.

இச்சிறப்புப்பாயிரத்தில் தண்டியலங்காரத்தை எழுதியவர் பெயர் தண்டி என்பது தெரிய வருகிறது. இவர் தொல்காப்பிய நெறியும் வடமொழி அணி இலக்கண நெறியும் தண்டி ஆசிரியரால் பின்பற்றப்பெற்றுள்ளது என்று குறிக்கப்பெற்றுள்ளது. இந்நூல் ஆசிரியர் வடமொழி அறிந்த தமிழ் நூற்புலவன் என்றும் குறிக்கப்பெற்றுள்ளது. இதன்வழி தண்டியலங்காரம் மொழி பெயர்ப்பு நூல் என்பது பெறப்படுகிறது. மேலும் இந்நூலானது சோழன் அவையில் அரங்கேற்றப்பட்டது என்பதும் தெரியவருகிறது.

இத்தண்டி ஆசிரியர் பற்றி பல தகவல்கள் உறுதிப் படுத்தப்படாத நிலையில் காணக் கிடைக்கின்றன. இவர் "காவியதர்சம் என்ற நூலை எழுதிய தண்டியை ஒத்துத் தமிழில் பாடியதால் இவரின் இயற்பெயர் மறைந்து தண்டி என்ற பெயர் நிலைத்தது என்றும், இவரே வடமொழியில் காவியதர்சம் எழுதியவர்"[3] என்றும் பல செய்திகள் இலக்கண உலகில் உள்ளன.

தண்டி என்பவர் தண்டியலங்காரம் என்ற நூலின் வழி அணி இலக்கண நூற்பாக்களைப் படைத்து, அவற்றிற்கான உதாரணச் செய்யுள்களையும் இயற்றியவர் என்று பிரயோக விவேகம் என்ற நூல் குறிக்கிறது. இதன் காரணமாக இவர் இலக்கணப் புலமையும், இலக்கியப் படைப்பு ஆற்றல் திறமையும் உடையவராக இருந்தார் என்பது தெரியவருகிறது. இந்நூல் காட்டும் பெருங்காப்பியப் பண்புகள் இவரின் ஆய்வுத் திறனையும் வெளிப்படுத்துவனவாக உள்ளன. எனவே இவர் பல நூற்கள் கற்றுத் தேர்ந்த ஆய்வுக் கண்ணோட்டம் உள்ளவர் என்பதும் குறிக்கத்தக்கது.

**தண்டியலங்காரம் நூல் அமைப்புமுறை**

தண்டியலங்காரமானது பொதுவணியியல்,பொருளணியியல்,சொல்லணியியல் என மூன்று பிரிவுகளைக் கொண்டுள்ளது. இவற்றில் பொதுவணியியல் என்பது பொதுவான செய்யுள் அணி மரபுகளையும், பொருள் அணியியல் என்பது செய்யுள்களில் பொருள் நலம் சிறக்கும் வண்ணம் செய்யப்படும் அணி வகைகள் பற்றியும், சொல்லணியியல் என்பது செய்யுள்களில் சொற்கள் சிறக்கும் வண்ணம்

செய்யப்படும் அணிவகைகள் பற்றியும் எடுத்துரைப்பனவாக உள்ளன. இவை ஒவ்வொன்றும் பல பிரிவுகளை உடையன.

**பொதுவணியியல்**

பொதுவணியியல் செய்யுள் வகை, செய்யுள் நெறி பற்றிய தகவல்களைத் தருகின்றது. முத்தகச் செய்யுள், குளகச் செய்யுள், தொகைநிலைச் செய்யுள், தொடர்நிலைச் செய்யுள் என்னும் நான்கு வகையான செய்யுள்கள் பற்றி விளக்குகிறது. தொடர்நிலைச் செய்யுள் வகை பற்றிக் கூறும் போது அதன் வகைகளான பெருங்காப்பியம், சிறுங்காப்பியம் என்பவற்றின் இலக்கணங்கள் பற்றி இந்நூல் விளக்குகின்றது.

**பொருளணிகள்**

செய்யுள்களில் பொருள் சிறக்கச் செய்யும் முப்பத்தைந்து அணிகள் பற்றிய இலக்கணமுறைமையைப் பொருளணியியல் தருகின்றது. இதனை,

> "தன்மை யுவமை யுருவகந் தீவகம்
> பின்வரு நிலையே முன்ன விலக்கே
> வேற்றுப் பொருள்வைப்பே வேற்றுமை விபாவனை
> ஒட்டே யதிசயந் தற்குறிப் பேற்றம்
> ஏது நுட்ப மிலேச நிரனிறை
> ஆர்வ மொழிசுவை தன்மேம் பாட்டுரை
> பரியா யம்மே சமாயித முதாத்தம்
> அரிதுண ரவநுதி சிலேடை விசேடம்
> ஒப்புமைக் கூட்ட மெய்ப்படு விரோதம்
> மாறுபடு புகழ்நிலை புகழாப் புகழ்ச்சி
> நிதரிசனம் புணர்நிலை பரிவருத் தனையே
> வாழ்த்தொடு சங்கீ ரணம்பா விகமிவை
> ஏற்ற செய்யுட் கணியே ழைந்தே."[4]

என்னும் நூற்பாவழி அறியமுடிகின்றது. அவை, தன்மை, உவமை, உருவகம், தீவகம், பின்வருநிலை, முன்னவிலக்கு, வேற்றுப்பொருள்வைப்பு, வேற்றுமை, விபாவனை, ஒட்டு, அதிசயம், தற்குறிப்பேற்றம், ஏது, நுட்பம், இலேசம், நிரல்நிலை, ஆர்வமொழி, சுவை, தன்மேம்பாட்டுரை, பரியாயம், சமாயிதம், உதாத்தம், அவநுதி, சிலேடை, விசேடம், ஒப்புமைக் கூட்டம், விரோதம், மாறுபடு புகழ்நிலை, புகழாப் புகழ்ச்சி, நிதரிசனம், புணர்நிலை, பரிவருத்தனை, வாழ்த்து, சங்கீரணம், பாவிகம் போன்ற அணிகளைக் கொண்டவையாகும்.

இவ்வொவ்வொரு அணியும் பல்வகைப்பாடுகளை உடையது. அவற்றிற்கு நூற்பாக்களைச் செய்து, எடுத்துக்காட்டுப் பாடல்களையும் தண்டி ஆசிரியர் எழுதியுள்ளார். இவற்றோடு ஒரு அணி மற்ற பிற அணிகளுடன் இணைந்து விளங்கும் முறைமைகளையும் இப்பகுதிக் கொண்டுள்ளது. பொருளணியியல் என்பது இலக்கணம் காட்டல், வகைமை செய்தல், எடுத்துக்காட்டு உரைத்தல், ஒப்பீடு செய்தல் என்ற பல்வேறு நிலைப்பாடுகளுடன் செய்யப்பெற்றுள்ளது.

**சொல்லணியியல்**

சொல்லணியியல் பகுதியில் மடக்கு, சித்திரகவி ஆகிய இரண்டு சொல்லணிகள் பற்றியும் அவற்றின் வகைகள் பற்றியும் கூறப்பெற்றுள்ளன. இதனோடு செய்யுளில் தோன்றும் அணி சார்ந்த வழுக்களின் வகைகள் பற்றியும் எடுத்தாளப்பெற்றுள்ளது.இவ்வாறு முழுமையான அணி இலக்கண மரபுகளைச் சொல்லும் நூலாக தண்டியலங்காரம் விளங்குகின்றது.

**தண்டியலங்கார உரைகள்**

தண்டியலங்காரத்திற்குப் பலரும் உரை வகுத்துள்ளனர்.தண்டியலங்காரத்திற்குப் பழைய உரை ஒன்று சுப்பிரமணிய தேசிகரால் இயற்றப்பெற்றுள்ளது. மேலும் வை.மு. சடகோப ராமாநுஜாச்சாரியார் (கி.பி. 1901), இராமலிங்கத் தம்பிரான் (கி.பி.1938), சி.செகந்நாதாச்சாரியார் (சொல்லணிகளுக்கு மட்டும்) (கி.பி. 1962), கு. சுந்தரமூர்த்தி (கி.பி. 1967), புலியூர்க் கேசிகன்(கி.பி. 1989), வ.த.இராம சுப்பிரமணியம் (கி.பி. 1998) ஆகியோர் உரை வரைந்துள்ளனர்.

இவ்வாறு தண்டியலங்காரம் அணி இலக்கண நூல்களில் பெரிதும் பயன்படுவதாகவும், பற்பல இலக்கண நிலைப்பாடுகள் உள்ளதாகவும் விளங்குகிறது. தற்காலத்தில் தமிழ்ப்பாடத்தில் கட்டாயம் கற்க வேண்டிய நிலைப்பாட்டில் உள்ளது. மேலும் தற்காலக் கவிஞர்கள் பலரும் இந்நூல் சுட்டிய அணிமரபுகளைப் பயன்படுத்திப் பாடல்கள் புனைகின்றனர். இதன் காரணமாக தண்டியலங்காரம் மிக முக்கியமான இடத்தைப் படைப்பாளர்கள் மத்தியில் பெற்றுள்ளது. இவ்வாய்வானது பொருளணியியல் சார்ந்த அணிகள் திரையிசைப் பாடல்களில் காட்டப்பெற்றுள்ள நிலையை ஆராய முற்படுவதால் பொருளணியியல் பற்றிய பொதுச் செய்திகள் விளக்கப்படுகின்றன.

**தண்டியலங்காரம் காட்டும் பொருளணி மரபுகள்**

தண்டியலங்காரப் பொருளணியியலில் முப்பத்தைந்து அணிகளின் மரபுகளும், அவற்றின் வகைகளும் காட்டப்பெற்றுள்ளன. இவற்றை அறிந்து கொள்வதன் வாயிலாகத் தற்கால திரையிசைப் பாடல்களின் படைப்பாளர்கள் பயன்படுத்தியுள்ள அணிமுறைமைகளைச் முழுமையாக அறிந்து கொள்ள இயலும் என்பதால் இவ்வணிகள் பற்றியத் தரவுகள் இங்கு தரப்படுகின்றன.

**தன்மையணி**

தண்டியலங்காரம் காட்டும் பொருளணியியலின் முதல் அணி தன்மையணி. ஒரு பொருளை அதன் இயல்புகளை விளக்குவதாக இருந்தாலும் அதன் இயல்பான நிலையில் அதற்குரிய சொற்களால் உரைப்பது தன்மை என்னும் அலங்காரமாகும். இதனை,

“எவ்வகைப் பொருளு மெய்வகை விளக்கும்

சொன்முறை தொடுப்பது தன்மை ஆகும்”[5]

என்ற நூற்பா சுட்டும் இத்தன்மை அணியானது பொருள், குணம், சாதி, தொழில் என நான்கு வகையின் பாற்படும்.

**பொருள் தன்மையணி**

‘நீல மணிமிடற்றன் நீண்ட சடைமுடியன்

நூலணிந்த மார்பன் நுதல் விழியன்- தோலுடையன்' (சு.தே.த.ப.35)

என்ற பாடல் பொருள் தன்மை அணி சார்ந்ததாகும். நீல மணி மிடற்றன், நீண்ட சடைமுடியன், நூலணிந்த மார்பன், நுதல் விழியன், தோலுடையன் என இறைவனோடு பொருளின் தன்மைகள் உள்ளது உள்ளபடி உரைக்கப்பட்டதால் இப்பாடலில் பொருள் தன்மைஅணி பயின்று வந்துள்ளது.

**குணத்தன்மையணி**

'உள்ளம் குளிர உரோமம் சிலிர்த்து உரையும்

தள்ளவழி நீரரும்பத் தன்மறந்தான் புள்ளலைக்கும்

தேந்தா மரவயல்சூழ் தில்லைத் திருநடஞ்செய்

பூந்தா மரதொழுத பொன்' (சு.தே.த.ப.36)

இப்பாடலடிகளில் தில்லைக் கூத்தனைத் தொழுதலால் உண்டாகும் பெருமகிழ்ச்சியின் தன்மை எடுத்துரைக்கப்பெற்றுள்ளது. இதில் தன்னை மறந்தான் என்பது குணம் கூறியது. உள்ளம் குளிர்தல் முதலாயின குணத்துடன் நிகழும் அதன் தன்மைகள் இவற்றை கூறுவதால் இது குணத்தன்மையணி ஆகும்.

**சாதித் தன்மையணி**

'பத்தித் தகட்ட கறைமிடற்ற பைவிரியும்

துத்திக் கவைநாத் துளையெயிற்ற – மெய்தவத்தோர்

ஆகத்தான் அம்பலத்தான் ஆரா வமுதணங்கின்

பாகத்தான் சாத்தும் பணி' (சு.தே.த.ப.36)

என்ற பாடலில் இது சாதித் தன்மை அணி பயின்று வந்த பாடல் ஆகின்றது.

**தொழில் தன்மையணி**

'சூழ்ந்த முரன்றணவி வாசந் துதைந்தாடித்

தாழ்ந்து மதுநுகர்ந்து தாதருந்தும் - வீழ்ந்தபெரும்

பாசத்தார் நீங்காப் பரஞ்சுடரின் பைங்கொன்றை

வாசத்தார் நீங்காத வண்டு' (சு.தே.த.ப.37)

என்ற பாடலடிகளில் வண்டின் செயல்களான செறிதல், பறத்தல், விரும்புதல், உண்டல், கோதுதல் போன்றவற்றை கூறுவதால் இது தொழில் தன்மையணி ஆகும்.

**உவமை அணி**

கவிஞன் உள்ளத்து நிகழ்வுகளை உள்ளத்தில் எழுந்தவாறு உலகிற்கு உணர்த்த உதவுவன உவமைகள் எனலாம். உவமையே அணிகளின் தாயாகும். தொல்காப்பியரும் உவமை பற்றி பல கருத்துகளைக் காட்டியுள்ளார். உள்ளுறை உவமம், ஏனை உவமம் என்று இருபிரிவுகள் தொல்காப்பியரால் சுட்டப்பெற்றுள்ளன. உவமையானது,

"வினை பயன் மெய் உரு என்ற நான்கே

வகை பெற வந்த உவமத் தோற்றம்"[6]

என்ற அடிப்படைகளில் அமையும் என்கிறார் தொல்காப்பியர்.

"உவம மாவது ஒப்புமை அளவை கவய மாவாப் போலுமெனக் கருதல்"[7] என்று மணிமேகலை கூறுவதினையும்,"எவ்வகைச் செய்தியும் உவமம் காட்டி நுண்ணிதின் உணர்ந்த நுழைந்த நோக்கிற் கண்ணுள் வினைஞர்"[8] என்று மதுரைக் காஞ்சியும் 'உவமம்' என்பது ஒப்புமைக்காட்டி விளக்குவதும் உவமைகளானது வினை, பயன், மெய், உரு ஆகியவற்றின் அடிப்படையில் தோன்றும் என்பது புலனாகின்றது.

இதனைத் தண்டியலங்காரம் பெரிதும் விரித்து வகைமை செய்து விளக்கியுள்ளது. என்பதை,

"விரியே தொகையே யிதர விதரம்

உரைபெறு சமுச்சய முண்மை மறுபொருள்

புகழ்ந்த னிந்தை நியம மநியமம்

ஐயந் தெரிதரு தேற்ற மின்சொல்

எய்திய விபரீத மியம்புதல் வேட்கை

பலபொருள் விகார மோக மபூதம்

பலவயிற் போலி யொருவயிற் போலி

கூடா வுவமை பொதுநீங் குவமை

மாலை யென்னும் பால தாகும்”[9]

என்ற நூற்பாவின் வழி இருபத்துநான்கு வகையான உவமை வகைகள் தண்டியலங்காரத்தால் சுட்டப்பெற்றுள்ளன. அவை, தொகை, இதரவிதரம், சமுச்சயம், உண்மை, மறுபொருள், புகழ், நித்தை, நியம, அநியம, ஐயம், தெரிதரு தேற்றம், விபரீதம், இன்சொல், இயம்புதல் வேட்கை, பல்பொருள், விகார, மோக, அபூத, பலவயிற்போலி, ஒருவயிற்போலி, கூடா, பொது நீங்கு, மாலை என்பனவாகும்.

**விரி உவமை அணி**

உவமானத்திற்கும் உவமேயத்திற்கும் இடையிலான பண்பு, தொழில், பயன்பற்றி ஒப்புமைத்தன்மை வெளிப்படையாக அமைவது விரி உவமையாகும்.

“பால்போலு மின்சொற் பவளம்போற் செந்துவர்வாய்

சேல்போற் பிறழுந் திருநெடுங்கண் - மேலாம்”[10]

என்ற பாடலடிகளில் உவமைகள் விரித்து உரைக்கப்பெற்றுள்ளன.

தலைவியானவள் பால் போன்ற இனிய சொல்லையும் பவளத்தைப் போன்ற சிவந்த வாயினையும் சேல் மீன்களைப் போலப் பிறழ்கின்ற அழகிய கண்களை உடையவள் எனத்தலைவன் கூறுகிறான். இப்பாடலில் இனிமை, செம்மை, என்ற பண்பு ஒப்புமையும் ‘பிறழ்தல்’ என்ற தொழில் ஒப்புமையும் ‘கொடை’ என்ற பயன் ஒப்புமையும் வெளிப்படையாக உள்ளதால் இவை விரிஉவமை என ஆயிற்று.

**தொகை உவமை அணி**

ஒப்புமைத் தன்மை மறைந்து வருவது தொகை உவமை ஆகும்.

"தாமரை வாண்முகத்துத் தண்டரளம் போன் முறுவல்

காமரு வேய்புரைதோட் காரிகையீர்! – தேமருவும்"[11]

இப்பாடலில் 'தாமரை போல் முகம்' என்ற உவமையில் 'செம்மை' என்ற நிறப்பண்பு மறைந்துள்ளது 'தான்தரளம் போல் முறுவல்' என்ற உவமையில் 'வெண்மை' என்ற நிறப்பண்பு மறைந்துள்ளது.'வேய் புரை தோள்' என்ற உவமையில் வடிவமாகிய பண்பும் மறைந்து வந்துள்ளது. இவ்வாறு ஒப்புமைக்குரிய பண்புகளைச் சுட்டிக் காட்டாததால் இது தொகை உவமை என அறியமுடிகிறது.

**இதர விதர உவமை அணி**

உவமேயத்தை உவமானமாகவும், உவமானத்தை உவமேயமாகவும் ஒரே பாடலில் தொடர்ச்சியாகக் கூறுவது இதர விதர உவமை ஆகும். இதர விதரம் என்ற தொடருக்கு "ஒன்றற் கொன்று" என்று பொருள் கொள்ளலாம்.

"களிக்கும் கயல்போலும் நும்கண் நும்கண் போல்

களிக்கும் கயலும் கனிவாய்த் தளிர்க்கொடியீர்"[12]

இப்பாடலில் முதலில் கயல் உவமானமாகவும் கண் உவமேயமாகவும் வந்து பின்னர், அவை முறையே உவமேயமாகவும் உவமானமாகவும் மாறி வருவதால் இதர விதர உவமை என அறியமுடிகிறது.

**சமுச்சய உவமை அணி**

உவமைப்படுத்தப்படும் பொருள் உவமையோடு ஒரு பண்பில் மட்டும் ஒப்பாகாமல் பிற பண்புகளிலும் ஒப்பாகும் எனக் கூறுவது சமுச்சய உவமை ஆகும்.

"குமரியர் தோள் அளவால் வடிவொப்பதன்றி பச்சை இளவேய் நிறத்தானும் ஒக்கும்"[13] வேய் - மூங்கில் அது வடிவால் மட்டுமன்றி நிறத்தாலும் காளிதேவியின் தோளை ஒக்கும். என வருவதால் சமுச்சய உவமை என அறியமுடிகிறது

**உண்மை உவமை அணி**

ஒரு பொருளுக்கு வேறொரு பொருளை உவமையாகக் கூறிப் பின்னர் அதனை மறுத்துப் பொருளை கூறி முடிப்பது உண்மை உவமை ஆகும்.

“தாமரை யன்று முகமேயீ தீங்கிவையும்
காமருவண் டல்ல கருநெடுங்கண்- தேமருவு
வல்லியி னல்ல னிவளென் மனம்கவரும்
அல்லி மலர்க்கோதை யாள்”[14]

இப்பாடலில் தாமரை, வண்டு, வல்லிக்கொடி ஆகியவை பெண்ணின் உறுப்பிற்கு உவமையாகக் காட்டப்பட்டன. பின்னர் அவை மறுக்கப்பட்டு முகம், கண், பெண் எனக் காட்டப்பட்டன. உண்மையை உரைப்பதால் இது உண்மை உவமையாகின்றது.

**மறுபொருள் உவமை அணி**

ஒரு பொருளுக்குப் பிறிதொரு பொருளை உவமையாகக் கூறி அப்பொருளுக்கு நிகராவதொரு பொருளைப் பின்பு காட்டி உவமிப்பது மறுபொருள் உவமை ஆகும்.

“அன்னைபோ லெவ்வுயிருந் தாங்கு மனபாயா
நின்னையா ரொப்பார் நிலவேந்தர்- அன்னதே
வாரிபுடை சூழ்ந்த வையகத்திற் கில்லையால்
சூரியனே போலுஞ் சுடர்”[15]

இப்பாடலில் தாய்க்கு இணையாக முன்னர் வைக்கப்பட்ட பொருள் அநபாயச் சோழன். பின்னர் வைக்கப்பட்ட பொருள் சூரியன் . எனவே இப்பாடல் மறுபொருள் உவமையாயிற்று

**புகழ் உவமை அணி**

உவமானத்தைப் புகழ்வது புகழ் உவமை அணியாகும்.

"இறையோன் சடைமுடிமே லெந்நாளுந் தங்கும்

பிறையேர் திருநுதலும் பெற்ற –தறைகடல்சூழ்

பூவலயந் தாங்கு மரவின் படம்புரையும்

பாவைநின் னல்குற் பரப்பு"[16]

இதில் உபமானமாக இருக்கும் ஆதிசேடனைப் புகழ்ந்து கூறுவதால் இது புகழ் உவமை அணியாகும்.

**நிந்தை உவமை அணி**

ஒரு பொருளுக்குக் கூறப்படும் உவமைப்பொருளைப் பழித்துச் சொல்லுவது நிந்தை உவமை ஆகும்.

"மறுப்பயின்ற வான்மதியு மம்மதிக்குத் தோற்கும்

நிறத்தலரு நேரொக்கு மேனும்-சிறப்புடைத்துத்

தில்லைப் பெருமா னருள்போற் றிருமேனி

முல்லைப்பூங் கோதை முகம்."[17]

இதில் தலைவியின் முகத்திற்குக் களங்கமுடைய சந்திரன், குவியும் தாமரை என்னும் பழிப்பிற்குரிய பொருள்களை உவமைகளாகக் கூறப்பட்டுள்ளன. இவ்வகையில் இப்பாடல் நித்தை உவமைக்கு எடுத்துக்காட்டாக அமைந்தது.

**நியம உவமையணி**

இதற்கு இதுதான் உவமை என உறுதியாக் கூறுவது நியம உவமை எனப்படுகிறது."தாதொன்று தாமரையே நின்முகம் ஒப்பாகும்."[18] என்ற நிலையில் முகத்திற்குத் தாமரையே ஒப்பாகும் எனக் காட்டுவது நியம உவமையாகின்றது.

**அநியம உவமையணி**

முன்பு கூறிய உவமையைத் தவிர வேறு பொருளும் உவமையாகும் எனக் கூறுவது அநியம உவமையாகும்.

"கௌவை விரிதிரைநீர்க் காவிரிசூழ் நன்னாட்டு

மௌவல் கமழுங் குழன்மடவாய்! –செவ்வி

மதுவார் கவிரேநின் வாய்போல்வ தன்றி

அதுபோல்வ துண்டெனினு மாம்’’[19]

வாய்க்கு முருக்கிதழே உவமை என கூறிப் பின்பு அம்முருக்கிதழ் போன்ற பிற பொருள்களுக்கும் உவமையாகும் எனக் கூறுவதால் அநியம உவமையாகின்றது.

**ஐய உவமையணி**

பொருளையும் அதற்குக் காட்டப்படும் உவமையையும் உறுதியாகக் கூறாமல் இதுவோ?அதுவோ? என ஐயப்பாடு தோன்ற உரைப்பது ஐய உவமை ஆகும்.

“தாதளவி வண்டு தடுமாறுந் தாமரைகொல்

மாதர் விழியுலவு வாண்முகங்கொல்-யாதென்

றிருபாற் கவருற் உற்(று) றிடையூச லாடி

ஒருபாற் படாதென் னுளம்”[20]

என்பதில் தாமரைக்கும் முகத்திற்கும் வேறுபாடு அறியாவண்ணம் ஐயப்படக் கூறுவதால் ஐய உவமையாயிற்று.

**தெரிதரு தேற்ற உவமையணி**

உவமையைக் கூறிப் பின் ஐயுற்ற நிலையில் இருந்து மாறிச் சில காரணங்களைக் கொண்டு இதுவே எனத் துணிந்து தெளிவது தெரிதர தேற்ற உவமையணியாகும்.

“தாமரை நாண் மலருந் தண்மதியால் வீறழியும்

காமர் மதியுங் கறைவிரவும் - ஆமிதனால்”[21]

என்ற பாடலடிகளில் காலை மலரும் தாமரை குளிர்ந்த மதியினால் அழகு அழியும்.அழகிய மதியிலும் களங்கம் உண்டு. இக்குறைகள் இல்லாமையால் அவள் முகமே உயர்ந்தது எனத் துணிவதால் தெரிதருதேற்ற உவமை ஆயிற்று.

**இன்சொல் உவமையணி**

ஒரு பொருளுக்கு அதனினும் சிறந்த ஒன்றை முதலில் உவமையாக்கிக் காட்ட வேண்டும். பின்னர் அவ்வுவமையின் சிறப்பு பொருளுக்கு ஒப்பாகுமே அன்றி உயர்வாகாது எனச் சமப்படுத்திக் கூறுவது இன்சொல் உவமை ஆகும்.

"மான்விழி தாங்கும் மடக்கொடியே நின்வதனம்

மான் முழுதும் தாங்கி வருமதியம்- ஆனாலும்

முற்றிழை நல்லாய்! முகமொப்ப தன்றியே

மற்றுயர்ச்சி யுண்டோ மதிக்கு"[22]

இதில் பெண் மான் விழியை மட்டும் தாங்கியுள்ளாள். ஆனால் சந்திரனோ அந்த மானையே முழுமையாகத் தாங்கி உள்ளது. சந்திரனுக்கு அப்பெருமை இருந்தாலும் அதுபெண்ணின் முகத்திற்கு உவமையாகிறது. அதைத் தவிர வேறு சிறப்பு இல்லை என்பதால் இது இன்சொல் உவமையாயிற்று.

**விபரீத உவமையணி**

தொன்றுதொட்டு உவமையாக வருவனவற்றைப் பொருளாகவும் பொருளை உவமையாகவும் மாற்றி உரைப்பது விபரீத உவமை அணியாகும்.

"திருமுகம் போன் மலருஞ் செய்ய கமலம்

கருநெடுங்கண் போலுங் கயல்கள்-அரிவை"[23]

நெடுங்காலமாகப் பெண்களின் முகத்திற்குத் தாமரையும் கண்களுக்குக் கயல்மீன்களும் உவமைகளாகக் கூறப்படுகின்றன. அவ் இயல்பிலிருந்து பிறழ்ந்து முகம், கண் ஆகிய பொருள்களை உவமையாக்கிக் கூறியதால் இது விபரீத உவமைக்கு எடுத்துக்காட்டாக அமைகிறது.

**இயம்புதல் வேட்கை உவமையணி**

உவமேயமாகிய ஒரு பொருளை இன்ன பொருள் போல் இருக்கிறதென்று சொல்ல விரும்புகின்றது என் உள்ளம் எனக் கூறுவது இயம்புதல் வேட்கை அணி என்பதாகும்.

"நன்றிதீ தென்றுணரா தென்னுடைய நன்னெஞ்சம்
பொன்றுதைந்த பொற்சுணங்கிற் பூங்கொடியே –மன்றல்
மடுத்ததைந்த தாமரைநின் வாண்முகத்திற் கொப்பென்
றெடுத்தியம்ப வேண்டுகின்ற தின்று."[24]

இப்பாடலில் முகத்திற்குத் தாமரையை ஒப்பாகச் சொல்ல விரும்புகின்றதுஎன் உள்ளம் எனக் கூறப்பட்டிருப்பதால் இது இயம்புதல் வேட்கை உவமையணி ஆகின்றது.

**பலபொருள் உவமையணி**

ஒரு பொருளுக்குப் பலபொருள்களை உவமையாகக் காட்டுவது பல பொருள் உவமை அணியாகும்.

"வேலுங் கருவிளையு மென்மானுங் காவியும்
சேலும் வடுவகிருஞ் செஞ்சரமும்- போலுமால்
தேமருவி யுண்டு சிறைவண் டறைகூந்தற்
காமருவு பூங்கோதை கண்"[25]

என்னும் இப்பாடலில் பூங்கோதையின் கண்களுக்கு வேல், கருவிளைமலர், மான், காவி மலர் ஆகிய பலவற்றை உவமையாக்கி கூறுவதால் இது பலபொருள் உவமை அணி ஆகும்.

**விகார உவமையணி**

ஒரு பொருளுக்கு ஒப்புமையாகக் கூறப்படும் உவமையிலிருந்து ஒன்றைப் பிரித்துக் கூறுவது விகார உவமையணியாகும்.

"சீத மதியி னொளியுஞ் செழுங்கமலப்
போதின் புதுமலர்ச்சி யுங்கொண்டு-வேதாதன்
கைம்மலரா னன்றிக் கருத்தால் வகுத்தமைத்தான்
மொய்மலர்ப்பூங் கோதை முகம்"[26]

என்பதில் நிலவின் ஒளியை முகத்திற்கு ஒளியாகக் கொண்டு, தாமரை மலர்ந்திருக்கும் அழகினைக் கண்டு பிரம்மன் தலைவியின் முகத்தைப் படைத்தான். சந்திரன், தாமரை ஆகிய இவற்றிலிருந்து பிரம்மன் முகத்தைப் படைக்கவில்லை. சந்திரனில் இருந்து மட்டும் ஒளியை எடுத்துக்கொண்டான் என்பது தெளிவு. இவ்வாறு இரண்டில் ஒன்றைப் பிரித்து விகாரப்படுத்துவது விகார உவமையணியாகும்.

**மோக உவமையணி**

ஒரு பொருளின் மேல் எழுந்த ஆசை மிகுதியினால் வந்த மனமயக்கம் தோன்ற உரைப்பது மோக உவமை அணியாகும்.

"கயல்போலு மென்றுநின் கண்பழிப்பக் கண்ணின்

செயல்போற் பிறழுந் திறத்தாற்- கயல்புகழ்வல்"[27]

என்ற இப்பாடலில் கண்ணாகிய பொருளை, உவமையாகிய கயல் மீனுடன் மயக்கம் தோன்ற உவமித்துக் காட்டியதால் இது மோக உவமையணியாற்று.

**அபூத உவமையணி**

உலகில் இல்லாத ஒரு பொருளை உவமையாகக் கூறுவது. இவ்வணியானது இல்பொருள் உவமை என்றும் அழைக்கப்பெறும். கம்பராமாயணம், பெரியபுராணம், சீவகசிந்தாமணி போன்ற காப்பியங்களில் இவ்வணி மிகுதியாக காணப்படுகிறது.

"எல்லாக் கமலத் தெழிலுந் திரண்டடொன்றின்

வில்லோர் புருவத்து வேனெடுங்கண் - நல்லீர்!

முகம்போலு மென்ன முறுவலித்தார் வாழும்

அகம்போலு மெங்க ளகம்"[28]

என்ற இப்பாடலடிகளில் தாமரையும் அதன் அழகு உள்ள பொருள் என்றாலும் எல்லாத் தாமரைகளின் அழகும் சேர்ந்தது உன் முகம் என இல்லாப் பொருள் உவமையாக்கப்பெற்றுள்ளது. இவ்வாறு உலகில் இல்லாத பொருளை

உவமையாகக் கூறுவதால் இப்பாடலடிகளில் இல்பொருள் உவமையணி பயின்று வந்துள்ளது என்பதை உணரமுடிகிறது.

**பலவயிற்போலி உவமையணி**

ஒரு பாடலில் பல உவமைகள் பயின்று வந்து அடிதோறும் வரும் உவமைகள் தோறும் உவமஉருபு தோன்றுமாறு அமைப்பது பலவயிற்போலி உவமை அணியாகும்.

"மலர்வாவி போல்வாரன் மாதர் கமல
மலர்போலு மாதர் வதனம் - மலர்சூழ்
அளிக்குலங்கள் போலு மளக மதனுட்
களிக்குங் கயல்போலுங் கண்"[29]

என உவமிக்கப்பட்ட நான்கு இடங்களிலும் 'போல' என்னும் உவமஉருபு வந்ததால் இது பலவயிற்போலி ஆயிற்று.

**ஒருவயிற் போலி உவமையணி**

உவமைதோறும் உவமைச் சொல் தோன்றாமல் ஓர் இடத்தில் மட்டும் உவமைச்சொல் தோன்ற அமைப்பது ஒருவயிற் போலி உவமையணி எனப்படும்.

"நிழற்கோப மல்க நிறைமலர்ப்பூங் காயா
சுழற்கலவ மேல்விரித்த தோகை-தழற்குலவு
தீம்புகை யூட்டுஞ் செறிகுழலார் போலுங்கார்
யாம்பிரிந்தோர்க் கென்னா மினி"[30]

என்ற இப்பாடலில் செறி குழலார் போலும் கார் என்பதில் போலும் என்னும் உவம உருபு ஓரிடத்தில் மட்டும் இடம்பெற்றுள்ளது. தீம்புகை (போன்ற) தோகை மயில் (போன்ற) பெண், இந்திரகோபம்(போன்ற) நெருப்பு என்பன போலும் என்ற உவம உருபோடு சேர்ந்து எடுத்துரைக்கப் பெற்றதால் இது ஒரு வயிற்போலி உவமை எனப்படுகிறது.

**கூடா உவமையணி**

ஒரு பொருளுக்குப் பொருந்தாத தன்மை ஒன்றினைப் பொருந்துவதாகக் கொண்டு அதனை ஒன்றற்கு உவமையாக்கி உரைப்பது கூடா உவமை ஆகும்.

"சந்தனத்திற் செந்தழலுந் தண்மதியில் வெவ்விடமும்

வந்தனவே போலுமால் நும்மாற்றம் - பைந்தொடியீர்!

வாவிக் கமல மதிமுகங்கண் டேக்கறுவார்

ஆவிக் கிவையோ வாண்"[31]

என்னும் இப்பாடலில் சந்தனத்தில் நெருப்புப் பிறத்தலும், சந்திரனில் கொடிய நஞ்சு பிறத்தலும் இல்லை. ஆனால் பிறப்பதாக இப்பாடல் உரைப்பதால் இப்பாடலில் கூடா உவமை இடம்பெற்றுள்ளது.

**பொது நீங்கு உவமையணி**

ஒன்றற்குக் கூறப்பட்ட உவமையை மறுத்துப் பின் அப்பொருள் தானே தனக்கு நிகராகும் என்று மேம்பாடு கூறுவது. அதாவது பொருளையே உவமையாக்குவது பொது நீங்கு உவமையணியாகும்.

"திருமருவு தண்மதிக்குஞ் செந்தா மரையின்

விரைமலர்க்கு மேலாந் தகையால்- கருநெடுங்கண்

மானே யிரளளகஞ் சூழ்ந்தநின் வாண்முகம்

தானே யுவமை தனக்கு"[32]

என்ற இப்பாடலில் முகத்திற்கு உவமையாகச் சந்திரன், செந்தாமரை ஆகியவற்றை முன்னர்க் கூறிப் பின் மறுத்து முகத்துக்கு முகமே ஒக்கும் எனக் கூறியதால் இது பொது நீங்கு உவமைஅணி ஆயிற்று.

**மாலையுவமையணி**

ஒரு பொருளுக்குப் பல உவமை கூறி, அவற்றை ஒன்றன் பின் ஒன்றாக இடைவிடாது தொடர்ச்சியாக மாலை போல அமைத்து, இறுதியில் பொருள் கூட்டி முடிப்பது மாலை உவமை அணி ஆகும்.

“மலையத்து மாதவனே போன்றும் அவன்பால்

அலைகடலே போன்றும் அதனுட்- குலவும்

நிலவலய மேபோன்றும் நேரியன்பா னீற்கும்

சிலைகெழுதோள் வேந்தர் திரு”[33]

என்ற இப்பாடலில் சோழனைவிட்டு நீங்காத செல்வத்திற்கு உவமையாக, அகத்தியனும் அவனோடு தொடர்புடைய கடல், கடல் சூழ்ந்த பூமியும் தொடர்ந்து மாலை போல உவமையாகி நின்றன. இவற்றால் இப்பாடல் மாலை உவமை அணி ஆயிற்று.

இவ்வாறாக உவமை அணியின் இருபத்து நான்கு வகைகள் பற்றிய விளக்கங்கள் தண்டியலங்காரத்துள் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன.

**உருவக அணி**

உவமையாக உள்ள பொருளுக்கும் உவமிக்கப்படும் பொருளுக்கும் வேறுபாடு தோன்றாமல் இரண்டும் ஒன்று என்ற உணர்வு தோன்ற இரண்டையும் ஒற்றுமைப்படுத்தி உரைப்பது உருவக அணி ஆகும்.

“உவமையும் பொருளும் வேற்றுமை ஒழிவித்து

ஒன்று என மாட்டின் அ∴து உருவகம்”[34]

என்று தண்டியலங்காரம் உருவக அணியின் இலக்கணத்தை உரைக்கிறது. கைமலர்-கைகள்தான் மலர் என்பதால் உருவகம் ஆகின்றது. இது போன்று,

“மையோ மரகதமோ மறிகடலோ மழைமுகிலோ”[35]

என்ற கம்பராமாயணப் பாடலடிகளும் உருவக அணி அமையப்பெற்றனவே ஆகும். இவ்வரிகளில் கண்ணனை மை, மரகதம்,மறிகடல,மழைமுகில் என உருவகிக்கப்படுகிறது.'மை' போன்ற மேனி என்று குறிப்பிட்டிருந்ததால் உவமை அணி ஆயிற்று. ஆனால் மையோ எனக் கூறும் போது அவன் மேனிதான் மை என்று கூறுவதால் இது உருவக அணி என அறியமுடிகிறது.

உருவக அணி பதினைந்து வகைப்படும் என்று தண்டியலங்காரம் சுட்டுகிறது. அவை தொகை, விரி, தொகைவிரி, இயைபு, இயைபில், வியனிலை, சிறப்பு, விருபக, சமாதான, உருவக, ஏகாங்க, அநேகாங்க, முற்று, அவயவ, அவயவி ஆகியன உருவக வகைகள் பதினைந்து ஆகும்.

**தொகை உருவகம் அணி**

உவமேயமும் உவமானமும் இணைப்புச் சொல் எதுவும் இன்றிச் சேரந்து வருவது தொகை உருவகம் ஆகும்.

"அங்கை மலரு மடித்தளிருங் கண்வண்டும்'[36]

என்ற பாடலடிகளில் அங்கை ஆகிய மலர் என்று குறிப்பிட வேண்டும். அவ்வகையில் 'ஆகிய' எனும் உருபு மறைந்து 'அங்கை மலர்' என வந்திருப்பதால் தொகை உருவகம் ஆயிற்று. மேலும் அடித்தளிர், கண்வண்டு என்னும் உருவகங்களும் உருபு இன்றி வந்துள்ளதால் தொகை உருவகமானது இப்பாடலில் பயின்று வந்துள்ளமை புலனாகின்றது.

**விரி உருவக அணி**

ஒரு செய்யுளில் உருவக இணைப்புச் சொற்களான 'ஆகிய'"ஆக' என்னும் உருபுகள் வெளிப்பட்டு நிற்பது விரி உருவகம் ஆகும்.

"கொங்கை முகையாக மென்மருங்குல் கொம்பாக"[37]

என்ற பாடலடிகளில் கொங்கை அரும்பாகவும், இடைவஞ்சிக்கொடியாகவும், கை மலராகவும், பாதம் தளிராகவும் உருவகிக்கப்பட்டு, ஆகிய ஆக என்ற உருவக உருபுகள் விரிந்து வருவதால் விரி உருவகம் என்று அறியமுடிகிறது.

**தொகைவிரிஉருவக அணி**

ஒரு செய்யுளில் உருவக இணைப்புச் சொற்களான 'ஆகிய''ஆக' என்னும் உருபுகள் இன்றிச் சேர்ந்து வருவதும் உருபுகள் வெளிப்பட்டு வருவதும் தொகை விரி உருவகம் ஆகும்.

'வையந் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காகச் - செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே யென்று ''[38]

உலகம் தகழியாகவும் நீண்டகடல் நெய்யாகவும் வெப்பமிக்க கதிரவன் விளக்காகவும் என்பதில் ஆக என்ற உருபு வந்துள்ளது. சிவந்த சுடர்நிறச் சக்கரத்தையுடையானது அடிக்கு இடராழி நீங்குக சொல் மாலை சூட்டுவேன் என வந்துள்ளதால் இது தொகைவிரி உருவகம் என அறியமுடிகிறது.

**இயைபு உருவக அணி**

பல பொருள்களை உருவகம் செய்யும் பொழுது அவற்றை ஒன்றற்கு ஒன்று பொருத்தம் உடைய பொருள்களாக வைத்துக் கூறுவது இயைபு உருவக அணி ஆகும்.

"செவ்வாய்த் தளிரு நகைமுகிழுங் கண்மலரும்
மைவா ரளக மதுகரமும் - செவ்வி"[39]

என்ற பாடலடிகளில் வாய் தளிராகவும், புன்முறுவல் முல்லை அரும்பாகவும், கண் மலராகவும், கூந்தல் வண்டாகவும், உருவகப்படுத்தி தளிர், அரும்பு, மலர், வண்டு என்ற நான்கும் ஒன்றோடு ஒன்று இயைபு உடைய பொருள்களை இயைபு படுத்திக் கூறுவதால் இது இயைபு உருவக அணி ஆயிற்று.

**இயைபு இல் உருவக அணி**

ஒரு செய்யுளில் ஒன்றோடு ஒன்று தொடர்பு இல்லாத பொருள்களை உருவகித்துக் கூறுவது இயைபு இல் உருவக அணியாகும்.

“தேனக் கலர்கொன்றை பொன்னாகச் செஞ்சடையே

கூனற் பவளக் கொடியாகத் - தான”[40]

என்ற பாடலடிகளில் விநாயகப் பெருமான் அணிந்துள்ள கொன்றை மாலை, செஞ்சடை, மதநீர், தந்தம் ஆகியவை உருவகம் செய்யப்பட்டுள்ளன. மலை, பொன், பவளக்கொடி, பிறை போன்றவை ஒன்றோடு ஒன்று எவ்வகையிலும் இயைபுபடாத பொருள்களைக் கொண்டு உருவகம் செய்துள்ளதால் இயைபில் உருவகம் ஆகின்றது.

**வியநிலை உருவக அணி**

ஒருபொருள் பல உறுப்புக்களைப் பெற்றிருக்கும் அவற்றுள் சிலவற்றை உருவகம் செய்து சிலவற்றை விடுத்தும் உருவகம் செய்து உரைப்பது வியநிலை உருவக அணி எனப்படுகிறது.

“செவ்வாய் நகையரும்பச் செங்கைத் தளிர்விளக்க

மைவா ணெடுங்கண் மதர்த்துலவச் - செவ்வி

நறவலருஞ் சோலைவாய் நின்றதே நண்பா!

குறவர் மடமகளாங் கொம்பு.”[41]

இப்பாடலில் கூறப்பட்டப் பொருண்மை குறப்பெண் ஆவாள். அவள் வஞ்சிக் கொம்பாக உருவகப்படுத்தப்பட்டுள்ளாள். அவளுடைய உறுப்புக்களில் வாய், கண், கை ஆகிய மூன்றும் இங்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. அவற்றுள் ‘கைமட்டும்’ தளிராக உருவகப்படுத்தப்பட்டுள்ளது. எஞ்சியவை உருவகப்படுத்தப்படவில்லை. ஆகவே இப்பாடலில் வியநிலை உருவகம் பயின்று வந்துள்ளது.

**சிறப்பு உருவக அணி**

ஒருபொருளை எடுத்து அதற்குச் சிறந்த ஆடைகளை உருவகப்படுத்தி அவற்றின் காரணமாக அப்பொருளையும் உருவகமாக்கி முடிப்பது சிறப்பு உருவகம் ஆகும்.

“விரிகடல்சூழல் மேதினி நான்முகன்மீ கானாச்

சுரநதிபா யுச்சி தொடுத்த —அரிதிருத்தாள்

கூம்பாக வெப்பொருளுங் கொண்ட பெருநாவாய்

ஆம்பொலிவிற் றுயினதா லின்று"[42]

என்ற இப்பாடலில் இவ்வுலகம் பலபொருள்களைத் தாங்கும் நாவாயாக உருவகப்படுத்தப்பட்டுள்ளது. நாவாயை இயக்கும் மீகாமனாகப் பிரம்மனும், பாயாகத் தெய்வ கங்கையும், கூம்பாகத் திருமாலின் திருவடியும் சிறப்பித்து உருவகப்படுத்தப்பட்டதால் இது சிறப்பு உருவகமாயிற்று.

**விரூபக உருவக அணி**

ஒரு பொருட்குக் கூடாத தன்மை பலவும் கூட்டி உருவகம் செய்வது விரூபக உருவகம் எனப்படும்.

"தண்மதிக்குத் தோலாது தாழ்தடத்து வைகாது

முன்மருவுந் தாண்மேன் முகிழாது - நன்னி

இருபொழுதுஞ் செவ்வி யியல்பாய் மலரும்

அரிவை வதனாம் புயம்"[43]

என்ற பாடலில் சந்திரனுக்கு கூம்பாமை, குளத்தில் வாழாமை, முள்தாளின் மீது மலராமை, இருபொழுதும் மலர்ந்திருந்தல் ஆகிய தன்மைகள் தாமரைக்கு பொருந்தாது. அவற்றை ஏற்றி முகத்தைத் தாமரையாக உருவகித்தமையால் இப்பாடல் விரூபக உருவகமாயிற்று.

**சமாதான உருவக அணி**

ஒரு பொருளை நன்மை தருவதாக உருவகிக்க வேண்டும். அதனையே தீங்கு தருவதாகப் பின்னர் கூறவேண்டும் அத்தீங்கு அப்பொருளால் தோன்றியது அன்று எனஅதற்குப் பிறிதோர் காரணம் கூற வேண்டும் என்பதே சமாதான உருவகம் ஆகும்.

"கைகாந்தள் வாய்குமுதங் கண்ணெய்தல் காரிகையீர்

மெய்வார் தளிர்கொங்கை மென்கோங்கம்.- இவ்வனைத்தும்

வன்மைசேர்ந் தாவி வருத்துவது மாதவமொன்

றின்மையே யன்றே வெமக்கு”[44]

இப்பாடலில் பெண்ணின் உறுப்புக்களான கை, வாய், கண், மெய், மார்பு ஆகியவை காந்தள், ஆம்பல், நெய்தல், தளிர், கோங்கரும்பு என்னும் பொருள்களாக உருவகம் செய்யப்பட்டுள்ளன. இந்நன்மை தரும் பொருள்கள் பின்னர்த் தீமை தருவதாகக் கூறப்பட்டன. அதற்குத் தவம் செய்யாமை என்னும் காரணம் கூறப்பட்டதால் இது சமாதான உருவக அணி ஆயிற்று.

**உருவக உருவக அணி**

ஒரு பொருளை பிறிதொன்றாக உருவகித்து பின்னர் வேறு ஒன்றாக உருவகிக்க இதனை உருவக உருவகம் எனலாம்.

“கன்னிதன் கொங்கைக் குவடாங் கடாக்களிற்றைப்

பொன்னெடுந்தோட் குன்றே புனைகந்தா- மன்னவநின்

ஆகத் தடஞ்சே வகமாக யானணைப்பல்

சோகித் தருளே றுவண்டு”[45]

என்ற பாடலில் தலைவியின் மார்பு மலையாக உருவகிக்கப்பட்டது. அதுவே பின்னர் மதம் மிகுந்த யானையாகவும் உருவகப்படுத்தப்பட்டது. எனவே இப்பாடலடியானது உருவக உருவகம் ஆயிற்று.

**ஏகாங்க உருவக அணி**

ஒரு பொருளுக்கு அமைந்த உறுப்புக்கள் பலவற்றுள் ஒன்றை மட்டும் உருவகம் செய்வது ஏகாங்க உருவக அணியாகும். ஏகம் என்றால் ஒன்று என்ற பொருள். அங்கம் என்றால் உடல் என்று பொருள். ஏதேனும் ஒரு உடல் உறுப்பை மட்டும் உருவகிப்பது இவ்வணியாகும்.

“காதலனைத் தாவென் றுலவுங் கருநெடுங்கண்

ஏதிலனால் யாதென்னும் மின்மொழித்தேன் - மாதர்

மருண்ட மனமகிழ்ச்சி வாண்முகத்து வந்த

இரண்டினுக்கும் மென்செய்கோ யான்”[46]

இப்பாடலில் பெண்களின் உறுப்புகளாகிய முகம், கண், மொழி ஆகியவற்றில் மொழி மட்டும் தேனாக உருவகப்படுத்தப்பட்டுள்ளது. எஞ்சியவை உருவகம் செய்யப்படாததால் இப்பாடலில் ஏகாங்க உருவகம் வந்துள்ளது.

**அநேகாங்க உருவக அணி**

ஒருவருக்கோ ஒரு பொருளுக்கோ அமைந்த பல உறுப்புக்கள் அனைத்தையும் உருவகம் செய்வது அநேகாங்க உருவகம் எனப்படும்.

“கைத்தளிராற் கொங்கை முகிழ்தாங்கிக் கண்ணென்னு
மைத்தடஞ்சேல் மைந்தர் மனங்கலங்க - வைத்ததோர்
மின்னுளதான் மேக மிசையுள தான் மற்றதுவும்
என்னுளதா நண்பா வினி”[47]

என்ற இப்பாடலில் ஒரு பெண்ணின் உறுப்புக்களாகிய கை, மார்பு, கண், கூந்தல், வடிவம் ஆகிய பல உறுப்புக்கள் தளிர், அரும்பு, கயல், மேகம், மின்னல் என்பனவாக உருவகிக்கப் பெற்றிருப்பதால் இப்பாடலானது அநேகாங்க உருவகம் ஆயிற்று.

**முற்றுருவக அணி**

பல உறுப்புக்களை உடைய உறுப்பினையும் அதன் உறுப்புக்களையும் ஏற்ற இடத்தொடும், பிறவற்றொடும் முழுமையாக உருவகம் செய்வது முற்றுருவகம் ஆகும்.

“விழியே களிவண்டு மென்னகையே தாது
மொழியே முருகுலாந் தேறல் - பொழிகின்ற
தேமருவு கோதைத் தெரிவை திருமுகமே
தாமரை என் உள்ளத் தடத்து”[48]

என்ற இப்பாடலில் ஒரு பெண்ணின் விழி,நகை,மொழி,முகம்ஆகிய உறுப்புகளை முறையே வண்டு, தாது,தேன்,தாமரை ஆக உருவகித்து. அது தன் உள்ளத்தில்

இருப்பதற்கு ஏற்ப உள்ளத்தைக் குளமாகவும் உருவகப்படுத்தியுள்ளதால் இப்பாடலானது முற்றுருவகம் ஆயிற்று

**அவயவ உருவக அணி**

ஒருவரது அல்லது ஒரு பொருளின் உறுப்புகளை உருவகம் செய்துவிட்டு அவரை ஒருவர் என்று குறிப்பது அவயவ உருவகம் ஆகும்.

"புருவச் சிலைகுனித்துக் கண்ணம்பெ னுள்ளத்

துருவத் துரந்தா ரொருவர் - அருவி

பொருங்கற் சிலம்பிற் புனையல்குற் றேர்மேல்

மருங்குற் கொடிநுடங்க வந்து"[49]

இப்பாடலில் ஒரு பெண்ணின் புருவம் -வில், கண்-அம்பு, அல்குல்-தேர், இடை-கொடி, என உறுப்புக்கள் உருவகிக்கப்பட்டுள்ளன. இவ்உறுப்புக்களை உடைய பெண்ணை உருவகம் செய்யாமல் ஒருவர் என்னும் அளவில் சுட்டியுள்ளதால் அவயவ உருவகம் ஆனது.

**அவயவி உருவக அணி**

அவயவியாகிய பொருளை உருவகம் செய்து அதன் உறுப்புக்களை உருவகிக்காமல் விட்டுவிடுதல் அவயவி உருவகம் ஆகும்.

"வார்புருவங் கூத்தாட வாய்மழலை சோர்ந்தசைய

வேரரும்பச் சேந்து விழிமதர்ப்ப - மூரல்

அளிக்குந் தெரிவை வதனாம் புயத்தால்

களிக்கும் தவமுடையோன் கண்"[50]

என்ற பாடலில் பெண்ணின் முகத்தைத் தாமரை என உருவகித்து அதன் உறுப்புக்களான புருவம் முதலானவற்றை உருவகிக்காமல் விட்டதால் இது அவயவி உருவக அணி ஆகும். இவ்வாறாக உருவக அணியானது அதன் வகைகளுடன் தண்டியலங்காரத்தில் விளக்கம் செய்யப்பெற்றுள்ளது.

**தீவக அணி**

ஒரு குணத்தையோ, தொழிலையோ, இனத்தையோ, பொருளையோ குறிக்கும் ஒரு சொல் செய்யுளின் ஓர் இடத்தில் நின்று அச்செய்யுளில் பல இடங்களில் உள்ள சொற்களோடு சென்று பொருந்திப் பொருளைத் தருவது தீவக அணி ஆகும்.

"குணந்தொழில் சாதி பொருள்குறித் தொருசொல்

ஒருவயின் னின்றும் பலவயிற் பொருடரிற்

றீவகஞ் செய்யுண் மூவிடத் தியலும்"[51]

என்று தீவக அணிக்கு இலக்கணம் காட்டுகிறது தண்டியலங்காரம்.

இத்தீவக அணி குணம், தொழில், சாதி, பொருள் என்ற நிலையில் நான்கு வகைப்படும். மேலும் இத்தீவகம் வரும் இடம் கருதி முதல்நிலை, இடைநிலை, கடைநிலை என மூன்றாகவும் வரும். இந்நிலையில் தீவக அணியானது பன்னிரண்டு வகைகளாக விரியும்.

**முதல் நிலைத் தீவகம்**

"ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்

இழிந்த பிறப்பாய் விடும் "[52]

என்ற குறளில் ஒழுக்கம் என்ற சொல் முதல்நிலையில் தீவகப்பட்டு நிற்கிறது. ஒழுக்கம் உடைமை குடிமை, ஒழுக்கம் இழுக்கம் இழிந்த பிறப்பாய் விடும் என்ற நிலையில் அது முதல் நிலைத் தீவகமாக அமைந்து சிறக்கிறது.

**இடைநிலைத் தீவகம்**

'உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊன்உண்ண

அண்ணாத்தல் செய்யாது அன்று"[53]

என்ற குறளில் ஊன் - இறைச்சி என்ற பொருளானது பாடலின் இடையில் அமைந்து முதலிலும், கடைசியிலும் இயைந்து, பொருளாக விளங்குவதால் இடைநிலைத் தீவக அணியாக இக்குறள் அமைகிறது.

**கடைநிலைத் தீவகம்**

"உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்

கள்ளுக்கில்லை காமத்திற் குண்டு"[54]

என்ற குறளில் நினைத்த அளவிலே களிப்படைதலும், கண்ட அளவிலே மகிழ்ச்சி அடைதலும் இருவகை தன்மையும் கள்ளுக்கு இல்லை காமத்திற்கு உண்டு. இக்குறளில் உண்டு என்னும் சொல் இறுதியில் வந்து குறள் முழுமைக்கும் பொருள் தந்ததால் கடைநிலைத் தீவகம் ஆனது.

இவ்வாறு தீவக அணி இடம் பெறும் மூவிடங்கள் கருதிய பாடல்கள் இங்குத் தரப்பெற்று விளக்கப்பெறுகிறது.

**பின்வருநிலையணி**

அதிக அளவில் பயன்படுத்தப்படுவதும், அதிக அளவில் விளக்கம் பெற்றதும் பின்வருநிலையணியாகும்.

"முன்வருஞ் சொல்லும் பொருளும் பலவயிற்

பின்வரு மென்னிற் பின்வரு நிலையே"[55]

செய்யுளில் முன்னர் வந்த சொல்லோ பொருளோ இவ்விரண்டுமோ பலமுறை பின்னரும் வருவது பின்வருநிலையணி என்று தண்டியலங்காரம் வரையறை செய்கிறது. இது சொல் பின்வருநிலை, பொருள் பின்வருநிலை, சொல்லும் பொருளும் பின்வருநிலை என்று இவ்வணி மூன்று வகைப்படும்.

**சொல் பின்வரு நிலையணி**

செய்யுளில் முதலில் ஒருமுறை வந்த சொல் அதே பொருளிலோ அல்லது வேறு ஒரு பொருளிலோ பின்னரும் பலமுறை வருவது சொல் பின்வருநிலை அணியாகும்.

"உள்ளம் உடைமை உடைமை பொருளுடைமை

நில்லாது நீங்கி விடும்'[56]

இக்குறட்பாவில் 'உடைமை' என்ற சொல்லானது பெற்றிருத்தல், உடைய பொருள் என வேறுபட்ட பொருள்களில் பலமுறை வந்துள்ளதால் இப்பாடலில் சொல் பின்வருநிலை அணி உள்ளது என்பதை உணரமுடிகின்றது.

**பொருள் பின்வரு நிலையணி**

செய்யுளில் ஒரே பொருள் தரும் பல சொற்கள் வருவது பொருள் பின்வருநிலை அணியாகும்.

"அவிழ்ந்தன தோன்றி, யலர்ந்தன காயா

நெகிழ்ந்தன நேர்முகை முல்லை –மகிழ்ந்திதழ்

விண்டன கொன்றை விரிந்த கருவிளை

கொண்டன காந்தள் குலை''[57]

இப்பாடலில் மலருதல் என்னும் பொருள் தரக்கூடிய அவிழ்தல், அலர்தல், நெகிழ்தல்-விள்ளல், விரிதல் ஆகிய சொற்கள் பல வந்து ஒரே பொருளை தந்துள்ளதால் இது பொருள் பின் வருநிலையணி உடைய பாடல் என்பதை உணரமுடிகின்றது.

**சொற்பொருள் பின்வருநிலையணி**

செய்யுளில் முன்னர் வந்த சொல் அதே பொருளில் பலமுறை வருவது சொற்பொருள் பின்வருநிலை அணியாகும். எடுத்துக்காட்டிற்கு,

"எல்லா விளக்கும் விளக்கல்ல சன்றோர்க்குப்

பொய்யா விளக்கே விளக்கு”[58]

என்னும் இக்குறட்பாவில் விளக்கு என்னும் சொல் ‘ஒளி’ என்னும் ஒரே பொருளில் பலமுறை வந்துள்ளதால் இது சொற்பொருள் பின்வருநிலையணி ஆயிற்று.

இவ்வாறு சொற்பொருள் பின்வருநிலையணியின் வகைகளையும், அதன் இயல்புகளையும் தண்டியலங்காரம் எடுத்துரைக்கிறது.

**முன்ன விலக்கணி**

ஒரு பொருளை விவரித்து பின் அதனை விலக்குவது அதாவது மறுப்பது முன்னதை விலக்கும் முன்ன விலக்கணி ஆகும்.

“முன்னத்தின் மறுப்பின் அது முன்ன விலக்கே

மூவகைக் காலமும் மேவியது ஆகும்”[59]

இவ்வணி முக்காலத்திலும் நடக்கும் வினைகளை விளக்குவதும் உண்டு. முன்னவிலக்கணியானது இறந்த வினை விலக்கு, நிகழ்வினை விலக்கு, எதிர்வினை விலக்கு என மூவகைப்படும்.

**இறந்தவினை விலக்குஅணி**

இறந்த காலத்தில் நிகழந்ததை மறுத்து விலக்குவது இறந்த வினை விலக்கணி ஆகும்.

“பாலன் றனதுருவா யேழுலகுண் டாலீலையின்

மேலன்று கண்டுயின்றாய் மெய்யன்பர் ஆலன்று

வேலைநீ ருள்ளதோ விண்ணதோ மண்ணதோ

சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்”[60]

என்ற பாடலில் உலகம் முழுவதும் உண்ணப்பட்ட பின் ஆலமர இலையில் திருமால் உறங்கினார் என்றால் அந்த ஆலிலை எங்கு இருந்தது, விண்ணில் இருந்ததா, மண்ணில் இருந்ததா, கடல் நீரில் இருந்ததா குன்று எடுத்த திருமாலே சொல் என்று இப்பாடல் கருத்துமைகிறது. முன்னர் ஆலிலையில் துயின்றதைச்

சொல்லி இறந்த காலத்தில் நடந்ததை விலக்குவதால் இது இறந்தவினை விலக்கு அணியாகும்.

**நிகழ்வினை விலக்குஅணி**

நிகழ்கால நிகழ்ச்சியை மறுத்து விலக்குவது நிகழ்வினை விலக்கு அணி ஆகும்.

“மாதர் நுழைமருங்குல னோவ மணிக்குழைசேர்

காதின் மிகைநீலங் கைபுனைவீர்! - மீதுலவு

நீணீல வாட்க ணெடுங்கடையே செய்யாவோ?

நாணீஞ் செய்யும் நலம்”[61]

இப்பாடலில் தலைவன் தலைவியின் ஒப்பனையை பாராட்டிப் பின்னர் அதை மறுத்து கூறுகிறான். நுண்ணிய இடை வருந்துமாறு அழகிய குழை அணிந்த உம் காதில் மிகையாக நீலமலரைச் செருகுகின்றீர்களே! அக்காதளவு சென்று உலாவுகின்ற நீண்ட நீல நிறத்தை உடைய உமது கண்களின் நெடிய கடைக்கண்ணே நீல மலர்களின் அழகைத் தந்துவிடும். எதற்காக அம்மலர்களை சூட வேண்டும் விலக்குங்கள் என்று நிகழ்கால விலக்காக இப்பாடல் அமைகிறது.

**எதிர்வினை விலக்குஅணி**

ஒரு பாடலில் எதிர்காலத்தில் நிகழவிருக்கும் வினை ஒன்றை மறுத்து விலக்குவது. எதிர்வினை விலக்காகின்றது.

“முல்லைக்கொடி நடுங்க மொய்காந்தள் கைகுலைப்ப

எல்லை யினவண்டு டெழுந்திரங்க - மெல்லியமேற்”[62]

என்ற பாடலடிகளில் எதிர்காலத்தில் தலைவனது பிரிவால் நிகழக் கூடிய தலைவியின் துன்ப நிகழ்வைக் கூறி அவனது பிரிவைக் குறிப்பால் விலக்கியதால் எதிர்வினை விலக்கு என அறியமுடிகிறது. இப்பாடலில் தீயாகிய நெடிய வாடைக்காற்று வீசும் என்பது எதிர்கால நிகழ்ச்சியாகும். அவ்வாறு வீசும்

காலத்தில் தலைவியால் செய்யக் கடவது ஒன்றுமில்லை என்று கூறித் தலைவனின் செயலைத் தடுத்ததால் இது எதிர்வினை விலக்கு அணியாகின்றது.

முக்கால விலக்கணிகள் தவிர பொருள் விலக்கு, குணவிலக்கு, காரணவிலக்கு, காரிய விலக்கு என நான்கு வகைகளும் உண்டு. இவை தவிர விலக்கணி இன்னும் பதிமூன்று விரிகளைக் கொண்டதாகவும் உள்ளது. என்பதை,

"வன்சொல் வாழ்த்துத் தலைமை யிகழ்ச்சி
துணைசெயல் முயற்சி பரவச முபாயம்
கையற லுடன்படல் வெகுளி யிரங்கல்
ஐய மென்றாங் கறிந்தனர் கொளலே"[63]

என்னும் பாடலடிகள் சுட்டும்.

**வேற்றுப்பொருள் வைப்பணி**

கவிஞன் தான் கூற விரும்பும் சிறப்புப் பொருளை உலகமறிந்த பொதுப்பொருளைக் கொண்டு விளக்கிக் கூறுவது வேற்றுப்பொருள் வைப்பணியாகும். வீரசோழியம் என்னும் நூலானது இவ்வணியைப் 'பிறபொருள் வைப்பு' எனச் சுட்டுகிறது.

"முன்னொன்று தொடங்கி மற்றது முடித்தற்குப்
பின்னொரு பொருளை யுலகறி பெற்றி
ஏற்றிவைத் துரைப்பது வேற்றுப்பொருள் வைப்பே"[64]

என்பது வேற்றுப் பொருள் வைப்பணியின் இலக்கணம் சொல்லும் நூற்பாவாகும். இது குணம், பொருள், சாதி, தொழில் என்ற நான்கு வகைகளில் அமையும்.

"உரைமுடிவு காணான் இளமையோன் என்ற
நரைமுது மக்கள் உவப்ப- நரைமுடித்துச்
சொல்லால் முறைசெய்தான் சோழன் குலவிச்சை
கல்லாமல் பாகம் படும்"[65]

என்ற பாடல் வேற்றுப்பொருள் வைப்பணிக்கு உதாரணப்பாடலாக அமைகிறது.

முதியவர் இருவருக்கு தீர்ப்பு வழங்குவதற்காக நரைமுடி தரித்து தன் இளம் வயதை மறைத்து முதியவர் மனம் கோணாமல் தீர்ப்பு வழங்கினான் கரிகாற் பெருவளத்தான் என்ற வரலாற்றுக் குறிப்பு பாடலில் எடுத்தாளப்பெற்றுள்ளது. இதற்கு அடுத்து 'குலவித்தை கல்லாமலே இனிதாக அமையும்' என்று பழமொழி வைக்கப்பெற்றுள்ளது. முன்னதற்கும் பின்னதற்கும் எவ்விதத் தொடர்பும் பாடலினுள் சுட்டப்பெறவில்லை. வரலாற்றுக் குறிப்பு ஒரு பொருளாகவும், பழமொழி ஒரு பொருளாகவும் அமையும் நிலையில் ஒன்றைச் சுட்டி ஒன்றில் வேறொன்று அமைவதால் வேற்றுப்பொருள் வைப்பணியாகின்றது.

இவ்வணி வேறுபடுத்தும் நிலை கருதி முழுவதும் சேறல், ஒருவழிச்சேறல், முரணித்தோன்றல், சிலேடையின் முடித்தல், கூடாவியற்கை, கூடுமியற்கை, இருமை இயற்கை, விபரீதப்படுத்தல் என எட்டுவகைப்படும்.

முழுவதும் சேறல் என்பது, ஒன்றிற்குக் கூறிய இயல்பு உலகில் உள்ள அனைத்துப் பொருள்களுக்கும் பொருந்தும் வண்ணம் உரைப்பது ஆகும். ஒருவழிச் சேறல் என்பது ஒன்றிற்குக் கூறப்பட்ட இயல்பு சில பொருள்களுக்கு மட்டும் பொருந்தி வருவது. முரணித் தோன்றல் என்பது தம்முள் மாறுபட்டு இருக்கும் தன்மையுடைய பொருளைக் கூறுவது. சிலேடையில் முடித்தல் என்பது முன் வைத்த பொருளையும் பின் வைத்த பொருளையும் சிலேடையில் முடித்துக்காட்டுவது. கூடாஇயற்கை என்பது பொருந்தாத இயல்புடைய ஒன்றைப் பொருந்துவதாகக் கூறுவது. கூடும் இயற்கை என்பது பொருந்தும் இயல்புடைய ஒன்றை அதற்கேற்பக் காட்டுவது கூடும் இயற்கை. இருமை இயற்கை என்பது பொருந்தாத இயல்புகளையும் பொருந்தும் இயல்புகளையும் ஒருங்கே வைத்துக் கூறுவது. விபரீதப்படுத்தல் என்பது இயற்கைக்கு மாறாய் நடந்ததனைக் கொண்டு முடிப்பது விபரீதப்படுத்தல் ஆகும்.

இவ்வாறு வேற்றுப்பொருள் வைப்பு அணியின் இயல்பு, வகை, விரிவு ஆகியன தண்டியலங்காரத்தில் சுட்டப்பெற்றுள்ளன.

**வேற்றுமையணி**

இரு பொருள்களுக்கிடையே உள்ள ஒப்புமையை வெளிப்படையாகவோ குறிப்பாகவோ முதலில் கூறிப் பின்னர் அவற்றுக்கிடையே வேற்றுமை தோன்றக் கூறுவது வேற்றுமை அணி ஆகும்.

"கூற்றினும் குறிப்பினும் ஒப்புடை இருபொருள்

வேற்றுமைப் படவரின் வேற்றுமை அதுவே"[66]

ஒப்புமையைக் கூறும் முறையால் கூற்று வேற்றுமை குறிப்பு வேற்றுமை எனவும்வேற்றுமையை எடுத்துக்காட்டும் வகையில் வேற்றுமைச்சமம் உயர்ச்சி வேற்றுமை எனவும் வகைப்படுத்தப்பட்டுள்ளது.

''தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே

நாவினால் சுட்ட வடு''[67]

இக்குறளில் தீயும் சுடும் நாவினால் கூறும் தீய சொல்லும் சுடும் என்று ஒப்புமை கூறி பின்பு தீயினால் சுட்ட புண் ஆறிவிடும் ஆனால் நாவினால் சுட்ட வடு ஆறாது என்று வேற்றுமை கூறியதால் வேற்றுமை அணி ஆயிற்று.

**விபாவனை அணி**

ஒன்றன் வினையைக் குறிப்பிடுகின்ற பொழுது அவ்வினைக்கு உலகத்தாரால் விளக்கமாக அறியப்பட்ட காரணத்தைக் கூறாமல் பிறிதொரு காரணத்தையோ, இயற்கையில் அமைந்த தன்மையையோ குறிப்பினால் வெளிப்படும்படி உரைப்பது விபாவனை அணியாகும்.

"உலகறி காரண மொழித்தொன் றுரைப்புழி

வேறொரு காரண மியல்பு குறிப்பின்

வெளிப்பட வுரைப்பது விபாவனை யாகும்"[68]

என்பது விபாவனை அணியின் இலக்கணமாகத் தண்டியலங்காரம் தரும் நூற்பாவாகும். இவ்வணி அயற்காரண விபாவனை, இயல்பு விபாவனை என இருவகைப்படும்.

**அயற்காரண விபாவனை**

அயல் காரணம் காட்டுவது அயற்காரண விபாவனை அணியாகும். ஒரு நிகழ்ச்சியானது உரிய காரணத்தால் அல்லாமல் வேறொன்றால் நிகழ்வதாக உரைத்தல் அயற்காரண விபாவனை ஆகும்.

"தீயின்றி வேந்தமியோர் சிந்தை செழுந்தேறல்

வாயின்றி மஞ்ஞை மகிழ்தூங்கும் - வாயிலார்

இன்றிச் சிலரூட நீர்ந்தா ரமரின்றிக்

கன்றிச் சிலைவளைக்குங் கார்"[69]

வெந்து போவதற்குத் தீயும், மகிழ்வதற்குக் கள்ளும், ஊடல் தீர்வதற்கு ஊடல் தீர்க்கும் வாயில்களும், வில் வளைப்பதற்குப் போரும் தேவை என்பது உலகு அறிந்த காரணங்கள் ஆகும். இவை இல்லாமலேயே அச்செயல்கள் நிகழ்வதற்குக் கார்காலம் என்னும் வேறொரு காரணம் சிந்தித்து ஆராய்ந்ததால் வெளிப்பட்டதால் இது அயற்காரண விபாவனை என அறிய முடிகிறது.

**இயல்பு விபாவனை**

ஒன்றற்கு இயல்பாய் அமைந்தும் கிடக்கும் காரணத்தன்மையினைச் சிறப்பித்தும் கூறுவது இயல்பு விபாவனை அணியாகும்.

"கடையாமே கூர்த்த கருநெடுங்கண் டேடிப்

படையாமே யேய்ந்ததனம் பாவாய்- கடைஞெமிரக்

கோட்டாமே கோடும் புருவங் குலிகச்சே

றாட்டமே சேந்த வடி"[70]

நெடுங்கண் கடையாமல் கூர்மை பெற்றது. தேடிப் படைக்காமல் தக்க உருவை பெண்ணின் மார்பகங்கள் பெற்றன. வளைக்காமல் வளைந்தன புருவங்கள், குங்கிலியக் குழம்பு பூசாமலே சிவப்பைப் பெற்றன பாதங்கள் என்று காரணம் இன்றி இயல்பாய் அமைந்த நிலையை எடுத்துரைப்பது இயல்பு விபாவனை ஆயிற்று இவ்வாறு விபாவனை அணி விளக்கம் பெறுகிறது.

**ஒட்டணி**

கவிஞன் தான் கூறக் கருதிய ஒன்றை நேரடியாக கூறாமல் அதனை ஒத்த பொருளோடு ஒட்டிக் கூறுவான். அவ்வாறு கூறும் முறைமை ஒட்டணி ஆகின்றது. அதன் வாயிலாகச் சொல்லக் கருதியதைக் குறிப்பாக உணர்த்த இதனை பிரிதுமொழிதல், நுவலா நுவற்சி, உவமபோலி எனவும் அழைக்கப்பெறும்.

"கருதிய பொருடொகுத் ததுபுலப் படுத்தற்

கொத்ததொன் றுரைப்பின.ஃ. தொட்டென மொழிப"[71]

என்பது ஒட்டணிக்குத் தரப்படும் தண்டியலங்கார இலக்கணம் ஆகும்.

"பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்

சால மிகுத்துப் பெயின்"[72]

என்ற குறட்பா ஒட்டணிக்கு சான்றாக அமைகின்றது. மென்மையான மயிலிறகு கூட அளவுக்கு அதிகமாக வண்டி மீது ஏற்றினால் அச்சு முறிந்துவிடும் என்பது இக்குறள் தரும் பொருளாகும். எனினும் இக்குறள் 'வலியறிதல்' என்ற அதிகாரத்தில் அரசியல் சார்பு பட இருப்பதால் இதற்கு பலமில்லா பல எதிரிகள் ஒன்று சேர்ந்தால் அவர்கள் வெல்வர் என்னும் உட்பொருளை ஒட்டிக் கொள்ளவேண்டும். அதுவே

"அடையும் பொருளும் அயல்பட மொழிதலும்

அடைபொது ஆக்கி ஆங்ஙனம்மொழிதலும்

விரவத்தொடுத்தலும் விபரீதப் படுத்தலும்

என நால் வகையினும் இயலும் என்ப"[73]

என்ற நூற்பாவின்வழி ஒட்டணியின் நால்வகை உடையது என்பது புலனாகின்றது.

**அதிசயவணி**

தான் கூறக் கருதிய ஒரு பொருளின் உண்மைத் தன்மையினை உள்ளபடி கூறாமல் உயர்த்தி அதிசயித்துக் கூறுவது அதிசயவணியாகும். இதனை உயர்வு நவிற்சி அணி, வியப்பணி என்றும் கூறுவர். இதன் இலக்கணத்தை,

“மனப்படு மொருபொருள் வனப்புவந் துரைப்புழி

உலகுவரம் பிறவா நிலைமைத் தாகி

ஆன்றோர் வியப்பத் தோன்றுவ ததிசயம்’[74]

என்று காட்டுகிறது தண்டியலங்காரம். இதன் வகையினை,

“அதுதான்

பொருள்குணந் தொழிலையந் துணிவே திரிபெனத்

தெருளுறத் தோன்று நிலைமைய தென்ப”[75]

என்னும் நூற்பா விளக்கும்.

**பொருள் அதிசயம்**

பொருளை உயர்வு படுத்திச் சொல்வது பொருள் அதிசயவணியாகும்.

“நோக்கினான் நோக்குஎதிர் நோக்குதல் தாக்கணங்கு

தானைக் கொண்டன்னது உடைத்து”[76]

இக்குறளில் தலைவன் தலைவியின் பார்வையைக் கண்டு அதிசயப்படுவது. தலைவியை தலைவன் பார்க்கும் போது தலைவி ஆனவள் எதிர்நோக்குதல் பெரிய சேனையே கூட்டி வருவது போல் உள்ளது என கூறுவதால் இது பொருள் அதிசய அணி ஆயிற்று.

**குணவதிசயம்**

ஒருபொருளின் நிறம், குணம், வடிவம் முதலியன பற்றி குறிப்பது குணவதிசயம் ஆகும்.

“நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்னும்

தீயாண்டுப் பெற்றாள் இவள்”[77]

நீங்கினால் சுடுகின்றது,நெருங்கினால் குளிர்ச்சியாக இருக்கிறது. இத்தகைய புதுமையான தீயை இவள் எங்கிருந்து பெற்றாளோ? என காமத்தின் இயல்பை வியப்புத் தோன்ற கூறுவதால் குணவதிசயம் ஆயிற்று.

**தொழில் அதிசயம்**

ஒருபொருளின் செயலில் அதிசயம் தோன்றக் கூறுவது தொழில் அதிசய அணியாகும்.

"தாம் வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்

தாமரைக் கண்ணான் உலகு"[78]

இக்குறளில் தலைவி தம்மால் விரும்பப்பட்டவருடன் கூடுதலை அதிசயம் தோன்றக் கூறுகிறாள். திருமாலது சொர்க்கபூமியும் ஈடாகாது என்று கூறுவதால், இது தொழில் அதிசயம் கூடுதல் என்று தொழில் பற்றி வந்துள்ளது.

**ஐயவதிசயம்**

ஒரு பொருளின் மீது ஐயப்பட்டு அதிசயம் தோன்றப் புனைவது ஐயவதிசயம் ஆகும்.

"அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை

மாதர்கொல் மாலுமென் நெஞ்சு"[79]

இப்பாடலில் தெய்வ மகளோ, அழகிய மயிலோ, கனத்த குழை காதணியை அணிந்ததால் பெண்தானோ- எனத் தெளிவு பெற முடியாமல் தலைவன் ஒரு பெண்ணைப் பார்த்து மயங்கி அதிசயித்துக் கூறுவதால் இது ஐயவதிசய அணி ஆயிற்று.

**துணிவதிசயம்**

துணிவுற்றுக் கூறும் முறையால் அதிசயம் தோன்றும்படி உரைப்பது துணிவு அதிசயமாகும்.

"மக்களே போல்வர் கயவர் அவரன்ன

ஒப்பாரி யாம் கண்டது இல்"[80]

இக்குறளில் கயவர்களைக் கயவரெனத் தெரிய வழியில்லை. அவர்கள் மக்களைப் போலவே தெரிகின்றனர். பாம்பு, தேள் எல்லாம் வேறுபாடு தெரிகிறது. அவர்களைப் போல ஒப்புமையை உலகில் கண்டதில்லை என துணிந்து கூறுவதால் இது துணிவதிசயம் என ஆயிற்று.

**திரிபதிசயம்**

ஒரு பொருளை அதனோடு ஒத்த வேறு பொருளோ எனத் திரித்துக்காணும் அளவுக்கு உயர்த்திக் கூறுவது திரிபதிசயம் ஆகும்.

"திங்கள் சொரிநிலவு சேர்வெள்ளி வள்ளத்துப்

பைங்கிள்ளை பாலென்று வாய்மடுக்கும் - அங்கயலே

காந்தர் முயக்கொழிந்தார் கைவறிதே நீட்டுவரால்

ஏந்திழையார் பூந்துகிலா மென்று"[81]

இப்பாடலில் முற்றத்தில் தோன்றும் நிலவின் ஒளியினைக் கிளி பால் என்றும், மகளிர் தம் பட்டுத்துகிலென்று மயக்கம் கொள்வதால் இது திரிபு அதிசய அணியாகியது.

இவ்வாறாக அதிசய அணியானது. தண்டியலங்காரத்தில் அதன் வகைகளுடன் சுட்டப்பெற்றுள்ளது.

**தற்குறிப்பேற்றவணி**

இயல்பாக நிகழும் நிகழ்ச்சி ஒன்றின் மேல் கவிஞன் தான் கூறக்கருதிய பொருளை ஏற்றிச் சுவைபட உரைப்பது தற்குறிப்பேற்ற அணியாகும். இதனை நேர்க்கணி என்றும் கூறுவர். இதனை,

"பெயர்பொரு ளல்பொரு ளெனவிரு பொருளினும்

இயல்பின் விளைதிற னன்றி யயலொன்று

தான்குறித் தேற்றுதல் தற்குறிப் பேற்றம்"[82]

என தண்டியலங்காரம் குறிப்பிடுகிறது. இது பெயரும் பொருள் தற்குறிப்பேற்றம், பெயராப் பொருள் தற்குறிப்பேற்றம் என இருவகைப்படுகின்றது.

**பெயர் பொருள் தற்குறிப்பேற்றம்**

இயங்குகின்ற பொருளில் இயல்பாக நடக்கும் நிகழ்ச்சி மீது தன் கருத்தை ஏற்றிக் கூறுவது பெயர் பொருள் தற்குறிப்பேற்றம் ஆகும்.

"மண்படுதோள் கிள்ளி மதயானை மாற்(று) அரசர்"[83]

என்று தொடங்கும் பாடலில் சந்திரனின் இயல்பு தேய்தல் ஆகும். இத்தன்மையை மறைத்துச் சோழனுடைய மதயானை பகையரசரது வெண்கொற்றக் குடையைச் சிதைத்த சினத்தைக் கண்டு தன்மீது பாயுமோ எனும் அச்சத்தால் அஞ்சித் தேயும் எனக் கவிஞர் தன் கருத்தைச் சந்திரன்மேல் ஏற்றிக் கூறியிருப்பதால் இது பெயர் பொருள் தற்குறிப்பேற்றம் எனப்படுகிறது.

**பெயராப் பொருள் தற்குறிப்பேற்றம்**

இயங்காத பொருளில் இயல்பாக நடக்கும் நிகழ்ச்சி மீது தன் கருத்தை ஏற்றிக் கூறுவது பெயராப் பொருள் தற்குறிப்பேற்றம் ஆகும்.

"வேனில் வெயிற்குலர்ந்த மெய்வறுமை கண்டிரங்கி

வானின் வளஞ்சுரந்த வண்புயற்குத் -தானுடைய"[84]

என்ற பாடலடிகளில் கூறப்பட்ட பொருள் சோலை. இது அசையாத பொருள். வெப்பத்தால் வாடிய காலத்தில் மழை பொழிந்தது மேகம். அதற்குக் கைமாறாகத் தன்னிடத்துள்ள பூவையும், தேனையும் சோலைகள் கிளையாகிய கையில் ஏந்தி நின்றன என்பது கவிஞன் ஏற்றிக் கூறுவது பெயராப் பொருள் தற்குறிப்பேற்றம் பயின்ற பாடலாக அமைகின்றது.

**ஏதுவணி**

ஒரு பொருளில் தோன்றும் தன்மைக்கு இதனாலேயே இது நிகழ்ந்தது எனக் காரணத்தை மிகுத்துச் சொல்வது ஏது அணியாகும். இது காரக ஏது, ஞாபக ஏது இரண்டு வகைப்படும்.

“யாதன் திறத்தினு மிதனினிது விளைந்தென்

ரேதுவிதந் துரைப்ப தேது வதுதான்

காரக ஞாபக மெனவிரு திறப்படும்”[85]

என்ற நிலையில் ஏதுவணி என்பதன் இலக்கணத்தைத் தண்டியலங்காரம் காட்டுகின்றது.

“துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்

துப்பாய தூவும் மழை”[86]

என்ற குறளில் உணவிற்கு வழிவகுக்கும் மழையே உணவாகவும் பயன்படுகிறது என்பது பொருளாகும். இங்கு மழையே முதல் பொருளாகவும், அதுவே கரும ஏதுவாகவும் அதுவே கருவியாகவும் இருப்பதால் இக்குறளில் ஏதுவணி பயின்று வந்துள்ளது என்று அறியமுடிகின்றது. இவ்வணி கருத்தா, பொருள், கருமம், கருவி, ஏற்பது, நீக்கம் என்னும் ஆறு வகைகளாக அமைகின்றன.

**நுட்ப அணி**

ஒரு பாடலில் பிறருடைய கருத்தை அறிந்து அதற்குரிய மறுமொழியைச் சொல்லால் வெளிப்படுத்தாமல் குறிப்பாலோ செயலாலோ அரிதாக உய்த்துணரும்படி புலப்படுத்துவது நுட்ப அணியாகும்

“தெரிபுவேறு கிளவாது குறிப்பினுந் தொழிலினும்

அரிதுணர் வினைத்திற் நுட்ப மாகும்”[87]

என்ற நூற்பா நுட்ப அணியின் இலக்கண அமைப்பினைச் சுட்டும். இந்நுட்ப அணியானது குறிப்பு நுட்ப அணி, தொழில் நுட்ப அணி என்று இருவகைப்படும்.

**குறிப்பு நுட்பவணி**

குறிப்பால் நுட்பமாக உணர்ந்து கொள்ளச் செய்வது குறிப்பு நுட்பவணியாகும்.

“காதலவன் மெல்லுயிர்க்குக் காவல் புரிந்ததால்

பேதைய ராயம் பிரியாத - மாதர்

படரிருள்கால் சீக்கும் பகலவனை நோக்கிக்

குடதிசையை நோக்குங் குறிப்பு"[88]

என்ற பாடலில் தோழியர் கூட்டத்தால் சூழப்பெற்ற தலைவியைக் கண்டும் பேச முடியாமல் தலைவன் வருந்துகிறான். அந்நேரத்தில் தலைவி கதிரவனையும் பார்க்கிறாள். பின்னர் அது சென்று மறைகின்ற மேற்குத் திசையையும் பார்க்கிறாள். இச்செயல்களாகிய குறிப்புக்கள் ஞாயிறு மறையும் மாலைக்காலத்தில் தலைவனுட் கூடுதற்கு உடன்பட்டாள் என்பதை உய்த்துணர்ந்து கொள்ள வைத்தன ஆதலால் இது குறிப்பு நுட்ப ஆயிற்று.

**தொழில் நுட்பவணி**

தொழிலால் நுட்பமாக உணர்ந்து கொள்ளச் செய்வது தொழில் நுட்பமாகும்.

"பாடல் பயிலும் பணிமொழி தன்பணைத்தோள்

கூட லவாவாற் குறிப்புணர்த்தும் - ஆடவற்கு

மென்றீந் தொடையாழின் மெல்லவே தைவந்தாள்

இன்றீங் குறிஞ்சி யிசை"[89]

இப்பாடல் யாழில் குறிஞ்சிப்பண் மீட்டும் தொழிலைக் குறிக்கிறது. இப்பண் புணர்தலுக்கு உரிய இசையாகும். இது யாமத்தில் இசைக்கப்படுவது. இதனை வேறொரு பொழுதில் தலைவி மீட்டியதால் தனக்குள்ள புணர்ச்சி விருப்பத்தைத் தலைவனுக்கு நுட்பமாகப் புலப்படுத்தினாள். ஆதலின் இது தொழில் நுட்பமாயிற்று. இவ்வாறு நுட்ப அணியை அதன் நுட்பத்தை எடுத்துரைக்கிறார் தண்டியாசிரியர்.

**இலேச அணி**

ஒருவர் தன்னிடத்தில் வெளிப்படும் மெய்ப்பாட்டு உணர்விற்குரிய மெய்யான காரணத்தை மறைந்து அது வேறொன்றால் நிகழ்ந்ததாகக் கூறுவது இலேச அணி எனப்படும்.

"குறிப்பு வெளிப்படுக்குஞ் சத்துவம் பிறிதின்

மறைத்துரை யாட லிலேச மாகும்"[90]

என்பது இவ்வணியின் இலக்கணமாகும்.

"புகழ்வது போலப் பழித்திறம் புனைதலும்

பழிப்பது போலப் புகழ்புலப் படுத்தலும்

அவையு மன்னதென் றறைகுந ருளரே"[91]

என்ற அளவில் இரு வகைகளில் அமைகின்றது.

**புகழ்வது போலப் பழித்தல் இலேச அணி**

"தேவர் அனையர் கயவர் அவருந்தாம்

மேவன செய்தொழுக லான்"[92]

என்ற குறளில் தம்மைக் கட்டுப்படுத்துவாரின்றி தாம் விரும்பியவாறே நடப்பதால் கயவர்கள். தேவர்களைப் போன்றவராவர். என்று கூறுவதால் புகழ்வது போலப் பழிப்பதாகிய இலேசவணி ஆகின்றது.

**பழிப்பது போலப் புகழ்தல்**

"இவன் என் நலங்கவர்ந்த கள்வன் இவன் எனது

நெஞ்சம் நிறையழித்த கள்வன் என்று அஞ்சொலாய்!"[93]

என்ற பாடலில் சேரமன்னன் ஊர்வலமாகச் செல்லும் வழியில் மகளிர் அனைவரும் 'எங்கள் அழகை கவர்ந்த கள்வன். நெஞ்சின் நிறையழித்த திருடன்' என்று கூறுவது போல் அவனின் பெருமித அழகைப் புகழ்வதால் இது பழிப்பது போலப் புகழ்தல் இலேச அணி ஆயிற்று.இவ்வாறு இலேச அணியின் இயல்புகளும் வகைகளும் தண்டியலங்காரத்தில் சுட்டப்பெற்றுள்ளன.

**நிரல்நிறை அணி**

"நிரனிறுத் தியற்றுத னிரனிறை யணியே"[94]

என்று இவ்வணியின் இலக்கணத்தை உரைக்கிறது தண்டியலங்காரம். சொல்லையும் பொருளையும் நிரலே நிறுத்தி நேரே பொருள் கொள்வது நிரல் நிறை என்னும் அணியாகும்.

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை

பண்பும் பயனும் அது"[95]

இக்குறளில் அன்பு, அறன் என்பவற்றை வரிசையாக நிறுத்தி அவற்றோடு தொடர்புடைய பண்பு, பயன் என்பனவற்றை முறையே அடுத்த வரிசையில் இணைத்து பொருள் கொள்ளுவதால் இக்குறளில் நிரல்நிறை அணி பயின்று வந்துள்ளது என்று குறிக்க முடிகின்றது. இது நேர், எதிர் நிரல் நிறை அணி என்ற இரு வகையால் அமையும்.

**நேர் நிரல் நிறை அணி**

"காரிகை மென்மொழியா னோக்காற் கதிர்முலையால்

வார்ப்புருவத் தாலிடையால் வாய்த்தளிரால் - நேர்தொலைந்த

கொல்லி வடிநெடுவேற் கோங்கரும்பு விற்கரும்பு

வல்லி கவிர்மென் மலர்"[96]

என்ற இப்பாடலில் முன்னர் வைக்கப்பட்ட பொருள் ஆறு, அவை மொழி, நோக்கு, கொங்கை, புருவம், இடை, வாய் என்பன. அவற்றிற்கேற்ப கொல்லி, வேல், கோங்கரும்பு, கரும்பு வில், வல்லி, முருக்கமலர் என்பவை பின் வைக்கப்பட்டதால் நேர்நிரல்நிறையணி ஆகும்.

**எதிர்நிரல்நிறையணி**

நிரலே நிறுத்தி மொழிமாற்றிப்பொருள் கொள்ளுதல் எதிர் நிரல்நிறையணியாகும்.

"விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்

கற்றாரோடு ஏனை யவர்"[97]

இதில் விலங்கு-கற்றார், மக்கள்-ஏனையவர் என இருக்கும் வரிசையை மாற்றிப்பொருள் கொள்வதால் இது எதிர்நிறையணி ஆகும்.

**ஆர்வமொழியணி**

"ஆர்வ மொழிமிகுப்ப தார்வ மொழியே"[98]

என்ற நூற்பாவின்படி, உள்ளத்தின் உள்ளே எழும் ஆர்வம் காரணமாக அதை வெளிப்படுத்தும் சொற்கள் மிகுதிப்படத் தோன்றுவது ஆர்வ மொழியணியாகும்.

"வருகமன் கொண்கன் ஒருநாள் பருகுவன்
பைதல்நோய் எல்லாம் கெட"[99]

பலநாளும் எதிர்பார்த்த காதலர் ஒரு நாள் என்னிடம் திரும்பி வருவார். வந்தால்,என் துன்ப நோயெல்லாம் நீங்கமாறு அவர் அழகைப் பருகுவேன் என வேட்கை மிகுதியால் உரைத்தலால் ஆர்வமொழி ஆயிற்று.

**சுவையணி**

"உண்ணகழ் தன்மை புறத்துத் தோன்ற
எண்வகை மெய்ப்பாட்டி னியல்வது சுவையே"[100]

உள்ளத்தின்கண் நிகழும் தன்மைகளைப் பிறர் அறியும் வகையில் உடலால் புலப்படுத்திக் காட்டுவதே மெய்ப்பாடாகும். அவை நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என எண்வகையாகும். இவ்வெட்டு மெய்ப்பாடுகளைச் சுவையணியாக விளக்குவதே சுவையணியாகும்.

**வீரச்சுவையணி**

'என்ஐமுன் நில்லமின் தெவ்விர் பலர்என்ஐ
முன்நின்று கல்நின் றவர்"[101]

இக்குறளில் பகைவர்களே என் தலைவன் முன் வந்து நிற்காதீர்கள் அப்படி நின்றவர்கள் பலர் நடுகல்லாகிப் போனார்கள் என்ற படைவீரன் தன்

தலைவனின் வீரத்தை வெளிப்படுத்துவதால் வீரச் சுவையணி என அறியமுடிகிறது.

**அச்சச் சுவையணி**

அச்சம் காரணமாகத் தோன்றும் சுவையே அச்சச் சுவையாகும். அணங்கு, விலங்கு, கள்வர், இறை ஆகிய நான்காலும் அச்சம் பிறக்கும் என்பது தொல்காப்பியர் கருத்தாகும்.

"கைநெரித்து வெய்துயிர்ப்பக் காறளர்ந்து மெய்பனிப்ப

மையரிக்க ணீர்ததும்ப வாய்புலர்ந்தாள்- தையல்"[102]

இப்பாடலில் யானையைக் கண்டதன் காரணமாக அச்சத்திற்குரிய கை நெரித்தல்,பெருமூசச்சு விடல், கால் தளர்தல், உடல் வியர்த்தல், கண்ணில் நீர் ததும்ப வாய் புலம்புதல் முதலான செயல்கள் புலப்பட்டதால் இது அச்சச் சுவையாயிற்று.

**இழிப்புச் சுவையணி (இளிவரல் சுவை)**

"தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்

நிலையின் இழிந்தக் கடை"[103]

இக்குறளில் மக்கள் தங்கள் உயர்ந்த நிலையைக் கைவிட்டு சிறிதும் கீழிறங்கக் கூடாது. அவ்வாறு இறங்கினால் அவர்கள் தலையிலிருந்து விழுந்த தலைமுடிக்கு ஒப்பாவர் என்று விளக்குவதால் இது இளிவரல் சுவை அணி ஆயிற்று.

**வியப்புச் சுவையணி**

"கச்சி ஒருகால் மதியா ஒருகால்

தந்துநீர்த் தண்வைஞ்சை தான் மதியா- பிற்றையும்

ஈழம் ஒருகால் மிதியா வருமே, தம்

கோழியார்கோக் கிள்ளி களிறு"[104]

என்ற பாடலில் சோழனின் போர் யானையானது காஞ்சிபுரத்தில்- ஒரு காலை வைத்து, மறு காலை வடநாட்டு உச்சயினி நகரில் வைத்து, பின்பு தெற்கே திரும்பி ஈழத்தில் ஒரு காலை வைத்து மிதிக்கும். அவ்வளவு வேகமாகச் சுழன்று போர்செய்யும் என்பதால் வியப்பு சுவையணியாயிற்று.

**காமம் என்னும் உவகைச் சுவையணி**

"பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி

வாலெயிறு ஊறிய நீர்"[105]

என்ற இப்பாடலில் தலைவி கொடுக்கும் முத்தமானது பாலும் தேனும் கலந்ததுபோல் இன்பம் தருகிறது என்று உரைத்தலால் இது உவகைச் சுவையணியாயிற்று.

**அவலச்சுவையணி**

"இன்றும் வருவது கொல்லோ? நெருதலும்

கொன்றது போலும் நிரப்பு"[106]

உண்ண வழியில்லாத வறுமை, நேற்றே பசியால் வாட்டிக் கொல்ல வந்தது போன்ற அவ்வறுமை எனும் எமன் இன்றும் வருமோ? என அவலம் தோன்றக் கூறுவதால் இதில் அவலச்சுவையணி பயின்று வந்துள்ளது என்பதை அறிய முடிகின்றது.

**உருத்திரம்-வெகுளிச்சுவையணி**

சினத்தின் காரணமாகத் தோன்றும் சுவை உருத்திரச் சுவையணியாகின்றது.

"செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்

அவியினும் வாழினும் என்"[107]

இக்குறளில் செவிச்சுவையை உணராமல் வாயால் உண்பதையே விரும்பும் மாக்கள்,ஆதலால் இவ்வுலகில் செத்துத் தொலைந்தால் என்ன? என்று கோபம் காரணமாக கூறுவதால் இது உருத்திர சுவையணி ஆயிற்று.

**நகைச்சுவையணி**

"பெரிதுஇனிது பேதையார் கேண்மை பிரிவின்கண்

பீழை தருவதொன்று இல்"[108]

என்ற குறளில் முட்டாள்களுடன் நட்பு கொள்வது மிகவும் இனிது ஏனெனில் பிரியும்போது இருவர்க்கும் எந்த மனவருத்தமும் ஏற்படாது என்று நகைதோன்ற கூறுவதால் இது நகைச்சுவையணி ஆயிற்று இவ்வாறு எட்டு வகையான சுவையணிகளையும் விளக்கியுள்ளது தண்டியலங்காரம்.

**தன்மேம்பாட்டுரை அணி**

"தான்றற் புகழ்வது தன்மேம் பாட்டுரை"[109]

என்ற நிலையில் ஒருவன் தன்னைத் தானே புகழ்ந்து கொள்வது போன்று பாடல் செய்வது தன்மேம்பாட்டுரை அணியாகும்.

"எஞ்சினா ரில்லை யெனக்கெதிரா வின்னுயிர்கொண்

டஞ்சினா ரஞ்சாது போயகல்க - வெஞ்சமத்துப்

பேரா தவராகத் தன்றிப் பிறர்முதுகிற்

சாரா என் கையிற் சரம்"[110]

இப்பாடலில் எனக்கு எதிராக வந்தோர் எவரும் உயிரோடு செல்ல முடியாது என்பதும் என் அம்பு முதுகில் பாயாது என்பதும் ஒருவன் தன்னைத் தானே புகழ்ந்து கொள்வதாய் அமைந்துள்ளன. ஆதலால் இது தன்மேம்பாட்டுரை அணி ஆயிற்று. இதன் வகைகள் குறிப்பிடப்படவில்லை.

**பரியாயவணி**

"கருதியது கிளவா தப்பொரு டோன்றப்

பிறிதொன் றுரைப்பது பரியா யம்மே"[111]

என்ற நிலையில் அமைவது பரியாயவணியாகும். தான் எண்ணியதைக் கூறாது அப்பொருள் தோன்றப் பிறிதொன்றைக் கூறுவது பரியாயம் என்னும் அணியாகும்.

"மின்னிகரா மாதே விரைசாந் துடன்புணர்ந்து

நின்னிகரா மாதவிக்க ணின்றருள்நீ-தன்நிகராம்

செந்தீ வரமலரும் செங்காந்தள் போதுடனே

இந்தீ வரம்கொணர்வல் யான்"[112]

என்ற பாடல் பரியாயவணிக்குச் சான்றாகும். தலைவனோடு தலைவியைச் சேர்த்து வைக்கக் கருதிய தோழி அதனை நேராகக் கூறவில்லை. கூடுதற்குக் தான் தடையாய் இருக்கக்கூடாது என்பதற்காகப் பூப்பறித்து உன் கூந்தலில் சூட வருகிறேன் என்று வேறொரு செயலைக் கூறியதால் இது பரியாய அணி ஆயிற்று.

**சமாகிதவணி**

"முந்துதான் முயல்வுறூஉந் தொழிற்பயன் பிறிதொன்று

தந்ததா முடிப்பது சமாகிதம் ஆகும்"[113]

என்ற நூற்பாவின்படி முன்பு தன்னால் முயலப்பட்ட தொழிலினது பயன் அத்தொழிலால் அன்றிப் பிறிதொன்றால் நிகழ்ந்ததாகக் கூறி முடிப்பது சமாகிதம் என்னும் அணியாகும்.

"அருவியங் குன்ற மரக்கன் பெயர்ப்ப

வெருவிய வெற்பரையன் பாவை - பெருமான்

தணியாத வூட தணிந்து"[114]

என்ற பாடல் பரியாய அணிக்கு உதாரணமாகின்றது. சிவபெருமான் உமையம்மையின் ஊடலைத் தணிவித்ததாகும். ஆனால் அப்பயன் அம்முயற்சியால் நடக்காமல் இராவணன் மலையை அசைத்ததால் கிடைத்ததாகக் கூறப்பட்டுள்ளது. எனவே இது சமாகிதவணியாயிற்று.

**உதாத்த அணி**

''வியத்தகு செல்வமு மேம்படு முள்ளமும்

உயர்ச்சிபுனைந் துரைப்ப துதாத்த மாகும்”[115]

ஒரு பாடலில் ஒருவன் பெற்ற செல்வத்தையும்அவனின்பெருமித உள்ளத்தையும் உயர்த்திக் கூறுவது உதாத்த அணியாகும். இதனை வீறுகோளணி என்றும் கூறுவர்.

**செல்வ மிகுதி உதாத்த அணி**

“கன்றும் வயவேந்தர் செல்வம் பகைவர்ந்தும்

என்றும் வறிஞ ரினங்கவர்ந்தும் - ஒன்றும்“[116]

என்ற இப்பாடலடிகள் சோழனுடைய செல்வத்தின் மிகுதியை உயர்த்திக் கூறுவதால் செல்வமிகுதி கூறும் நிலையில் உதாத்த அணியாயிற்று

**உள்ளமிகுதி**

“மண்அகன்று தன்கிளையின் நீங்கி வனம் புகுந்(து)

பண்ணும் தவத்(து) இசைந்த பார்த்தன்தான்- எண்ணிறந்த

மீதண்டர் கோன்குலையும் வெய்யோர் குலம்தொலைத்தான்

கோதண்ட மேதுணையாகக் கொண்டு”[117]

இப்பாடலில் அருச்சுணன் தனது ஒரே வில்லின் துணை கொண்டு அசுரர் குலம் அனைத்தையும் அழித்தான் என்று அவனுடைய உள்ளத்தின் மிகுதி கூறப்பட்டு இருப்பதால் இது உதாத்தமாயிற்று.

**அவநுதியணி**

“சிறப்பினும் பொருளினுங் குணத்தினு முண்மை

மறுத்துப் பிறிதுரைப்ப தவநுதி யாகும்”[118]

என்பது அவநுதி அணியின் இலக்கணமாகும். பொருளின் உண்மைத் தன்மையை மறுத்துப் பிறிதொரு தன்மையை அதன்கண் ஏற்றி உரைப்பது அவநுதியணி ஆகும். சிறப்பு,பொருள்,குணம் மூன்றினால் உண்டாகும்.

“நிலனாம் விசும்பா நிமிர்கானீர் தீயாம்

அலர்கதிராம் வான்மதியா மன்றி - மலர்கொன்றை

ஒண்ணறுந் தாரா னொருவனிய மானனுமாய்

எண்ணிறந்த வெப்பொளு மாம்”[119]

என்ற பாடலில் ஒரு பொருளாக இருப்பவன் சிவபெருமான். அவன் எட்டாகவும் எண்ணிறந்த பல்பொருளாகவும் விளங்குகிறான் எனக் குறிக்கப் பெறுகிறான். ஒருவனாம் தன்மை மறுக்கப்பட்டுப் பலவாம் தன்மை ஏற்றி உரைக்கப்பட்டதால் இது அவநுதியணி ஆயிற்று.

**சிலேடையணி**

செய்யுளில் இடம்பெறும் ஒரு சொல்லோ தொடரோ தனித்து நின்றோ பிரிந்து நின்றோ பலபொருள் பட அமைவதனைச் சிலேடை அணி என்பர். இதனை இரட்டுற மொழிதல் அணி என்றும் கூறுவர்.

“ஒருவகைச் சொற்றொடர் பலபொருள் பெற்றி

தெரிதர வருவது சிலேடை யாகும்’[120]

என்பது சிலேடை அணியின் இலக்கணமாகும். இதன் வகைகளைப் பின்வரும் நூற்பா காட்டுகிறது.

“அதுவே செம்மொழி பிரிமொழி என இரு திறப்படும்”[121]

என்கிறது அதாவது செம்மொழிச் சிலேடை, பிரிமொழிச் சிலேடை என்று இருவகைப்படும்.

**செம்மொழிச் சிலேடை**

“வாரிக் களத்தடிக்கும் வந்தபின்பு கோட்டைபுகும்

போரிற் சிறந்து பொலிவாகும்-சீருற்ற”[122]

இப்பாடலடிகளில் வைக்கோலையும், யானையையும் ஒன்றாக வைத்து எண்ணப்பட்டுள்ளது. வாரிக் களத்தடிக்கும் என்பது வைக்கோல் வயலிலிருந்து வாரிக்கொண்டு வரப்பட்டுக் களத்தில் அடிக்கப்படும் என்றும், யானை

பகைவர்களை நிலத்தில் வீழ்த்தி கொல்லும் என்று பிரிக்காமலே இரண்டிற்கும் பொருள் பொருத்தமுடன் அமைவதால் செம்மொழிச் சிலேடை அணி என்பது புலனாகின்றது.

**பிரிமொழிச் சிலேடை**

ஒரு பாடலில் ஒரு வகையாய் நின்ற சொல்லையோ தொடரையோ பிரித்துப் பொருளுக்கேற்பக் கொள்ளப்படுவது பிரிமொழிச் சிலேடையாகும்.

"தள்ளா விடத்தேர் தடந்தா மரை அடைய

எள்ளா அரிமான் இடர்குப்ப –உள்வாழ்தேம்"[123]

என்ற இப்பாடலடிகள் சோழனின் ஆட்சியை ஏற்றுக்கொண்டோரின் நாட்டின் நிலையையும், ஏற்றுக்கொள்ளாதவரின் நாட்டின் நிலையையும் எடுத்துரைப்பதால் பிரிமொழிச் சிலேடை எனப்படுகிறது.

**விசேட அணி**

ஒரு பொருளுக்குக் குணம், தொழில், சாதி உறுப்பு போன்றவற்றால் ஏதேனும் ஒரு குறைபாடு தோன்றும். அக்குறைபாடு காரணமாக அப்பொருளுக்கு மேம்பாடு தோன்ற உரைப்பது விசேட அணியாகும். இதற்கு வேண்டலணி , சிறப்பணி என்னும் வேறுபெயரும் உண்டு.

"குணந்தொழின் முதலிய குறைபடு தன்மையின்

மேம்பட வொருபொருள் விளம்புதல் விசேடம்"[124]

என்பது விசேட அணியின் இலக்கணத்தைத் தரும் நூற்பாவாகும்.

இது குணக்குறை, தொழிற்குறை, சாதிக்குறை, பொருட்குறை, உறுப்புக் குறை விசேடம் என ஐந்து வகைப்படும்

"கோட்டந் திருப்புருவங் கொள்ளா வவர்செங்கோல்

கோட்டம் புரிந்த கொடைச் சென்னி - நாட்டம்

சிவந்தன வில்லை திருந்தார் கலிங்கம்

சிவந்த செந்தீத் தெற"[125]

என்ற பாடல் சோழன் சினங்கொண்டு போரத் தொடுப்பதற்கு முன்னரே பகைவர் நாடு அழிந்ததைக் காட்டுகிறது. இதனால் இப்பாடலில் குணக்குறை விசேடம் பயின்று வந்துள்ளது என்று உணரமுடிகின்றது.

**ஒப்புமைக் கூட்டவணி**

ஒரு பொருளைச் சொல்லுமிடத்துத் தான் கருதிய குணம் முதலியவற்றின் மிகுதியான பொருளைக்கூட வைத்துச் சொல்லுவது ஒப்புமைக் கூட்டம் என்னும் அணியாகும்.

"கருதிய குணத்தின் மிகுபொரு ளுடன்வைத்

தொருபொரு ளுரைப்ப தொப்புமைக் கூட்டம்"[126]

என்று இவ்வணியின் இலக்கணம் அமைகிறது. இவ்வணி புகழ்ஒப்புமைக் கூட்டம் , பழிப்பு ஒப்புமைக் கூட்டம் என இருவகைப்படும்.

**புகழ் ஒப்புமைக் கூட்ட அணி**

புகழத்தக்க பொருள்களை ஒன்றாக தொகுத்து கூறுவது புகழ் ஒப்புமைக் கூட்டமாகும்.

"பூண்டாங்கு கொங்கை பொரவே குழைபொருப்பும்

தூண்டாத தெய்வச் சுடர்விளக்கும்- நாண்டாங்கு"[127]

என்ற பாடலடிகள் புகழ் ஒப்புமைக் கூட்ட அணி சார்ந்ததாகும்.

சிவபெருமானாகிய ஏகாம்பர நாதர், தூண்டாத விளக்கு, சான்றோர் ஆகிய பொருள்கள் மூன்றும் புகழத்தக்க உயர்ந்த பொருள்கள். இம்மூன்றும் ஒரு நிகரனவாய்த் தொகுத்துக் கூறப்பட்டிருப்பதால் இது புகழ் ஒப்புமைக் கூட்டமாயிற்று

**பழிப்பு ஒப்புமைக் கூட்ட அணி**

பழிக்கத் தக்க பொருள்களை ஒருங்கு கூறுவது பழிப்பு ஒப்புமைக் கூட்ட அணியாகின்றது.

"கொள்பொருள் வெஃகிக் குடியலைக்கும் வேந்தனும்
உள்பொருள் சொல்லாச் சலமொழி மாந்தரும்
இல்லிருந் தெல்லை கடப்பாளு மிம்மூவர்
வல்லே மழையருக்குங் கோள்"[128]

குடிகளை வருத்தும் அரசன், பொய்கரியாளர், கற்பில்லா மனைவி ஆகியோர் இகழத்தக்கவர்கள் ஆவர். பழிப்பிற்குரிய இம்மூவரும் ஒரு நிகரனவாய் தொகுத்துக் கூறப்பட்டிருப்பதால் இது பழிப்பு ஒப்புமைக் கூட்ட அணியாகும்.

**விரோதவணி**

"மாறுபடு சொற்பொருண் மாறுபாட் டியற்கை
விளைதர வுரைப்பது விரோதமாகும்"[129]

என்ற நூற்பா விரோத அணியின் இலக்கணத்தைத் தருகிறது. மாறுபட்ட சொல்லாலும் பொருளாலும் மாறுபாட்டுத் தன்மை விளைவு தோன்ற உரைப்பது விரோதம் என்னும் அணியாகும். முரணணி என்று இதற்கு வேறுபெயரும் உண்டு. இது சொல்விரோதம் என்றும் பொருள் விரோதம் என்று இருவகைப்படும்.

**சொல் விரோத அணி**

சொற்கள் மாறுபடத்தொடுப்பது சொல் விரோத அணியாகும்.

"காலையும் மாலையும் கைகூப்பிக் கால் தொழுதல்"[130]

என்ற இப்பாடலடிகளில் உள்ள காலை-மாலை, கைகூப்புதல் -கால்தொழுதல் என்பன ஒன்றோடு ஒன்று மாறுபட்டு நிற்பதால் இது சொல் விரோத அணியாகும்.

**பொருள் விரோத அணி**

மாறுபட்ட பொருள்களைக் கொண்டு தொடுப்பது பொருள் விரோத அணியாகும்.

"சோலை பயிலுங் குயின்மழலை சோர்தடங்க
ஆலு மயிலினங்க ளார்த்தெழுந்த - ஞாலம்"[131]

என்ற பாடலடிகளில் குயில்களின் குரல்கள் அடங்கின. மயிலினங்கள் ஆர்த்து எழுந்தன என்பவை ஒன்றற்கு ஒன்று மாறுபட்ட பொருள்கள் ஆதலின் பொருள் விரோத அணியாயிற்று.

**மாறுபடு புகழ்நிலையணி**

"கருதிய பொருடொகுத் தாங்குது பழித்தற்கு
வேறொன்று புகழ்வது மாறுபடு புகழ்நிலை"[132]

என்பது இவ்வணியின் இலக்கணமாகும், ஒருவன் சொல்லக் கருதிய பொருளின் இகழ்ச்சித் தன்மை வெளிப்படுமாறு மற்றொரு பொருளைப் புகழ்ந்துரைப்பது. இதற்கு வஞ்சப்புகழ்ச்சிஅணி, தெளிவில் புகழ்ச்சி அணி என்னும் வேறு பெயர்களும் உண்டு

"இரவறியா யாவரையும் பின்சொல்லா நல்ல
தருநிழலுந் தண்ணீரும் புல்லும் - ஒருவர்
படைத்தனவுங் கொள்ளாவபிப் புள்ளிமான் பார்மேற்
றுடைத்தனவே யன்றோ துயர்"[133]

என்ற இப்பாடலில் முயற்சியால் வாழ வழி இருந்தும் அதனைச் செய்யாது பிறரைச் சார்ந்து வாழ்வோரைப் பழிக்க எண்ணுகிறான் கவிஞன். அதனை மறைத்து அச்செயல்களற்ற மானைப் புகழ்கிறான். இரவலனை இழித்துக் கூற மானை புகழ்வதால் இது மாறுபடு புகழ்நிலை அணி ஆயிற்று.

**புகழாப் புகழ்ச்சியணி**

‘பழிப்பது போலும் பான்மையின் மேன்மை

புலப்பட மொழிவது புகழாப் புகழ்ச்சி”[134]

என்ற நூற்பா ஒன்றனைப் பழித்துக் கூறுவது போன்று அதன் மேம்பாடு தோன்ற உரைப்பது புகழாப் புகழ்ச்சி என்னும் அணியாகும்.

“பாரி பாரி என்று பல ஏத்தி

ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்

பாரி ஒருவனும் அல்லன்

மாரியும் உண்டு ஈண்ட உலகு புரப்பதுவே”[135]

என்று கபிலர் பாரியைப் பழிப்பதுபோல் புகழ்வதும் உலகை புரப்பது பாரி மட்டுமா? மாரியும் தான் எனக் கூறி பாரியைப் பழிப்பதும் புகழாப் புகழ்ச்சியணி ஆகும்.

**நிதரிசனவணி**

ஒருகாட்சி ஒரு வகையில் நேரில் நிகழ்கிறது. அதனுடைய பயன் வேறொன்றிற்கு நன்மை பயப்பதாகவோ தீமை பயப்பதாகவோ புலப்படுத்திக் காட்டுவது நிதரிசனம் என்னும் அணியாகும். இதற்கு காட்சியணி, சுட்டணி என்னும் வேறுபெயர்களும் உண்டு.

“ஒருவகை நிகழ்வதற் கொத்தபயன் பிறிதிற்குப்

புகழ்மை தீமை யொன்றிவை புலப்பட

நிகழ்வ தாயி னிதரிசன மதுவே”[136]

என்ற நிலையில் அமைவது நிதரிசனவணியாகும். இது புகழ்மை நிதரிசனவணி, தீமை நிதரிசனவணி என இருவகைப்படும்.

**புகழ்மை நிதரிசனம்**

நற்பொருளை அறிவுறுத்துவதாகக் கூறுவது புகழ்மை நிதரிசனவணியாகும்.

"பிறர்செல்வங் கண்டாற் பெரியோர் மகிழ்வும்
சிறியோர் பொறாத திறமும் - அறிவுறீஇச்
செங்கமல மெய்ம்மலர்ந்த தேங்குமுத மெய்யயர்ந்த
பொங்கொளியோன் வீறெய்தும் போது"[137]

இப்பாடல் கதிரவன் ஒளியைக் கண்டு தாமரை மலர்வதும் ஆம்பல் குவிவதும் ஆகிய நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டு. இவற்றின் மூலம் முறையே பிறர் செல்வத்தைக் கண்டால் பெரியோர் மகிழ்வர். சிறியோர் பொறாமை கொள்வர் என்று கூறுவதால் இது புகழ்மை நிதரிசனம் ஆயிற்று.

**தீமை நிதரிசனவணி**

தீய பொருளை அறிவுறுத்துவதாகக் கூறுவது தீமை நிதரிசனவணியாகும்.

"பெரியோ ருழையும் பிழைசிறிதுண் டாயின்
இருநிலத்துள் யாரு மறிதல் - தெரிவிக்கும்
தேக்குங் கடலுலகில் யாவர்க்குந் தெள்ளமுதம்
வாக்கு மதிமேன் மறு"[138]

என்ற பாடலில் மதியில் உள்ள மறு யாவர்க்கும் எளிதில் புலப்படுதல் ஒரு நிகழ்வாகும். அது பெரியோரிடத்துப் பிழை சிறிது உண்டாயின் அதனை எல்லோரும் அறிவர் என்னும் தீய பயனைக் காட்டியது . ஆதலின் இது தீமை நிதரிசனமாயிற்று.

**புணர்நிலையணி**

"வினைபண் யெனவிவை யிருபொருட் கொன்றே

புணர மொழிவது புணர்நிலை ஆகும்"[139]

என்ற நூற்பா புணர்நிலை அணியின் இலக்கணத்தைச் சுட்டுகிறது. வினையாலும், பண்பாலும் இரண்டு பொருள்களுக்கு ஒன்றே பொருந்தச் சொல்லுவது புணர்நிலை அணியாகும். இது வினை புணர்நிலையணி என்றும், பண்பு புணர்நிலை அணி என்றும் இருவகைப்படும்.

**வினைப் புணர்நிலை**

இரு பொருள்களுக்கு ஒரு வினைச்சொல்லைப் பொருந்துவதாகக் கூட்டி உரைப்பது வினை புணர்நிலை ஆகும்.

"வேண்டுருவங் கொண்டு கருகி வெளிபரந்து

நீண்ட முகிலுடனே நீர்பொழிந்த –ஆண்டகையோர்

மேவல் விரும்பும் பெருநசையான் மெல்லாவி

காதல் புரிந்திருந்தோர் கண்"[140]

என்ற இப்பாடலில் கூறப்படும் பொருள்கள் மேகம், கண் ஆகியவை இவ்விரண்டிற்கும் உடனிகழ்ச்சி பற்றி "நீர் பொழிந்த" என்னும் தொழில் பற்றிய ஒரு சொல் அமைந்திருந்தலால் இது வினைப்புணர்நிலை ஆயிற்று.

**பண்புப் புணர்நிலை**

இருபொருள்களுக்கு ஒரு பண்பினைப் புணர்த்துச் சொல்லுவது பண்புப் புணர்நிலையணியாகும்.

"பூங்காவிற் புள்ளொடுங்கும் புன்மாலைப் போழ்துடனே

நீங்காத வெம்மையவாய் நீண்டனவால் - தாங்காதல்

வைக்குந் துணைவர் வருமவதி பார்த்தாவி

உய்க்குந் தமியார் ருயிர்"[141]

என்ற இப்பாடலில் கூறப்பெற்ற மாலைப்பொழுது, காதலியர் காத்திருந்து தேய்ந்த உயிர் என்றும் இருபொருளுக்கும் “வெம்மையவாய் நீண்டன” எனும் பண்பு பற்றிய ஒரு சொல்லே முடிவாக அமைந்திருந்திருத்தலின் இது பண்பு புணர்நிலை ஆயிற்று.

**பரிவருத்தனை அணி**

“பொருள்பரி மாறுதல் பரிவருத் தனையே”[142]

என்பது இவ்வணியின் இலக்கணமாக விளங்குகிறது. ஒரு பொருளைக் கொடுத்து வேறோரு பொருளைப் பெற்றுக் கொள்வதாகச் சொல்லுவது பரிவருத்தனை அணியாகும். பரிமாற்ற அணி, பண்டமாற்று அணி என்று கூறுவர்.

“காமனை வென்றோன் சடைமதியும் கங்கையும்

தாம நிழலொன்று தாங்கொடுத்து –நாமம்

பருவா ளரவின் பணமணிக டோறும்

உருவா யிரம்பெற் றுள”[143]

என்ற இப்பாடலில் திங்களும் கங்கையும் பாம்பு மணிகளுக்கு ஓர் நிழலைக் கொடுத்தன- அப்பாம்புகளிடம் இருந்து ஆயிரம் ஆயிரம் உருவத்தைப் பெற்றன எனக் கூறியதால் இது பரிவருத்தனை ஆயிற்று.

**வாழ்த்தணி**

“இன்னார்க் கின்ன தியைக வென்றுதா

முன்னியது கிளத்தல் வாழ்த்தென மொழிப”[144]

என்பது வாழ்த்தணியின் இலக்கணமாகும். இன்ன தன்மை உடையார்க்கு இன்னது நிகழ்க என்று கவிஞன் தான் கருதியதனை விதிப்பது வாழ்த்து அணி ஆகும்.

“மூவாத் தமிழ்பயந்த முன்னூன் முனிவாழி

ஆவாழி வாழி யருமறையோர் - காவிரிநாட்

டண்ண லனபாயன் வாழி யவன்குடைக்கீழ்

மண்ணுலகில் வாழி மழை”[145]

என்னும் இப்பாடலில் அனபாயனுக்கும் அவனுடைய நாட்டிற்கும் இன்றியமையாதனவாகவுள்ள அகத்திய முனிவர் ஆ, அருமறையோர் அனபாயன், மழை ஆகிய அனைத்தும் வாழ்க என வாழ்த்தியுள்ளமையால் இது வாழ்த்தணி ஆயிற்று.

**சங்கீரண அணி**

“மொழியப் பட்ட வணிபல தம்முட

டழுவ வுரைப்பது சங்கீ ரணமே”[146]

என்பது சங்கீரண அணியின் இலக்கணமாகும். தன்மை முதலாக வாழ்த்து ஈறாகக் கூறப்பட்ட பொருளணிகள் முப்பத்து மூன்று , அவற்றுள் இரண்டுக்கு மேற்பட்ட பல அணிகள் தம்முள் கலந்துவர உரைப்பது சங்கீரண அணியாகும். இதற்கு கலவை அணி, விரவணி என்னும் வேறு பெயர்களும் உண்டு.

“தண்டுறைநீர் நின்ற தவத்தா லளிமருவு

புண்டரிக நின்வதனம் போன்றதால் - உண்டோ

பயின்றா ருளம்பருகும் பால்மொழியாய் பார்மேல்

முயன்றான் முடியாப் பொருள்”[147]

என்ற பாடலில் தண்ணீரில் நின்று தவம் செய்வதால் தாமரை உன்முகம் போன்று ஆனது. பழகிய உள்ளத்தைப் பருகவல்ல பால்போலும் இனிய மொழியாய் உலகில் முயன்றால் முடியாத பொருளும் இல்லை என்பதாம். தண்துறை நீர் நின்ற தவம்-தற்குறிப்பேற்ற அணி, தவத்தால் -காரக ஏதுவணி, அளிமருவு-சிலேடை அணி, புண்டரிகம் நின்வதனம் போலும்- உவமையணி,உண்டோ முயன்றால் முடியாப்பொருள்-வேற்றுப்பொருள்வைப்பணி, உளம்பருகும் பால் மொழியாய்-உவகைச் சுவையணிஎன பல அணிகளும் விரவி வந்துள்ளன. அதனால் இது சங்கீரண அணியாகும்.

**பாவிக வணி**

“பாவிகம் என்பது காப்பியப் பண்பே”[148]

என்பது பாவிக அணியின் இலக்கணமாகும். ஒரு பாடலாலோ பல பாடல்களாலோ ஆகிய செய்யுள் வகைகளுள் அடங்காமல் தொடர்நிலையாகப் பாடப்பெறுவது காப்பிய வகையாகும். அவ்வகையுள் ஒன்றை முழுவதுமாக நோக்கிக் கொள்ளப்படுவதாய் கவிஞனால் கருதிச் செய்யப்படுவதே பாவிகம் என்னும் அணியாகும்.

"பிறனில் விழைவோர் கிளையொடும் கெடுப - இராமாயணம்

பொறையில் சிறந்த கவசம் இல்லை - மகாபாரதம்

வாய்மையில் கடியதோர் வாளி இல்லை - அரிசந்திரபுராணம்"[149]

என்பன காப்பியப் பாவிகங்களாகும்.

இவ்வகையில் பொருளணியியலில் சுட்டப்பெற்றுள்ள முப்பத்தைந்து அணிகள் குறித்த விளக்கங்கள் இங்கு எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. இவ்வணிகள் திரையிசைப் பாடல்களில் பயின்று வந்துள்ள தன்மையை ஆராய்வதாக இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது. குறிப்பாக கண்ணதாசன், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், வாலி, வைரமுத்து, பா. விஜய் ஆகிய கவிஞர்களின் திரையிசைப் படைப்புகள் இங்கு ஆய்வுக்களமாகக் கொள்ளப்பட்டுள்ளதால் அக்கவிஞர்கள் குறித்த அறிமுகங்கள் இங்கு எடுத்துரைக்கப்பெறுகின்றன. ஆய்வுக் களத்தை ஆய்வு செய்ய இக்கவிஞர் பற்றியச் செய்திகள் உதவும் என்ற நிலையில் இச்செய்திகள் இங்கு விரித்துரைக்கப்பெறுகின்றன.

**கண்ணதாசன்**

கவிஞர் கண்ணதாசன் 24.6.1927 ஆம் ஆண்டு பிறந்தார். இவர் மரபுக் கவிஞரும், திரைப்படப் பாடலாசிரியரும் ஆவார். இவரின் இயற்பெயர் முத்தையா என்பதாகும். இவர் காரைக்குடி அருகே சிறுகூடல்பட்டி என்ற ஊரில் சாத்தப்பன் செட்டியார் விசாலாட்சி ஆச்சி தம்பதியினருக்கு எட்டாவது மகனாகப் பிறந்தார். காரைக்குடியில் உள்ள ஒரு குடும்பத்தாருக்கு வாரிசாக ஏற்றுக் கொள்ளப்பெற்றார்.

இவர் நான்காயிரத்திற்கும் மேற்பட்ட மரபுக் கவிதைகளையும், ஐந்தாயிரத்திற்கும் மேற்பட்ட திரைப்படப் பாடல்களையும் இவர் எழுதியுள்ளார்.

இவற்றோடு இவர் பல புதினங்களையும், கட்டுரைகளையும் எழுதியுள்ளார். இவரது அர்த்தமுள்ள இந்துமதம் சிறந்த கட்டுரைத் தொகுப்பாகும்.

சண்டமாருதம் திருமகள், திரைஒலி, தென்றல், திரை முல்லை, கண்ணதாசன் ஆகிய இதழ்களின் ஆசிரியராக இருந்துள்ளார். கவிஞர், அரசியல்வாதி, பாடலாசிரியர் திரைப்பட தயாரிப்பாளர், இலக்கிய இதழ் ஆசிரியர் என பல துறைகளில் தடம் பதித்தவர். தமிழக அரசின் அரசவைக் கவிஞராக இருந்தவர். சாகித்ய அகாதமி விருது பெற்றவர். மேலும் காரைமுத்துப்புலவர், வணங்காமுடி, கனகப்பிரியன்,பார்வதிநாதன், ஆரோக்கியசாமி என்னும் புனைப்பெயர்களிலும் படைப்புகளைத் தந்துள்ளார். இவரது தன் வரலாறு நூல்களான வனவாசம், மனவாசம் திறந்த மனதின் உரைகல்லாக விளங்கும் படைப்புகளாகும்.

இவர் உடல்நலக் குறைவால் அக்டோபர் 17. 1981 ஆம் நாளில் சிகாகோ நகர் மருத்துவமனையில் மரணமடைந்தார். அக்டோபர் 20-இல் அமெரிக்காவிலிருந்து அவரது உடல் சென்னைக்கு கொண்டுவரப்பட்டு இலட்சக்கணக்கான மக்களின் இறுதி அஞ்சலிக்குப் பிறகு அரசு மரியாதையுடன் அக்டோபர் 22 ஆம் நாளில் எரியூட்டப்பட்டது. அவரது உடல் இவ்வுலகை விட்டு மறைந்தாலும் எழுத்துக்களால் என்றும் இவ்வுலகில் வாழ்ந்து கொண்டிருப்பவர்.

தமிழ்நாடு அரசு கண்ணதாசன் நினைவைப் போற்றும் வகையில் சிவகங்கை மாவட்டம் காரைக்குடியில் புதிய பேருந்து நிலையம் அருகில் கவியரசு கண்ணதாசன் மணிமண்டபம் அமைத்துள்ளது. இரண்டு தளங்களைக் கொண்ட இம்மணி மண்டபத்தில் மேல்தளத்தில் அரங்கமும் கீழ்தளத்தில் 2400 நூல்களுடன் ஒரு நூலகமும் இயங்கி வருகின்றது.

“நான் நிரந்தரமானவன் அழிவதில்லை – எந்த

நிலையிலும் எனக்கு மரணமில்லை”[150]

என்று தன்னைப் பற்றி ஆளுமையுடன் உரைத்த இக்கவிஞருக்குத் திரைப்படப் பாடலாசிரியர்கள் வரிசையில் குறிக்கத்தக்க இடம் உண்டு. இவர் எழுதிய திரையிசைப்பாடல்கள் தொகுக்கப் பெற்று ஐந்து தொகுதிகளாக வானதி பதிப்பகத்தாரால் வெளியிடப்பெற்றுள்ளது.

**பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்**

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் எளிமையான தமிழில் சமூக சீர்திருத்தக் கருத்துகளை வலியுறுத்திப் பாடும் போக்குடையவர் ஆவார்.

பட்டுக்கோட்டை அருகே உள்ள செங்கப்படுத்தான்காடு என்னும் சிற்றூரில் அருணாச்சலனார் - விசாலாட்சி ஆகியோருக்கு இளைய மகனாக கல்யாண சுந்தரம் 13.04.1930 ஆம் நாளில் விவசாய குடும்பத்தில் பிறந்தார்.

இவர் பத்தொன்பதாவது வயதிலேயே கவி புனைவதில் அதிக ஆர்வம் காட்டியவர். இவருடைய பாடல்கள் கிராமியப் பண்களைத் தழுவியவை. இவர் பாடல்களில் உருவங்களைக் காட்டாமல் உணர்ச்சிகளைக் காட்டியவர்.

இவர் இளம் வயதிலேயே விவசாயச் சங்கத்திலும் பொதுவுடைமைக் கட்சியிலும் ஈடுபாடு கொண்டிருந்தார். தமது இருபத்தொன்பது ஆண்டு கால வாழ்க்கையில் விவசாயி, மாடுமேய்ப்பவர், நாடக நடிகர் போன்ற பதினேழு வகைத் தொழில்களில் ஈடுபட்டவர். 1959 ஆம் ஆண்டு அக்டோபர் எட்டாம் நாள் காலமானார்.

தமிழ்நாடு அரசு பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் நினைவைப் போற்றும் வகையில் தஞ்சாவூர் மாவட்டம் பட்டுக்கோட்டையில் மணிமண்டபம் அமைத்துள்ளது. பட்டுக்கோட்டையாரின் முத்திரைப் பாடலான,

"சித்தர்களும் யோகிகளும் சிந்தனையில் ஞானிகளும்
புத்தரோடு ஏசுவும் உத்தமர் காந்தியும்
எத்தனையோ உண்மைகளை எழுதி எழுதி வச்சாங்க
எல்லாந்தான் படிச்சீங்க என்ன பண்ணிக் கிழிச்சீங்க."[151]

என்ற நிலையில் அறிவுக்கு வேலை தரும் பாடல்களை எழுதியவர். இவரின் பாடல்கள் தொகுக்கப் பெற்று பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடல்கள் என வெளியிடப்பெற்றுள்ளது.

**வாலி**

கவிஞர் வாலி மரபுக் கவிஞரும், பாடலாசிரியரும், சிறந்த ஓவியரும் ஆவாா். கருத்தாழமிக்க எளிய தமிழ் சொற்களைப் பாடல்களில் அமைத்து எல்லோருக்கும் எளிதாகப் புரியும் வகையில் தன் மனதில் பட்டதைக் கவிதை நயத்துடன் வெளிப்படுத்தும் கவிஞர் இவர் ஆவார். இவர் தத்துவப் பாடல்களாக இருந்தாலும் சரி விழிப்புணர்ச்சிப் பாடல்களாக இருந்தாலும் சரி கவித்துவமான பாடல்களாக இருந்தாலும் சரி காட்சிகேற்ப பாடல் வரிகளை எழுதி தமிழ்த் திரையுலகில் மறுமலர்ச்சியை ஏற்படுத்தியவர். எதுகை மோனையுடன் பாடல் வரிகளை எழுதுவதில் இவரை வெல்ல எவரும் இல்லையென்றே கூறலாம்.சுமாா் பதினைந்தாயிரத்திற்கும் மேற்பட்ட திரைப்படப் பாடல்களை எழுதியுள்ள இவர் 1931 –ம் ஆண்டு திருச்சி மாவட்டம் திருவரங்கம் என்ற இடத்தில் சீனிவாசன், பொன்னம்மாள் என்போருக்கு மகனாகப் பிறந்தார். இவரின் சொந்த ஊர் திருப்பாரய்த்துரை ஆகும்.

டி.எஸ்.ரங்கராஜன் என்ற இயற்பெயர் கொண்ட கவிஞர் வாலி திருவரங்கத்தில் பத்திரிக்கை பணி, கவிதைகள் எழுதுவது, ஓவியங்கள் வரைவது, வானொலிக்கு கதைகள் மற்றும் நாடகங்கள் எழுதுவது என தன் படைப்புப் பயணத்தைத் தொடங்கினார்.

கவிஞர் வாலி திரைப்படப் பாடகர் டி.எம்.சௌந்தரராஜனின் அறிமுகத்தால் அழகர் மலைக் கள்ளன் என்ற திரைப்படத்தில் முதல் பாடலை எழுதினாா். அவர் அன்று முதல் தன் இறுதிக்காலம் வரை எல்லோருக்கும் ஏற்ற திரைப்படப்பாடலாசிரியராக முத்திரை பதித்தார். இவர் திரையுலகின்நான்கு தலைமுறைகளைக் கடந்து பாடல்களை எழுதியுள்ளார்.

கண்ணதாசன் இறந்தபொழுது வாலி எழுதிய கண்ணீர் துளிகள் துளிர்க்கும் பாடலடிகள் பின்வருமாறு.

“எழுதப் படிக்கத் தெரியாத எத்தனையோ பேர்களில் எமனும் ஒருவன்

ஒரு அழகிய கவிதைப் புத்தகத்தைக் கிழித்துப் போட்டுவிட்டான்”[152]

என்ற நிலையில் கண்ணதாசனை இவர் மதித்தவர். அவருடன் இவரின் பாடல்கள் போட்டியிட்டாலும் இருவரும் நட்புடன் திகழ்ந்தனர்.

இவரின் பாடல்களுக்காக இவர் பத்மஸ்ரீ விருது, தேசிய விருது, தமிழ்நாடு அரசு மாநில விருதுகள் எனப் பல விருதுகள் வழங்கப்பட்டது.

கவிஞர் வாலி அவர்கள் உடல் நலக்குறைவால் 18-7-2013 ஆம் நாளில் மரணமடைந்தார். திரைப்படங்களுக்குப் பாடல் எழுத வயது தடை இல்லை என்பதை நிருபித்துக்காட்டியவர். எழுத்துலகில் மார்கண்டேயக் கவிஞர் என இவர் அனைவராலும் புகழப்பட்டார். கவிஞர் கண்ணதாசனுக்குப் பிறகு திரையுலகம் பரிணாம வளர்ச்சியைப் பெற்றது இவரின் காலங்களில் தான் என்பதை யாராலும் மறுக்கவோ மறைக்கவோ இயலாது. இவர் எழுதிய திரையிசைப்பாடல்களில் ஆயிரம் தொகுக்கப் பெற்று “வாலி ஆயிரம்” என்ற தலைப்பில் இரு தொகுதிகளாக தொகுக்கப்பெற்றுள்ளன.

**வைரமுத்து**

ஒவ்வொரு தமிழ் ரசிகனுக்கும் பாடல்கள், கவிதைகள், ஹைக்கூ என்றாலே நினைவுக்கு வருபவர் கவியரசு வைரமுத்து ஆவார். தமிழ்த் திரையுலகில் புகழ்பெற்ற பாடலாசிரியராகவும் கவிஞராகவும் திகழும் அவர் சிறந்த பாடலாசிரியருக்காக ஆறுமுறை தேசிய விருதும், கலைமாமணி விருதும், பத்மஸ்ரீ விருதும் பெற்ற இந்திய தமிழ் கவிஞர். கவியரசு, கவிப்பேரரசு, காப்பியப் பேரறிஞர், காப்பிய சாம்ராட் என்றும் பாராட்டப் பெறுபவர்.

வைரமுத்து அவர்கள் தேனி மாவட்டத்தில் வடுகப்பட்டியில் ஜீலை 13 ஆம் நாள் 1953 ஆம் ஆண்டு ராமசாமிக்கும் அங்கம்மாளுக்கும் மகனாகப் பிறந்தார். இவர் தனது பதினான்காவது வயதில் தமிழ் செய்யுளின் யாப்பின் சொல் இலக்கண விதிகளைக் கொண்டு கவிதைகள் எழுதத் தொடங்கினார். இவர் கல்லூரி நாட்களில் பல போட்டிகளில் கலந்து கொண்டு சிறந்த பேச்சாளர் மற்றும் கவிஞருக்காக பல பரிசுகளை வென்றார். வைகறை மேகங்கள் என்னும் இவரது முதல் படைப்பானது சென்னையிலுள்ள பெண்கள் கிறிஸ்தவ கல்லூரியின் பாடத்திட்டத்தில் ஒரு பாடமாக எடுத்துக்கொள்ளப்பட்டது.

1978 –ஆம் ஆண்டு பாரதிராஜா அவர்களின் திரைப்படத்தில் பாடலாசிரியராக இவர் அறிமுகமானார். அவர் எழுதிய பல பாடல்கள் அவருக்குப் புகழ் பெற்றுத்தந்தாலும் முதல் மரியாதை, ரோஜா, கருத்தம்மா, சங்கமம் ,கண்ணத்தில் முத்தமிட்டால், தென்மேற்குப் பருவக்காற்று போன்ற படங்களுக்கு எழுதிய பாடல்கள் இவருக்கு தேசிய விருதுகளைப் பெற்றுத்தந்ததோடு பெரும் புகழையும் தேடித்தந்தது. தமிழ் மொழியின் மீது அளவற்றப் பற்றுக் கொண்ட இவர் திரைப்படங்களோடு நிறுத்திக்கொள்ளாமல் பல்வேறு புதினங்கள், சிறுகதைகள், கட்டுரைகள், மரபுக் கவிதைகள், புதுக்கவிதைகள் படைத்துள்ளார். இவரின் தலைப்புகள் சிறந்தனவாக வாசகரைப் படிக்கத்தூண்டுவனவாக அமையும். இவரின் பாடல்களில் சிறந்தனவற்றை தேர்ந்தெடுத்து வைரமுத்து ஆயிரம் பாடல்கள் என்று தொகுக்கப்பெற்றுள்ளது.

**பா. விஜய்**

பா.விஜய் தமிழ் திரைப்படப் பாடலாசிரியரும் கவிஞரும் ஆவார். இவர் 1974 – ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 20 –ஆம் நாள் கோயமுத்தூரில் வி.பாலகிருஷ்ணன் - சரஸ்வதி தம்பதியினருக்கு மகனாகப் பிறந்தார். இவரின் சொந்த ஊர் கும்பகோணம் அருகில் உள்ள உட்கோட்டை ஆகும். இவர் தமிழில் முதுகலைப் பட்டம் பெற்றவர். இவர் இயக்குனர் கே.பாக்யராஜின் ஞானப்பழம் படத்தில் பாடலாசிரியராக அறிமுகமானார். இவர் அறுநூறு படங்களுக்கு மேல் பணியாற்றி உள்ளார் .இதுவரை 2000 பாடல்களுக்கு மேல் எழுதியுள்ளார்.

இவர் 2004 ஆம் ஆண்டுக்கான சிறந்த திரைப்படப் பாடலாசிரியருக்கான தேசிய விருதை தனது 'ஒவ்வொரு பூக்களுமே' என்ற பாடலுக்காகப் பெற்றுள்ளார். வித்தகக் கவிஞர் என்ற பட்டம் பெற்றவர். கவிஞர் வாலி தமது கலையுலக வாரிசாக பா.விஜயை அறிவித்து பெருமையளித்துள்ளார். இவரின் திரைப்படப்பாடல் தொகுப்புகள் இரு தொகுதிகளாக குமரன் பதிப்பக வெளியீடாக வெளிவந்துள்ளது.

## தொகுப்புரை

தொல்காப்பிய பொருளதிகாரத்தில் உவமவியல் என்ற இயல் அணி இலக்கண மரபுகளைத் தமிழில் தொடங்கி வைக்கிறது. அதன் உவம இயல் மரபுகளைப் பின்பற்றி தண்டியலங்காரம் தமிழில் அணி இலக்கண மரபுகளைப் பெரிதும் விரித்து வகைமை செய்துள்ளது.

இதனைத்தொடர்ந்து, திவாகர நிகண்டு, மாறனலங்காரம், முத்துவீரியம், சந்திராலோகம், குவலாயனந்தம், சுவாமிநாதம், தொன்னூல் விளக்கம் போன்ற பல இலக்கண நூல்கள் அணி இலக்கண மரபுகளை விளக்கி வரைகின்றன.

இருப்பினும் தண்டியலங்காரம் அணி இலக்கண நூல்களுள் குறிக்கத்தக்கதாக விளங்குகிறது. இதனை எழுதியவர் தண்டி ஆவார். இவர் காவியதர்சம் என்ற வடநூலை முன்வைத்து தண்டியலங்காரம் எழுதினார் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

தண்டி என்ற ஆசிரியர் தண்டியலங்கார நூலை எழுதியது மட்டுமில்லாமல் அந்நூல் தரும் அணி வகைகளுக்கு ஏற்ப எடுத்துக்காட்டுப் பாடல்களையும் வரைந்தார் என்பதும் இங்கு எண்ணத்தக்கதாகும்.

இவர் கம்பரின் மகன் அமராவதியின் புதல்வன் என்றும் ஒரு கருத்து நிலவுகிறது.

தண்டியலங்காரம் மூவகைப் பிரிவுகளை உடையதாக உள்ளது. அவை பொதுவணியியல், பொருளணியியல், சொல்லணியியல் என்பனவாகும். பொதுவான அணி இலக்கண மரபுகளை பொதுவணியியல் விளக்குகின்றது. பொருள் அணியியல் என்பது செய்யுளில் பயன்படுத்தப்படும் அணிகளின் வகைகள் குறித்து விளக்குகின்றது.

சொல்லணிகள் பற்றிய வரையறைகளைச் சொல்லணியியல் தருகின்றது.

பொருளணியியல் பகுதி இவ்வாய்வின் களமாக விளங்குவதால் இவ்வியல் பகுதி இவ்வியலில் விரித்துரைக்கப்பெற்றுள்ளது. தண்டியாசிரியர் குறிப்பிடும் முப்பத்தைந்து அணிகள் பற்றிய வரையறைகள், விளக்கங்கள், எடுத்துக்காட்டுப் பாடல்கள் ஆகியன கொண்டு எடுத்துரைக்கப்பெறுகின்றன.

இந்த முப்பத்தைந்து அணிகள் பற்றிய விளக்கங்கள் பின்வரும் இயல்களைப் புரிந்து கொள்வதற்கு அடிப்படைகளாக அமைகின்றன. இவ்வரையறைகளை ஒட்டியே இவ்வாய்வில் பாடல்கள் பகுத்து ஆராயப்பெற்றுள்ளன.

திரைக்கவிஞர்களுள் கண்ணதாசன், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், வாலி, வைரமுத்து, பா. விஜய் ஆகிய ஐவர்தம் திரையிசைப்பாடல்கள் இங்கு ஆய்வுகளமாக அமைகின்றன. இக்கவிஞர்கள் மக்களிடம் அதிகம் பிரபலத்தன்மை பெற்றவர்கள் என்பதாலும் ஓரளவிற்குத் தமிழ் யாப்பு, அணி முறைமைகளைக் கற்றறிந்தவர்கள் என்பதாலும் இவர்களுடைய பாடல்கள் மட்டுமே தொகுப்புகளாக உள்ளதுஎன்ற அடிப்படையிலும் இவர்கள் தேர்ந்து எடுத்துக்கொள்ளப்பெற்றனர்.

## இயல். 2

## திரையிசைப்பாடல்களில் உவமையணி

கவிஞன் உள்ளத்து எழுந்த உணர்வினை எழுச்சிகள் நிறைந்த இன்ப, துன்ப உந்துதல்களைச் சிதைவின்றி உள்ளத்தில் எழுந்தவாறு உலகிற்கு உணர்த்த உதவுவன உவமைகள் ஆகின்றன. உவமையானது கருத்தை விளக்கப் பயன்படுவதோடு அறிந்த பொருளைக் கொண்டு அறியாத பொருளைப் பிறருக்கு அறிவுறுத்த உதவுகின்றன. ஒரு பொருளோடு மற்றொரு பொருளை இயைபுபடுத்திப் பார்ப்பது ஓர் இயற்கைத் தூண்டுதல் மட்டுமின்றி அறிவு வளர்ச்சிக்கு அடிப்படையுமாகும். உவமானது ஓர் ஒப்புமை அளவையாகும்.

"உவமம் என்பது ஒரு பொருளினோடு ஒரு பொருளினை ஒப்புமை கூறுதல்" [1]என்று பேராசிரியர் உவமைக்கு விளக்கம் தருகிறார். இளம்பூரணர் "ஒருபுடை ஒப்புமை பற்றி" [2] என்று உவமைக்கு விளக்கம் தருகிறார்.

தொல்காப்பியர்,

"வினை, பயன், மெய், உரு என்ற நான்கே
வகை பெற வந்து உவமைத் தோற்றம்"[3]

என்று உவமையை நான்கு வகைகளுடன் விளக்கும்.

இந்நான்கு வகை உவமைகளும் சிறப்பு, நலன், காதல், வலி என்னும் நான்கையும் நிலைக்களனாகக் கொண்டு பிறக்கும் என்பதை,

"சிறப்பே நலனே காதல் வலியொடு
அந் நாற் பண்பும் நிலைக்களம் என்ப"[4]

என்ற நூற்பா விளக்குகிறது.

இவ்வகையில் தொல்காப்பியம் முதல் தொடர்ந்து தமிழ் இலக்கண இலக்கியங்களில் உவமை பற்றிய வரையறைகள் வரையறுக்கப்பெற்று வந்துள்ளன.

"பண்பும், தொழிலும், பயனும் என்றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்த்து
ஒப்புமை தோன்றச் செப்புவது உவமை" [5]

என்று தண்டியலங்காரம் உவமைக்கான வரையறையைத் தருகின்றது. ஒப்புமை தோன்றச் செப்புவது உவமை என்பது இதன் வழி தெளிவாகின்றது. அவ்வாறு ஒப்புமை சொல்லும் நிலையில் ஒன்றோடு பலவும் பொருளொடு பொருளும் இணைத்துச் சொல்லப்படலாம். அவை பண்பு,தொழில், பயன் என்ற வகைப்பாட்டில் அமையலாம் என்கிறது தண்டியலங்காரம்.

மேற்சொன்ன கருத்துகளின் வழியாக ஒரு பொருளை அதன் தன்மையை, அதன் உருவத்தைக் காட்டுவதற்கு மற்றொன்றை ஒப்புமையாக் காட்டுவது என்ற நிலையில் உவமை அமைகிறது என்பதைப் பெற முடிகின்றது.

ஒப்புமை அறிதற்குக் காரணமாக இருக்கும் பொருளை "உவமை'' என்றும் உவமிக்கப்படும் பொருளை 'பொருள்' என்றும் அழைக்கலாம். இவற்றுடன் உவம உருபும் இணைய உவமை முழுமை பெறுகிறது.

இவ்வுவமை கவிஞனின் படைப்பாற்றலுக்கும் வெற்றிக்கும் காரணமாக விளங்குகின்றது. சமுதாய நடப்புகளும் உவமைகள் வாயிலாக வெளிப்படுத்தப் படுகின்றன. மக்கள் இலக்கியமான திரையிசைப்பாடல்களிலும் உவமை அணி அதிக அளவில் பயன்படுத்தப்பெற்றுள்ளது. இவ்வுவமை அணி பயன்படுத்தப்பெற்ற நிலையை இவ்வியல் ஆராய்கின்றது.

கண்ணதாசன், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், வாலி, வைரமுத்து, பா.விஜய் போன்ற கவிஞர்களின் திரைப்பாடல்களில் உவமைகள் பயன்படுத்தப்பெற்றுள்ள நிலையை இவ்வியல் ஆராய்கின்றது.

**உவமை வகைகள்**

தண்டியலங்காரத்தின்படி உவமை அணி என்பது பண்பு, தொழில், பயன் என்ற மூன்று வகைமை உடையதாக உள்ளது. இம்மூன்றினுக்கும் ஆன திரையிசைப் பாடலாசிரியர்களின் படைப்புகள் ஓரளவு பின்வருமாறு சுட்டிக்காட்டப்படுகின்றன.

**பண்புவுவமை அணி**

ஒன்றின் அல்லது ஒருவரின் பண்பினை ஒப்புமை பட எடுத்துரைப்பது பண்புவமை ஆகும். இவ்வணி பெரும்பாலும் பல நிலைகளில் திரைப்பாடல் கவிஞர்களால் எடுத்தாளப் பெற்றாலும், வகைக்கொன்று கவிஞர்க்கொன்று என்ற நிலையில் இங்கு அறிமுகம் செய்யப்படுகின்றன. மற்ற வகைகளில் பல பாடல்கள் காட்டப்படும் நிலையில் இங்கு ஒன்றிரண்டு சான்றுகள் மட்டும் எடுத்தாளப்பெறுகின்றன.

**கண்ணதாசன் பாடலில் பண்புவுவமை அணி**

கண்ணதாசன் தன் திரையிசைப் பாடல் ஒன்றில், தலைவன் ஒருவன் தன் தலைவியின் குண நலனை இயற்கையோடு ஒப்பிட்டு மகிழும் நிலையில் பாடலினைப் படைத்துள்ளார்.

“பூவினும் மெல்லிய பூங்கொடி
பொன்னிறம் காட்டும் பைங்கிளி
சிறுமாவிலை பின்னிய தோரணம்
இருமைவிழி நாடகக் காவியம்”[6]

என்பது உவமைகள் அடுக்கி வரும் பண்புவமைப் பாடலாகும்.

தலைவியின் உடல் பூவைப் போன்று மென்மையாகவும் தங்க நிறம் கொண்ட கிளி போலும், மாவிலைப் போன்ற உடலழகும், அவள் கண்கள் நாடகம் நடிப்பளது போலும் இருப்பதாகப் பாராட்டியுள்ளதால் இப்பாடல் பண்புவமை வகையைச் சார்ந்ததாகக் கொள்ளமுடிகின்றது. மேலும் இப்பாடலில் உவம உருபுகள் வெளிப்பட அமையாமல் தொகைநிலையில் அமைந்துள்ளன.

**பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் பாடலில் பண்புவுவமை அணி**

சமத்துவ நோக்கமுடைய பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் பண்புவமையைக் கையாண்டுள்ளார்.

“மலருவதெல்லாம் உலருவதுண்டு

மறந்துட வேண்டாம் அக்கச்சி! அக்கச்சி - சில

மனிதரைப் போல வம்புகள் பேசி

பிரிந்திட வேணாம் அக்கச்சி! அக்கச்சி”[7]

என்ற பாடலில் மலர்களிடம் மனிதர்களின் பண்புகளை எடுத்துரைப்பதால் இப்பாடல் பண்புவமை என அறியமுடிகிறது.

**வாலியின் பாடலில் பண்புவுவமை அணி**

தலைவியின் அழகிற்குப் பூக்களின் பண்புகளை உவமை காட்கிறார் வாலி.

“புன்னகை முல்லை புது விழி குவளை

அழகிய அதரங்கள் அரவிந்தப் பூவோ

உன் கன்னங்கள் ரோஜா கொடி இடைஅல்லி

நிறத்தினில் நீயொரு செவ்வந்தி பூவோ

செண்பகம் ஒன்று பெண்முகம் கொண்டு”[8]

என்ற பாடலில் ஒரு பெண்ணின் புன்னகை, விழி, அதரங்கள், கன்னங்கள், முகம், அவளின் நிறம் ஆகியவற்றுக்கு முல்லை, குவளை, அரவிந்தப்பூ, ரோஜா, அல்லி, செவ்வந்தி, செண்பகம் போன்ற பூக்களின் பண்புகளோடு ஒப்பிட்டு கூறுவதால் இது பண்புவமை என அறியமுடிகிறது.

**வைரமுத்து பாடலில் பண்புவுவமை அணி**

தலைவனின் கருப்பு நிற அழகைத் தலைவி ஒருத்தி பண்புவமையாக்குகிறாள்.

“மீசை எவ்வண்ணம் அதுவே

உன் வண்ணம் வேறில்லை

யானை என்றுன்னைச் சொன்னால்

என்வாக்கு பொய்யில்லை"[9]

என்ற பாடலில், காதலனின் கறுமை நிறத்தை காதலி செல்லமாக மீசை, யானை, மேகம் போன்றவற்றோடு ஒப்பிட்டு கூறுவதால் பண்புவுவமை அணி இப்பாடலில் பயின்று வந்துள்ளதுதெளிவாகிறது.

**பா.விஜய் பாடலில் பண்புவுவமை**

"இனியவள் கூந்தலில் கருவண்ணம்
பாதத்தின் நடைகளில் பால்வண்ணம்
பெண்ணவள் நகங்களில் செவ்வண்ணம்
யாசகம் கேட்டு வாங்கிடுவேன்"[10]

என்ற பாடலடிகளில் காதலியின் கூந்தல், பாதம், நகமானது கருமை, வெண்மை, செம்மை போன்ற வண்ணங்களோடு ஒப்பிட்டு உவமைபடுத்தியுள்ளதால் பண்புவமை பயின்று வந்துள்ளது என அறியமுடிகிறது.இவ்வாறு திரைப்படப்பாடலாசிரியர்கள் பண்புவமையைப் பயன்படுத்தியுள்ளனர்.

**தொழில் உவமை அணி**

ஒன்று அல்லது ஒருவரின் தொழில் கருதிய உவமை தொழில் உவமையாகின்றது. இதனையும் திரைப்படப்பாடலாசிரியர்கள் தமது பாடல்களில் பயன்படுத்தியுள்ளனர்.

**பட்டுக்கோட்டைப் பாடலில் தொழில் உவமை அணி**

கணவன் தன் மனைவியின் செயல்களைத் துள்ளலை, பருவத்தில் உள்ள கெண்டை மீனோடு ஒப்பிட்டுக் கூறும் நிலையில்,

"பக்குவம் தவறாத பருவக்கெண்டை மீன் போல
பளிச்சிண்ணு துள்ளிடுவே!
பாஞ்சி மனசை அள்ளிடுவே!" [11]

என்ற பாடல் அடிகளில் கணவன் மனைவியின் தொழிற் செயல்பாடுகளை உவமையாகக் காட்டியுள்ள நிலையில் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரத்தால் தொழில் உவமை அணி பயன்படுத்தப்பெற்றுள்ளது.

**வாலியின் பாடலில் தொழில் உவமை அணி**

"அந்த வானம் அழுதாத்தான்

இந்த பூமியே சிரிக்கும்

வானம் போல் சிலபேர்

சொந்த வாழ்க்கையும் இருக்கும்

உணர்ந்தேன் நான்..." [12]

என்ற பாடலில் வானத்தின் தொழில் மழை பொழிவது அதனை அழுவதாகக் காட்டுகிறார் கவிஞர். அது அழுதால்தான் பூமி சிரிக்குமாம். அதுபோன்று தான் அழுது மற்றவர்களைச் சிரிக்கச் செய்யும் கதாபாத்திரம் தன்னை மழையின் அழுகையோடு தன் வாழ்க்கை நிலையையும் ஒப்பிட்டுப் பார்க்கிறது. இந்நிலையில் இப்பாடலில் தொழில் உவமை அணி பயின்று வந்துள்ளது.

**வைரமுத்துவின் பாடலில் தொழில் உவமை அணி**

வைரமுத்து தற்கால நிலைக்கு ஏற்ப தொழில் உவமை அணியைக் கையாண்டுள்ளார்.

"டெலிபோன் மணிபோல்

சிரிப்பவள் இவளா?

மெல்போன் மலர்போல்

மெல்லிய மகளா?"[13]

என்ற பாடலடிகளில் தலைவியின் சிரிப்புக்கு தொலைபேசி மணியின் ஒலியை ஒப்பிட்டுப் பாடலை எழுதியுள்ளார் வைரமுத்து. இதனால் இது தொழில் உவமை அணிக்கு சான்றாகிறது.

**பா. விஜய்யின் பாடலில் தொழில் உவமையணி**

கணவன் மனைவி இருவரின் உறவை வலுப்படுத்த தமிழ், அலை, சங்கக் கவி போன்றவற்றின் செயல்களோடு ஒப்பிட்டுப் பாடலைப் பாடியுள்ளார் பா. விஜய்.

"கொஞ்சி கொஞ்சி பேசி வரும்
தமிழ்போல
அஞ்சி அஞ்சி வீசி வரும்
அலைபோல
நெஞ்சில் என்றும் தங்கும்
சங்கக் கவிப் போல"[14]

என்ற பாடலடிகளில் கணவன் மனைவியின் நெருக்கம் மற்றும் நேசமிகு தொழில்களுக்கு உவமை காட்டப்பெற்றுள்ளது.

**பயனுவமை அணி**

ஒன்றின் செயலால் பயன் ஒன்று விளையும் நிலையில் உவமை அமைத்துப் பாடுவது பயன் உவமையாகின்றது. இவ்வகை உவமைகளையும் திரைப்படப் பாடலாசிரியர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

**கண்ணதாசன் பாடலில் பயனுவமை அணி**

"விண்ணில் நிலவும் - இந்த
மண்ணில் அழகும் ஒன்றன்றோ
அது யார் நானன்றோ"[15]

வானிலுள்ள நிலவானது மண்ணிற்கு அழகு என்னும் பயனைத் தருகிறது. அதுபோன்று தலைவியும் தலைவனால் பயன் பெற்று நிற்கிறாள் என்பதை இந்தப் பாடலடிகள் காட்டி பயன் உவமையணியாக நிற்கிறது.

**பட்டுக்கோட்டைப் பாடலில் பயனுவமை அணி**

அளவுக்கு மேலே செல்வம் எல்லோரிடத்திலும் சென்று சேருவதில்லை. அன்பில்லாதவரிடம் சேரும் செல்வம் ஒருவனை சுயநலக்காரன். கஞ்சன், திருடன் போன்ற பல பெயரைச் சூட்டுகிறது. அன்புள்ளவரிடம் சேரும் செல்வமானது எல்லோருக்கும் பகிர்ந்தளிப்பதால் வள்ளல் என்ற ஒற்றைப் பெயரை தக்க வைக்கும் காட்சியினை, விளக்குவனவாக

"அளவுக்கு மீறிச் சேர்த்து வைப்பதால்

ஆபத்து வரும் என்றே

அள்ளி அள்ளியே வழங்குகின்றார் இவர்

வள்ளல் வழி நின்றே!

இமயமலையும் இவரும் ஒன்றே!"[16]

என்ற பாடலடிகள் சுட்டும் இமயமலையானது பனிக்கட்டியைக் கூட சேர்த்து வைக்காமல், நாள்தோறும் வற்றாத நதிகளாய் மற்றவருக்கு உதவிக் கொண்டே இருக்கிறது. அதுபோலவே, மக்கட் பண்பு கொண்டவர்கள் மற்றவர்களுக்குத் தன் பொருளைத் தந்து பயன் விளைவிக்கிறார்கள் என்பதை உணர்த்துவதால் பயன் உவமையாகின்றது.

**பா.விஜய் பாடலில் பயனுவமை அணி**

காங்கேயம் காளை போல ஆண்மை, வீரம் கொண்டு பயன்தரும் நிலையில் பேரன் பிறந்தான் என்றும், காஞ்சிபுரம் மாலை மணம் போல அவன் பிறந்து புகழ் தருவான் என்றும் பயன்கள் கருதிய உவமைகள் பா.விஜய் பாடலடிகளில் அமைகின்றன.

"ஏ காங்கேயம் ஏ காங்கேயம் காளபோல

காஞ்சிபுர மாலபோல பொறக்கப் போறான்டி

ஒரு செல்லப் பேரான்டி"[17]

என்ற பாடல்களில் பயன் உவமை அணியை பா.விஜய் பயன்படுத்தியுள்ளார்.

**விரியுவமை அணி**

பாடலில் உவம உருபும், உவமானம், உவமேயம் ஆகிய எவையும் மறையாமல் விரிந்து நின்று ஒப்புமைபட வருவது விரியவுமை எனப்படுகிறது. இந்த விரியுவமை அடிப்படையில் பல பாடல்களைத் திரையிசைப் பாடலாசிரியர்கள் படைத்துள்ளனர்.

**கண்ணதாசன் பாடலில் விரியுவமை அணி**

கண்ணதாசன் விரியுவமையைக் கையாண்டுள்ளார்.இதனை,

"பட்டுப்போல கூந்தல் உண்டுதொட்டுப் பாரையா!
பக்க மேளம் போல என்னை தட்டிப் பாரையா!
உன்னாலே என்னாசை தீர்ந்தலென்ன
ஒண்ணோடு ஒண்ணாகச் சேந்தாலென்ன?"[18]

என்னும் பாடலடி விளக்கும். பக்க மேளம் என்ற இசைக்கருவி போன்ற இடையையும் கொண்டிருக்கும் பெண்ணொருத்தியை இன்பம் உண்டாகும் என்று விரித்து கூறியுள்ளதால் விரியுவமையானதை உணரலாம்.

**பட்டுக்கோட்டைப் பாடலில் விரியுவமை அணி**

தலைவியின் வடிவழகைத் தலைவன் விரியுவமை கொண்டு வருணிக்கின்றார்என்பதை,

"கண்கள் ரெண்டும் வண்டு நிறம்!
கன்னம் ரோஜாச் செண்டு நிறம்!
கலையே வடிவாய் வருவாள்! - அவள்
அங்கம் தங்க நிறம்!
விண்ணில் பிறந்த மின்னல் இறங்கி
மண்ணில் நடந்து வந்தது போல்,"[19]

என்ற உவம உருபு வெளிப்பட நின்ற இப்பாடல் விரியுவமையாகின்றது. விண்ணில் பிறந்த மின்னல் இறங்கி நடந்து வந்தது போல அவள் நடந்து வருகிறாள் என்பது இப்பாடல் தரும் விரியுவமை செய்தியாகும்.

**வாலியின் பாடலில் விரிஉவமை அணி**

விரக தாபத்தை விரித்து உவமைகளால் காட்டுகிறார் வாலி. இதனை,

"கிளியே பசும்பாலும் தேனும்
வெறுப்பாகிப் போனது
நிலவே பகல் நேரம் போலே
நெருப்பாகக் காயுது"[20]

என்னும் பாடல் சுட்டும் நிலவானது பகல் நேரம் போல காய்தலைச் செய்கிறது என்ற இந்தப்பாடலில் வாலியால் விரியுவமையானது கையாளப்பெற்றுள்ளது.

"பூப்போன்ற கண்ணாலேதான் பேசும் சிங்காரமேனி
அன்னம் போல் நம்மோடுதான் ஆடு எப்போதும் நீ" [21]

என்ற பாடலில் விரியுவமை பயன்படுத்தப்பெற்றுள்ளது.

"தேய்கின்றது பொன்மாலை நிலா
தேயாதது நம் ஆசை நிலா
இதுவானம் போலே வாழும் பாசம்" [22]

என்ற வாலியின் பாடலிலும் விரியுவமை அமைந்துள்ளது.

**வைரமுத்து பாடல்களில் விரியுவமை அணி**

கவிஞர் வைரமுத்து விரியுவமையைப் பயன்படுத்தியுள்ளார்.

"புலிவாலு மீச வச்ச ஆளு
பல்லாக்குப் போல ரெண்டு தோளு

பொண்ணுமச்சான் போறவழி பூவு உண்டாகும்

வீரமச்சான் கோபப்பட்டா பூமி ரெண்டாகும்”[23]

என்ற இப்பாடலடிகளில் பல்லாக்கு போன்ற தோள்கள் என்று வெளிப்படையாக விரித்து கூறியுள்ளதால் விரியுவமையானதை அறியமுடிகிறது.

“வானவில்லது போல பூமியில்

வாழ வந்தது கொஞ்சமே

வாழ்வில் இன்பம் கொஞ்சமே” [24]

என்ற பாடலில் விரியுவமை பயின்று வந்துள்ளது.

**பா. விஜய் பாடலில் வரியுவமை அணி**

“அன்பே நீ என் நெஞ்சை

போர் கப்பல் போல் வந்து

சொல்லாமல் கொள்ளாமல் தாக்காதே”[25]

என்ற பாடலடிகளில் காதலி தனது நெஞ்சைப் போரக் கப்பல் போல் சொல்லாமல் தாக்குவதாகத் தலைவன் பாடுகிறான். இப்பாடலடிகளில் போல என்ற உவமஉருபு வெளிப்படையாக வருவதால் இது விரியுவமை என ஆயிற்று. மேலும்,

“சூரியனைப்போல என் முன்பு வந்தாய்

பனித்துளி போலே பணிந்து விட்டேன்

போதி மரம் போலே

உந்தன் கண்கள் பார்க்க

உந்தன் பார்வையாலே

ஞானம் அடைந்தேன்” [26]

என்ற பாடலில் உவம உருபுகள் விரிந்து நின்று விரியுவமையாகின்றன.

"ஒன்னால ஒன்னால

ஏம் மனசு ஒன்னால

தறியில் ஓடும் நாடா போல

ஏன் ஓடுது அது ஏன் ஓடுது?"[27]

என்ற பாடலிலும்,

"ரோஜாச் செடி போலே

நீ பூக்கலாம் இங்கே

கற்றோடு போராடும் குணம் வேண்டுமே"[28]

என்ற பாடலிலும்,

"கவிஞன் மனசுபோல நீ

துருவித் துருவிப் பார்க்கிறாய்

கிராம மண்ணின் தென்றலாய்

உரசி உரசிக் கேட்கிறாய்"[29]

என்ற பாடலிலும்,

"ஏதாமரைப்பூவில் ஏறிய

கெண்டை மீனைப் போல

என் தாவணி உள்ளே

மோதிட வேண்டும் உந்தன் கண்கள்!"[30]

என்ற பாடலிலும்,

"உன்னையேத் தேடியே

உதிரம் கூச்சல் போடுதே

பிரசவ வலியைப் போல்

இந்தக் காதல் வலிக்குதே"[31]

என்ற பாடலிலும் விரியுவமைகள் பா. விஜய்யால் கையாளப்பெற்றுள்ளன.

**தொகையுவமை அணி**

திரைப்பாடல்களில் பொதுபண்பு, உவமஉருபு முதலியன மறைந்து வருவது தொகையுவமை எனப்படுகிறது.

**கண்ணதாசன் பாடல்களில் தொகையுவமைஅணி**

பொதுத்தன்மை வெளிப்பட்டு வராமல் ஆராய்ந்துணரும்படி மறைந்து நிற்பது தொகையுவமை ஆகும். கவிஞர் கண்ணதாசன் தமது பாடல்களில் தொகையுவமையைப் பயன்படுத்தியுள்ளார்.

"தமிழ்விடு தூது முந்நாளில்

கிளிவிடு தூது பின்னாளில்

நாய் விடு தூது நம்நாளில்-இது

நாகரிகம் தான் இந்நாளில்" [32]

என்ற பாடலடியில் முந்நாளில் மதுரைச் சொக்கநாதர் மேல் காதல் கொண்ட தலைவியோ, தமிழ்மொழியைத் தூதாக அனுப்பி காதலை வெளிப்படுத்தினாள். பின்னாளில், அழகர் மலை இறைவனிடம் காதல் கொண்ட தலைவியோ, கிளியைத் தூதாக அனுப்பி தன் காதலைச் சொன்னாள். இத்தூதுகள் போல இந்நாளில், நாயிடம் தூது சொல்லி அனுப்புவது நாகரீகமாகிவிட்டது என்ற இப்பாடல் உவம உருபை மறைத்து உரைப்பதால் இது தொகையுவமை ஆயிற்று.

"வானத்தின் மீதே பறந்தாலும்

காக்கை கிளியாய் மாறாது

கோட்டையின் மேலே நின்றாலும்

ஏழையின் பெருமை உயராது!" [33]

என்ற பாடலிலும் உவம உருபு மறைந்து வந்துள்ளதால் உவமத்தொகையாகின்றது.

**பட்டுக்கோட்டை பாடல்களில் தொகையுவமை அணி**

“புன்னைக் கொம்பிலே புரளும் பூங்கொடி
மண்ணில் சிந்திடும் வாச மலரும்
விண்ணோடு குலவும் கண்ணாடி நிலவும்
வீணாகும் மௌனம் ஏதுக்கோ?
வீசும் வேல்பார்வை ஏதுக்கோ?” [34]

என்ற பாடலில் வேல் போன்ற பார்வை என்று விரிந்து உவம உருபு நிற்காமல் வேல்பார்வை என்று மறைந்து நிற்கிறது. இவ்வகையில் இது தொகையுவமை ஆகிறது.

**வாலி பாடலில் தொகை உவமை அணி**

“பால் கொடுத்த நெஞ்சிலே
ஈரம் இன்னும் காயலே
பால் மனத்தைப் பார்க்கிறேன்
பிள்ளை உந்தன் வாயிலே
பாதை கொஞ்சம் மாறிப்போனால்
பாசம் விட்டுப் போகுமா
தாழம்பூவை தூரம் வைத்தால்
வாசம் விட்டுப் போகுமா” [35]

என்ற இப்பாடலடிகளில் தாழம்பூவை தூரம் வைத்தால் வாசம் விட்டுப்போகாத தன்மைப்போல பாதைக் கொஞ்சம் மாறிப்போனால் பாசம் விட்டுப்போகுமா என்று உவமை உருபு மறைய தொகை உவமை உருவாகிறது.

**இரத விதர உவமை அணி**

ஒன்றற் கொன்று மாற்றி அதாவது உவமேயத்தை உவமானமகாவும் , உவமானத்தை உவமேயமாகவும் கொண்டு பாடப்படுவது இதரவிதர உவமையணியாகும். இதனைத் திரையிசைப் பாடலாசிரியர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

**சமுச்சய உவமை அணி**

உவமை என்பது ஒருபுடை ஒற்றுமை உடையது. அவ்வாறு இல்லாமல் பல நிலைகளில் உவமை பொருளுடன் ஒத்து அமையும் நிலையில் பாடப்படும் அணிநலம் சமுச்சய உவமை என்பதாகும். பாடலாசிரியர்கள் இந்த வகை உவமையையும் தம் பாடல்களில் பயன்படுத்தியுள்ளனர்.

**கண்ணதாசன் பாடலில் சமுச்சயவுவமைஅணி**

“கண்கள் இரண்டில் கணை தொடுத்தாள்
கருநாகம் எனப் பின்னலிட்டாள்
குறுநகை என்னும் விஷம் கொடுத்தாள்
உயிர் கொண்டு விட்டாள்” [36]

என்ற பாடலில் கருநாகம் என்ற உவமையானது பின்னலுக்கும் ஆகியது. நஞ்சிற்கும் ஆகியது. என்பதை கவிஞர் கண்ணதாசன் தமது பாடலில் சமுச்சய உவமையைப் பயன்படுத்தியுள்ளார்என்பது புலனாகின்றது.

**வாலி பாடலில் சமுச்சயவுவமைஅணி**

“ஸ்டுடண்ட்ஸ் காதல் எல்லாம் சிட்டி பஸ்ஸுல
மினிஸ்டர் காதல் எல்லாம் ஏர் பஸ்ஸுல
குப்பன் காதல் குடிசையில
காதல் எங்கும் உண்டு கடவுள்போல்
வானம் இல்லாத தேசம் உண்டோடா

அதுபோல் காதல்தான் கடவுள்தான்” [37]

என்ற பாடலடிகளில் காதல் கடவுள்போல இருப்பதாக வாலி குறிப்பிடுகிறார். காதல் கடவுள் போல எங்கும் உண்டு. கடவுள் இல்லா உலகம் இல்லை. அதுபோல் காதல் .இல்லா உலகம் இல்லை என்று கடவுளையும் காதலையும் இருநிலைகளில் ஒப்புமை படுத்திக் காட்டுகிறது வாலியின் இப்பாடலடிகள்.

**வைரமுத்து பாடலில் சமுச்சயவுவமைஅணி**

“உப்பைப் போல எளிமையானவன்

சொந்தக்காரன்-பெண்

கற்பைப் போல வலிமையானவன்

சொந்தக்காரன்

திரியில் நெய்யாய் இருப்பவன் அல்ல

சொந்தக்காரன்

திரியாய் என்றும் இருப்பவனேதான்

சொந்தக்காரன்” [38]

என்ற பாடலில் திரி இருநிலைகளில் பொருளுடன் ஒப்புமையாகின்றது. அதாவது மறுப்பு நிலையில் ஒன்றும், ஏற்பு நிலையில் ஒன்றும் என்று திரி இங்கு இருநிலைகளில் ஒப்புமையாகின்றது.

முதலில் திரியில் நெய் ஒட்டியிருக்கும் வரை நெருப்பு எரியும். அதுபோன்றவன் அல்ல சொந்தக்காரன். எப்போதும் உடன் இருப்பவனே சொந்தக்காரன். விளக்கின் திரியாகவே என்றும் மாறாமல் இருப்பவனே சொந்தக்காரன் என்ற பாடலடிகளில் உவமையானது இரு நிலைகளில் ஒப்புமை படுகின்றது.

**உண்மை உவமை அணி**

ஒரு பொருளுக்கு வேறொரு பொருளை உவமையாகக் கூறிப் பின்னர் அதனை மறுத்துப் பொருளையே கூறி முடிப்பது உண்மை உவமையணி ஆகும். உண்மை உவமைகளைத் திரைப்படப் பாடலாசிரியர்களும் பயன்படுத்தியுள்ளனர்.

**கண்ணதாசன் பாடல்களில் உண்மையுவமை அணி**

உவமையைக் கூறி மறுத்துப் பொருளினையே கூறி முடிக்கும் தன்மையில் கண்ணதாசன் பாடலை எழுதியுள்ளார். இதனை,

"நிலவென்ன பேசும் குயிலென்ன பாடும்
மலரென்ன சொல்லும் மனதிலே
கதை பேசுமோ இன்பக் கவிபாடுமோ இங்கு
கண்ணோடு கண் சொல்லும் மொழியிலே!" [39]

என்னும் பாடல் சுட்டும் நிலவு பேசும் பேச்சு, குயில் பாடும் பாட்டு, மலர் சொல்லும் கதை போன்றன மனம் சொல்வது போல் அமையுமா, கவிதை பாடுவது போல அமையுமா என்று உண்மைப்பொருளை உணர்த்தி நிற்பதால் இது உண்மை உவமை அணி சார்ந்ததாக அமைகிறது.

**வாலி பாடலில் உண்மையுவமை**

"பசுந்தங்கம் புதுவெள்ளி மாணிக்கம் மணிவைரம்
அவையாவும் ஒரு தாய்க்கு ஈடாகுமா
விலைமீது விலைவைத்துக் கேட்டாலும் கொடுத்தாலும்
கடைதன்னில் தாயன்பு கிடைக்காதம்மா" [40]

என்ற பாடலில் தாயன்பு உவமைகளை விட உண்மையானது என்ற நிலையை உணர்த்துவதால் உண்மை அணியாகின்றது.

**பா.விஜய் பாடலில் உண்மையுவமை**

பா.விஜயும் உண்மை உவமையைக் கையாண்டுள்ளார். என்பதை,

“வண்ணப் வண்ணப் பூவெல்லாம்

வாசம் வீசி பூப் பூக்கும்

உன்னைப் போல ஒன்றுக்கும்

வாசம் வீசத் தெரியாதே

கோடி கோடி வார்த்தைகள் கோர்த்து

கொண்டு வந்தாலும் நீ சிணுங்கும்

ஓசை போல் அர்த்தம்

எதிலும் கிடையாதே” [41]

என்னும் பாடல் விளக்கும் வண்ணப் பூக்களில் வாசனைகள் இருந்தாலும் அது பெண்ணின் வாசனைப் போல் இருக்காது என்றும் கோடி வார்த்தைகளை ஒன்று சேர்த்தாலும் அவளின் சிணுங்களுக்கு ஈடாகாது என்று கூறும் வரிகளில் உவமைகளைப் பின்தள்ளப்பெற்று உண்மை நிற்பதால் உண்மை உவமையாகின்றது.

**மறுபொருளுவமை**

முன்னர் ஒரு பொருளுக்கு ஒப்பிட்ட உவமைக்கு நிகராகப் பின்னரும் ஓர் உவமையை வைப்பது மறுபொருளுவமை ஆகும்.

**பட்டுக்கோட்டைப் பாடலில் மறுபொருளுவமை**

‘நாயைப்போல் நன்றியுள்ளவனாக இரு என்று சொல்வதுண்டு ஆனால், அந்நாயானது முதலாளிக்கு உண்மையாகவும், தூங்காத காவலனாகவும் , மோப்பம் பிடிக்கவும் , திருடனைக் காட்டிக் கொடுக்கவும் பல வேலைகளாக அலையும் இதுபோல் மனிதர்களும் உண்டு. நாய் போல் வாழாமல் சமுதாயத்தில் நரி போலவும் எலி போலவும் வாழ வேண்டி இருக்கிறது. இந்நிலையில் நாய் முதலில் காட்டப்பெற்ற உவமையாகவும், நரி, எலி போன்றன பின்னவர் காட்டப்பட்ட உவமைகளாகவும் விளங்குகின்றன.

"நல்ல வழியிலே வாழ நெனச்சு

நாயா அலையாதே - ஆக

இந்நாளில் முடியாதே!

நரியைப்போல , எலியைப் போல

நடக்கத் தெரிஞ்சுக்கனும் தம்பி"[42]

என்ற பாடல் மறுபொருளுவமை அணிக்குச் சான்றாக அமைகின்றது.

**வாலி பாடல்களில் மறுபொருளுவமை அணி**

கவிஞர் வாலி பாடல்களிலும் மறுபொருள் உவமைகள் அமைந்துள்ளன.

"எனக்கொரு ஸ்நேகிதி ஸ்நேகிதி தென்றல் மாதிரி

நீ ஒரு பௌர்ணமி பௌர்ணமி பேசும் பைங்கிளி

உன் முகம் பார்க்கத் தோன்றினால்

பூக்களைப் பார்த்துக் கொள்கிறேன்" [43]

என்ற பாடலில் தோழியான தலைவி, தென்றல் போன்றவள் என்று முதலில் காட்டி, அதன்பிறகு அவளைப் பௌர்ணமி நிலவாகவும், பூக்களாகவும் உவமைகளைக் காட்டி மறுபொருளுவமையை வாலி படைப்பாக்கம் செய்துள்ளார்.

**வைரமுத்து பாடலில் மறுபொருளுவமை அணி**

"கண்கள் கார்த்திகை அகல்களோ- இல்லை

நட்சத்திரங்களின் நகல்களோ

விரல்கள் வெள்ளரிப் பிஞ்சுகளோ-இல்லை

வெடித்த பருத்திப் பஞ்சுகளோ" [44]

பெண்ணின் கண்களை முதலில் கார்த்திகை அகல்களுக்கு உவமையாக கூறிப் பின்னர் நட்சத்திரங்களின் நகல்களாக உவமைப்படுத்தி, விரல்களை

வெள்ளரிப் பிஞ்சுகளாகவும், பருத்திப் பஞ்சுகளாகவும் உவமைப் படுத்துவதால் மறுபொருளுவமை இப்பாடலடிகளில் பயின்று வந்துள்ளமையை அறியமுடிகிறது.

**பா. விஜய் பாடலில் மறுபொருளுவமை அணி**

"இசைத் தட்டுப் போலே
இருந்த என் நெஞ்சை
பறக்கும் தட்டாக
பறந்திட செய்தாய்" [45]

என்ற பாடலில் இசைத்தட்டிற்கு, பறக்கும் தட்டினை உவமையாக்கி மறுபொருள் உவமையை அமைத்துள்ளார் பா.விஜய்.

**புகழ்தலுவமை அணி**

பொருள் ஒருபுறமும், உவமை ஒரு புறமும் அமைய உவமையாக வந்ததை புகழ்ந்து உரைக்கும் நிலைப்பாடு புகழ்தலுவமை அணியாகின்றது.

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் தமது பாடலில் மகாவீரன் என்பதைச் சிறப்பிக்க மாவீரம் பொருந்தியர்கள் வழியில் பிறந்த மகாவீரன் என்று உவமைச் சிறப்பிப்பதால் புகழ்தல் உவமையாகின்றது.இதனை,

"மாமறவர் வழியில் பிறந்து சிறந்து
மகாவீரன் என விளங்குவேன்" [46]

என்பது புகழ்தல் உவமையாயிற்று.

"அந்திவெயில் பெற்ற மகளோ-குலுங்கும்
அல்லிமலர் இனத்தவளோ- குன்றில்
உந்திவிழும் நீரலையில் ஓடி விளையாடி
மணம் சிந்திவரும் தென்றல் தானோ" [47]

என்ற பாடலிலும் உவமை சிறப்பிக்கப்பெற்றுள்ளது. குன்றில் உந்தி விழும் நீரலையில் நீராடி மணம் சிந்திவரும் தென்றல் என்று உவமை சிறப்பிக்கப்படுவதால் புகழ்தல் உவமையாயிற்று.மேலும்,

"கல்லான அந்த அகலிகை போல்
தினம் நான்தான் மனம் துடித்திருந்தேன்
ஸ்ரீராமன் உன் கருணையினால் எந்தன்
சாபம் அது தீர்ந்து நின்றேன்" [48]

என்ற வாலியின் பாடலில் உவமையாக ராமன் காட்டப்படுகிறான். மேலும் அவனை ஸ்ரீராமன் என்று புகழ்வதால் புகழ்தலுவமை அணியாகின்றது.

"அடி கண்ணாடி பெட்டிக்குள்ள
தங்ககட்டி வச்சது போல்
கட்டழகு தெரியுது என் கண்ணுக்கு" [49]

என்ற பா. விஜய்யின் பாடலில் தலைவியின் அழகு தங்கம் போல உள்ளது. தங்கத்தைக் கண்ணாடிப் பெட்டிக்குள் வைத்தால் அது பல முறை பல கோணங்களில் தங்க அணியின் அழகைக் காட்டும். இதன்வழி உவமை சிறப்பிக்கப்பெற்றுள்ளது என்பதை உணரமுடிகின்றது. இதன் காரணமாக இப்பாடல் புகழ்தலுவமையாகின்றது.

**நிந்தையுவமை அணி.**

ஒரு பாடலில் பொருளுக்கு ஒப்புமையாக வந்த உவமையைப் பழித்து உவமிப்பது நிந்தை உவமையாகின்றது. முன் அணியின் தலைகீழ் மாற்றாக இந்த அணி விளங்குகிறது.

**பட்டுக்கோட்டைப் பாடல்களில் நிந்தை உவமை அணி**

"பந்தியில் முந்தும் வீரரே! - வெற்றி வீரரே!
விராதி வீரரே – நீங்க

படையிலே பிந்தும் சூரரே!

பச்சோந்தி போல் மாறும் பண்பாளரே! ” [50]

என்ற பாடலில் வீரர், சூரர், என்று சொல்லிப் பச்சோந்தி என்று நிந்தை செய்து பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடலைப் படைத்துள்ளமையால் இதுவும் நிந்தை உவமையாகின்றது.

**வாலியின் பாடலில் நிந்தையுவமை அணி**

“பால்போல் உள்ள வெண்ணிலவு

பார்த்தால் சிறு கறையிருக்கும்

மலர் போல் உள்ள தாய்மண்ணில்

மாறாத சில வலி இருக்கும்” [51]

என்ற பாடலில் உவமையாக அமைந்த வெண்ணிலவில் கறையிருக்கும் என்று உவமையினை நிந்தை செய்யும் நிலைப்பாடு காணப்படுவதால் இப்பாடல் நிந்தை உவமையாகின்றது.

**வைரமுத்துவின் பாடலில் நிந்தையுவமை அணி**

“அருவி போல அழுகுறனே

அறிந்து கொண்டால் ஆகாதோ

முந்தானையின் ஓரம் என்னை

முடிந்து கொண்டால் ஆகாதோ ”[52]

புறாவைப் போல வாழ்ந்தவள்

நிலாவைப் போலத் தேய்கிறேன்

வராத மேடை வந்தவள்

அனாதை போலப் பாடினேன்” [53]

என்ற பாடலடிகளில் அருவி அழுகை, நிலாத் தேய்வு போன்றன நிந்தை உவமையணி சார்ந்தனவாகும்.

**பா. விஜய் பாடலில் நிந்தை உவமை**

பா.விஜய் தன்னுடைய திரையிசைப்பாடல்களில் நிந்தை உவமையைக் கையாள்கிறார்.

"சோளக்காட்டு பொம்மைப் போல
சோக்காகத்தான் இருக்கியே
சோக்காகத்தான் இருக்கியே
செட்டிநாடு வீட்டப் போல
வீணாகத்தான் கெடக்கியே
வீணாகத்தான் கெடக்கியே" [54]

என்ற பாடலில் செட்டிநாடு வீடுகள் அழகாக பெரிதாக இருந்தாலும், அவற்றைப் பயன்படுத்துவார் இல்லாமல் அவை வெறுமனே கிடக்கின்றன. இவ்வகையில் உவமை காட்டப்படும்பொருளின் பயனற்ற தன்மையை இது சுட்டுவதால் நிந்தை உவமையாகிறது.

"பூச்சி மருந்து கலந்தாலும் பெப்சி கோலா கலர் போல
பெண்களுக்கு உங்க காதல் இனிக்கும்
நம்ம ஊரு பெண்ணெல்லாம் சதாம் உசேன் கதிபோல
பதுங்கு குழியில் ஒளிஞ்சாலும் சிக்கும்" [55]

என்ற பாடலிலும் நிந்தை உவமை பயன்படுத்தப்பெற்றுள்ளது.

**நியமவுவமை அணி**

இதற்கு இதுவே உவமை என உறுதி செய்து துணிந்து சொல்வது நியம உவமை அணியாகும்.

"கலை மங்கை உருவம் கண்டு காதல் கொண்டு

தணியாத மனித உள்ளம் எங்கே உண்டு - கண்ணே!

கமல மலரை வென்று திகழும் முகத்தில் ரெண்டு

கருவண்டு விளையாடும் காட்சி

வேறெதில் உண்டு”[56]

என்ற பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடலில் கமலமலரை வென்று முகம் திகழ்கிறது. இந்நிலையில் இது நியம உவமை அணியாகின்றது.

“மணிமாளிகை மாடங்களும்

மலர் துவிய மஞ்சங்களும்

தாய்வீடு போலில்லை - அங்கு

தாலாட்ட ஆளில்லை

கோவில் தொழும் தெய்வம்

நீயின்றி நான் காண வேறில்லை” [57]

என்ற வாலியின் பாடலில் அவள் தெய்வத்திற்கு ஒப்பாகி பின்பு அவளே சிறந்தவளாகிறாள். என்று நியமம் செய்யப்படுதல் நியம உவமை அணியாகின்றது.

**அநியம உவமை அணி**

நியமித்த உவமையைப் பொருந்தாதென்று விலக்கிப் பின்பு அது போன்ற பிறிதொன்றிருப்பின் அதுவும் ஒப்பாகும் என்பது அநியம உவமை ஆகும். அநியம உவமையை ஆய்வுக்களத்தின்படி ஆராய்கையில் கண்ணதாசன் பாடல்களில் பயன்படுத்தியுள்ளமை புலனாகின்றது.

கண்ணதாசன் தமது பாடல்களில் அநியம உவமையைப் படைத்துள்ளார்.என்பதை,

“நாயாய் மனிதன் பிறந்திருந்தாலும்

நன்றியெனும் குணம் நிறைந்திருக்கும்

நரியாய் அவனே உருவெடுத்தாலும்

தந்திர மாவது தெரிந்திருக்கும்

ஏதோ மனிதன் பிறந்துவிட்டான்-அவன்

ஏனோ மரம்போல் வளர்ந்து விட்டான்”[58]

என்ற பாடலடி விளக்கும். மனிதனின் பிறப்பை நாயோடும், நரியோடும் ஒப்பிட்டுப் பின்னர் அவற்றை விலக்கி பொருந்தாது எனக் கூறி மரத்தோடு ஒப்பிடுவதால் அநியம உவமை என அறியமுடிகிறது.

**ஐயவுவமை அணி**

பாடல்களில் உவமானத்தையும் , உவமேயத்தையும் ஐயுற்று உரைப்பது ஐய உவமையாகும். இதனையும் திரையிசைப் பாடலாசிரியர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

**கண்ணதாசன் பாடலில் ஐயவுவமை அணி**

“காமனோ இல்லை அவன் மாமனோ

கன்னியரைக் காதல் சிறையெடுக்கும் தேவனோ” [59]

என்ற பாடலில் காமனோ, மாமனோ, தேவனோ என்ற ஐயம் எழுப்பப்பட்டுள்ளதால் கண்ணதாசனின் இப்பாடலும் ஐய உவமை அணி சார்ந்து விளங்குகிறது.

“கரும்போ கனியோ கவிதைச் சுவையோ

விருந்தோ கொடுத்தாள் விழுந்தாள் மடியில்” [60]

என்ற பாடலிலும் ஐய உவமைகள் வந்துள்ளன.

**பட்டுக்கோட்டைப் பாடலில் ஐயவுவமை அணி**

காதல் வலையில் விழுந்த தலைவன். தலைவியின் அன்புப் பார்வைக்கு காத்துக்கிடக்கிறான். தலைவியின் கண்ணானது கண்ணொளியா, காந்தமா, மீனா என்ற ஐயம் ஏற்படும் நிலையில் தலைவன் அவளின் கண்ணின் அழகை ஐய உவமையாக்குகிறான்.

"காந்தமோ இது கண்ணொளி தானோ!

காதல் நதியில் நீந்திடும் மீனோ!" [61]

என்ற பாடலடிகளில் ஐய உவமைகள் வெளிப்பட்டு நிற்கின்றன.

**வாலி பாடல்களில் ஐயவுவமை அணி**

"இது கன்னங்களா இல்லை தென்னங் கள்ளா

இந்தக் கன்னமெல்லாம் உந்தன் சின்னங்களா" [62]

என்ற வாலியின் பாடல் அடிகளில் காதல் மிகுதியில் காதலன் தன் காதலியின் கன்னங்களை பார்த்து தென்னங்கள்ளா என சந்தேகத்துடன் உரைப்பதால் இது ஐயவுவமை என அறியமுடிகிறது.

**வைரமுத்து பாடல்களில் ஐயவுவமை அணி**

"அத்திப்பழம் சிவப்பா - இந்த

அத்தமக சிவப்பா" [63]

பெண்ணின் அழகில் பித்தாகிப் போன ஒருவன் அத்தை மகள் சிவப்பா அத்திப்பழம் சிவப்பா என சந்தேகத்துடன் உரைப்பது ஐய அணியாகின்றது.

"செம்மீனா விண்மீனா

கண்ணோடு வாழும் கலைமானா - இல்லை

கண்தோன்றி மறையும் பொய்மானா

கண்ணிரண்டும் இமைக்கும் சிலைதானா - என்

கனவுக்குள் அடிக்கும் அலைதானா" [64]

என்ற பாடலும் ஐயஉவமை அணி சார்ந்ததே ஆகும்.

"வாசமான முல்லையோ

வானவில்லின் பிள்ளையோ

பூவில் நெய்த சேலையோ

நடந்து வந்த சோலையோ" [65]

என்ற பாடலிலும் ஐய உவமை அமைந்துள்ளது.

"தேன்சுமந்த முல்லைதானோ

வானவில்லின் பிள்ளைதானோ

வண்ண வண்ண வைரம் எல்லாம

கண்ணில் கொண்டு வைத்தாளே" [66]

என்ற பாடலும் ஐய உவமை சார்ந்ததே ஆகும்.

**பா.விஜய் பாடலில் ஐய உவமை அணி**

"என்னைத் தாலாட்டும்

சங்கீதம் நீயல்லவா?

உன்னை சீராட்டும்

பொன்னூஞ்சல் நானல்லவா?

உன்னை மழை என்பதா

இல்லை தீயென்பதா?" [67]

என்ற பாடலில் மழை என்று சொல்வதா தீ என்று சொல்வதா என்று ஐயப்படுவதால் இது ஐய உவமை அணியாகின்றது.

இவ்வாறு ஐய உவமையணி அதிக அளவில் கவிஞர்களால் பயன்படுத்தப் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.

**தெரிதருதேற்றவுவமை அணி.**

ஒரு பாடலில் ஐயுற்றதனை ஆராய்ந்து தெளிவது தெருதருதேற்றவுவமை அணியாகும்.

**கண்ணதாசன் பாடலில் தெரிதருதேற்றவுவமைஅணி**

"பேசுவது கிளியா - இல்லை

பெண்ணரசி மொழியா?

கோயில் கொண்ட சிலையா

கொத்து மலர்க் கொடியா?

. செண்டாடும் சேயிலைதானா?

தெய்வீக காதலி தானா?''

செந்தூரம் கொஞ்சும் முகத்தில்

செவ்வாய் மின்னும் தேன்மொழி தானா?" [68]

காதலன், இனிமையான மொழி பேசியது யார் என்று தெரியாமல் ஐயுற்றுத் தவிக்கிறான் நிறைவில் இது கிளியின் மொழி இல்லை என்று துணிந்து பேசியது தன் காதலியே என்று தெளிவடைவதால் தெரிதருதேற்ற உவமை இதனுள் பயின்ற வந்தள்ளதை அறியமுடிகின்றது.

இவ்வுவமையானது குறைந்த அளவே திரைப்படப் பாடலாசிரியர்களால் பயன்படுத்தப்பெற்றுள்ளது.

**இன்சொல் உவமை அணி**

ஒரு பொருளுக்கு அதனினும் சிறந்த ஒன்றை முதலில் உவமையாக்கிப் பின்னர் அவ்வுவமையின் சிறப்பு பொருளுக்கு ஒப்பாகுமே அன்றி உயர்வாகாது எனப் பொருளை உவமையை விடச் சிறப்பித்துக் கூறுவது இன்சொல் உவமை ஆகும்.

**பட்டுக்கோட்டை பாடலில் இன்சொல் உவமை அணி**

மானைப்போல் துள்ளி விளையாடுகிறாள் ஒரு மங்கை. அவளின் கண்கள் மீனை ஒத்துள்ளது. அவளின் மௌனம் பெரும் வீரனையும் வென்று விடும். தேன்கலந்த மலரும் அவள் கூந்தல் சேரும் இத்தனைப் பெருமைகளும் தாண்டி

அவள் முகத்தில் நாணமாய் வெளிப்பட்டு நிற்கும். இதனால் அவள் உவமைகளை விட உயர்வானவள் ஆகிறாள்.

"மீனுடன் மானும் மங்கை விழிகளில் துள்ளுதே!
விந்தை மிகும் மௌனம் வீரத்தை வெல்லுதே!
தேனைச் சுமந்த மலர் மாலை சுமந்த அவள்
நாணிக் குனிந்த முகம் நல்ல பண்பைச் சொல்லுதே!" [69]

என்ற பாடலில் பொருளின் உயர்வானது இன்சொல் உவமையாகின்றது.

**பா. விஜய் பாடலில் இன்சொல் உவமை அணி**

"எங்கள் வீட்டில்
எல்லா நாளும் கார்த்திகை!
எங்கள் நிலவில்
என்றும் இல்லை தேய்பிறை!
கிளி கூட்டம் போல்
எங்கள் கூட்டமே
இது ஆனந்தப் பூந்தோட்டம் அன்பின் ஆலயம்!" [70]

என்ற பாடலில் பல உவமைகள் பயன்படுத்தப்பட்டாலும் இல்லத்தின் மகிழ்ச்சி அவற்றை விட அதிக அளவில் காட்டப்படுவதால் இது இன்சொல் உவமை அணியாகிறது.

"ஆனந்தம் இது ஆனந்தம்
நெஞ்செல்லாம் பேரானந்தம்
எங்களைப்போல் சொந்தங்களை
யாரும் இங்கு பார்த்ததுண்டா?
கோபுரம் தான் இங்கு இல்லை

இதுபோலே கோயிலுண்டா"[71]

என்ற பாடலில் கோபுரம் இல்லாத கோயில் என்று பாசம் மிக்க வீடு இன்மொழியால் சுட்டப்படுவதால் இன்சொல் உவமையானது.

**விபரீத உவமை அணி**

தொன்று தொட்டு உவமையாக்கி வருவதனைப் பொருளாக்கி, பொருளாய் வருவதனை உவமையாக்கி மாற்றிப் புனைவது விபரீத உவமை அணியாகும்.

"இனிவரும் எந்த பிறவியிலும்
உனைச்சேரக் காத்திருப்பேன்
விழிமூடும் இமை போல
விலகாமல் வாழ்ந்திருப்பேன்
உன்னைபோல தெய்வம் இல்ல
உள்ளம் போல கோவில் இல்ல"[72]

என்ற வாலியின் பாடலடிகளில் கடவுள் போல மனிதர் என்பது மாறி உன்னைப் போல தெய்வம் இல்லை என வந்துள்ளது, மேலும், கோவில் போல உள்ளம் என்ற உலக வழக்கு உள்ளம் போல கோவில் இல்லை என வந்துள்ளது. இதனால் இப்பாடல் விபரீத உவமை அணிக்குச் சான்றாகிறது.

**இயம்புதல் வேட்கையுவமை**

உவமேயமாகிய பொருளை இன்னபொருள் போல் உள்ளது எனச் சொல்ல விரும்புகின்றது என்னுள்ளம் என்று சொல்லுதல் இயம்புவதல் வேட்கையுவமை.

பா.விஜய்யின் திரைப்படப்பாடலில் இயம்புதல் வேட்கைஅணி அமைந்துள்ளது.

"தீபத்தைப் போலே நீ இருந்தால்
உனக்கு பதில் நான் உருகிடுவேன்
பூவனம் போலே நீ இருந்தால்

பூவுக்கு பதில் நான் உதிர்ந்திடுவேன்" [73]

என்ற பாடலில் தான் உருகுவதாகவும், உதிர்வதாகவும் இயம்புதல் வேட்கையைப் பதிவு செய்துள்ளார் பா. விஜய்.

**பலபொருளுவமை அணி**

பாடலில் ஒரு பொருளுக்குப் பலவுவமைகளைக் காட்டுவது பல்பொருள் உவமை அணியாகும். இதனைக் கவிஞர்கள் பெரிதும் கையாண்டுள்ளனர்.

**கண்ணதாசன் பாடலில் பலபொருளுவமைஅணி**

"உருவத்திலே இவன் மனிதன்- கொண்ட

உள்ளத்திலே ஒரு பறவை

பருவத்திலே ஒரு குழந்தை - நெஞ்சின்

பாசத்திலே ஒரு தந்தை

அன்பே இவனது தூதன்-நல்ல

அறமே இவனது வேதம்

இறக்கம் இவனது கோயில் - அதில்

ஏமாற்றும் இவன் தெய்வம்"[74]

என்ற பாடலில் ஒரு ஆண்மகன் கவிஞரின் பார்வையில் பலவாறு உவமிக்கப்படுகிறான்.

ஒரு ஆண், மனிதனாகவும், பறவை, குழந்தை, தந்தை, தூதன், வேதம், கோயில், தெய்வம் போன்றவன் என்று பல பொருட்களில் உவமைகளைச் சொல்வதால் இப்பாடல் பல பொருளுவமையைச் சார்ந்ததாகும்.

**வாலி பாடலில் பல்பொருள் உவமை அணி**

"இரவினில் ஊருக்கே வெளிச்சம் பாய்ச்சும்

நிலவினைப் போலவள்

இதழ்களில் யாருக்கும் அமுதம் வார்க்கும்

மலர்களும் ஆனவள்

இளமையின் பயிருக்கு வானம் தூவும்

மழையினைப் போலவள்

இனித்திடும் வாலிபம் தினமும் குளிக்கும்

தேன் நதி ஆனவள்”[75]

என்ற பாடலில் தலைவியின் இயல்புகள் பல்பொருள்கள் கொண்டு உவமிக்கப்பெற்றுள்ளதால், பல்பொருள் உவமை அணி இப்பாடலடிகளில் இடம் பெற்றுள்ளது என்பதை அறிய முடிகின்றது.

**வைரமுத்து பாடலில் பலபொருளுவமை அணி**

“சேடப்பட்டி மூக்கழகி செம்பருத்தி நாக்கழகி

சீமையில் பேரழகி செஞ்சுவச்ச மாரழகி:” [76]

என்ற பாடலிலும்,

“உப்பைப்போல எளிமையானவள் சொந்தக்காரன் - பெண்

கற்பைப் போல வலிமையானவன் சொந்தக்காரன்” [77]

என்ற பாடலிலும், பலபொருள்கள் உவமைகளாக ஆக்கப்பெற்றுள்ளன.

**பா.விஜய் பாடலில் பலபொருளுவமை அணி**

பா.விஜய் தனது பல பாடல்களில் பலபொருளுவமை அணியைக் கையாண்டுள்ளார்.

“பூவாசம் தேன்வாசம் பால்வாசமே

பெண்வாசம் உன்னோடு கண்டேனடி” [78]

என்ற பாடலில் பூ, தேன், பால் ஆகியன பெண் வாசத்திற்கு உவமைகளாகி நிற்கின்றன.

“கொஞ்சி கொஞ்சிப் பேசம் மைனாவே

ஜில்வென்று சிரிக்கும் ரோஜாவே

புத்தம் புது வாசமுள்ள பூங்காவே

சந்தோஷம் தானே சிறுபூவே” [79]

என்ற பாடலில் மைனா, ரோஜா, பூங்கா, சிறு பூ போன்றன தலைவிக்கு பலபொருள் உவமையாகின்றன.

**விகாரவுவமை அணி**

ஒரு பொருளுக்கான பல உவமைகளில் ஒன்றை மட்டும் விகாரப்படுத்தி உரைப்பது விகாரஉவமை அணியாகும்.

“மூச்சைப் போல உனைத்தானே

இங்கு தினம் வாங்கும் இந்த நுரையீரல்

நீயில்லாமல் இருந்தாலே இந்த

நுரையீரல் ஒரு குறை ஈரல்” [80]

என்ற வாலியின் பாடலில் உவமையானது விகாரப்படுத்தி உரைக்கப் பெற்றிருப்பதால் இப்பகுதி விகார உவமைக்கு எடுத்துக்காட்டாகின்றது.

“ஆணின் இனம் அது கிளை மாதிரி

பெண்ணின் இனம் அது வேர் மாதிரி

கிளை பேசினால் அதை ஊர் கேட்குமே

வேர் பேசினால் அதை யார் கேட்பது” [81]

என்ற பாடலடிகளில் கிளை, வேர் என்ற இரு உவமைகளில் வேர் என்ற உவமைக்கு மதிப்பில்லா நிலை காட்டப்பெற்றுள்ளதால் இது விகார உவமையாகின்றது.

"முத்தம் வைக்கலாம் சின்ன

முத்தம் வைக்கலாம்

பூவைப்போலே அல்ல

ஒரு புயலைப்போலே" [82]

என்ற பாடலில் முத்தத்திற்கு, பூ, புயல் என்ற இரண்டு காட்டப்பெற்று புயல் மட்டும் விகாரப்படுத்திக் காட்டப்பெற்றுள்ளதால். இதனை விகார உவமை எனக் கொள்ளலாம்.

**மோகவுவமை அணி**

ஒரு பொருளின் மேல் கொண்ட மோக மயக்கம் தோன்ற உவமை கூறுவது மோக உவமை அணி ஆகும். இதனைத் திரைப்படப்பாடலாசிரியர்கள் பல பாடல்களில் பயன்படுத்தியுள்ளனர்.

**கண்ணதாசன் பாடல்களில் மோகவுவமை அணி**

"தொட்டுப் பாருங்கள் - ஜோடி

பூவைப்போலக் கன்னங்கள்

தட்டிப் பாருங்கள் - தாளம் போடும்

ஆசைக் கிண்ணங்கள்!"[83]

என்ற பாடலில் தலைவியின் உருவம் தலைவனுக்கு மோகத்தைத் தரும் நிலையில் மோக உவமையாகின்றது.

"பூஜைக்கு வந்த மலரே வா

பூமிக்கு வந்த நிலவே வா

பெண்ணென்று எண்ணிப்பேசாமல் வந்த

பொன்வண்ண மேனிச்சிலையே வா!" [84]

என்ற பாடலும் மோகவுவமை சார்ந்ததே ஆகும்.

**பட்டுக்கோட்டைப் பாடலில் மோகவுவமை**

காதல் வயப்பட்ட தலைவி ஆடும் நாடகம் ஒரு ரகசியம். அவள் நடையோ நடனம் அவள் ஒரு பேரழகு ஆனந்த லோகம். ஆண்கள் கொண்டாடும் அவளொரு கோயில் அன்பு குடிகொள்ளும் பேரின்ப வாயில் என்ற தலைவன் மோக வயப்பட்டு உவமைகளால் தலைவியின் அழகைப் பாடுகிறான்.

“நானாடும் நாடகம் ரகசியந்தான் - போடும்
நடையெல்லாம் நடனந்தான்!
என்னைக் கண்டாலே ஆனந்தலோகம் - உங்கள்
கண்முன்னே தான் வந்து மோதும்!
ஆண்கள் கொண்டாடும் பெண்ணென்ற கோயில்
அன்ப குடிகொள்ளும் பேரின்ப வாயில்! —கண்டு
ஆடாத ஆளில்லை! பேசாத வாயில்லை!
பாடாத ஏடிலில்லை பாரில்”[85]

என்ற பாடல் மோக உவமைக்கு சான்றாக அமைகின்றது.

**வாலி பாடலில் மோக உவமை அணி**

தலைவி ஒருத்தி தன்னுடைய மோகத்தை வெளிப்படுத்தும் நிலையில் வாலி மோக உவமையணியைக் கையாண்டுள்ளார்.இதனை,

“தெப்பக்குளம் மேலே செங்கமலம் போலே
உன் மடியில் நானும் வந்து ஆட வேணும் மாமா
கண்ணுப்பட்ட தேகம் புண்ணுப்பட்ட நேரம்
பொண்ணுப்பட்ட பாடு என்ன சொல்லக் கூடும்
மெல்ல மெல்ல சூடு ஏறும் மேலும் சொல்லத்தான்” [86]

என்னும் பாடலடிகள் விளக்கும்.

**வைரமுத்து பாடல்களில் மோகவுவமை**

கவிப்பேரரசு வைரமுத்து தன்னுள் இருக்கும் காதலியின் இருப்பை மோகத்துடன் பின்வரும் பாடலில் எடுத்துரைக்கிறார்.

"மண்ணைத் திறந்தால் நீர் இருக்கும் - என்
மனதைத் திறந்தால் நீ இருப்பாய்
ஒலியைத் திறந்தால் இசைஇருக்கும்-என்
உயிரைத்திறந்தால் நீ இருப்பாய்" [87]

என்ற பாடலில் மோக உவமை வெளிப்படுகிறது.

"பஞ்சுமெத்த கால்முளைச்சு நடந்துவந்தது போல –நீ
சுத்தி வந்து இழுக்கிறியே சும்மாகெடந்த ஆள" [88]

என்ற பாடலடிகளிலும்,

"அச்சு வெல்லப் பேச்சுல ஆளைத் தூக்குற
கொஞ்சநேரம் பாருன்னா கூலி கேக்குற" [89]

என்ற பாடலிலும்

"மழையில் நனையும் பனி மலரைப் போல-என்
மனதில் நனைந்தேன் உன் நினைவில் நானே
உலகைத் தழுவும் நல்இரவைப் போல-என
உள்ளே பரவும் ஆண் உயிரும் நீயே" [90]

என்ற பாடலிலும்

"நான் மடியேந்தி மண்போல் யாசித்தேன்
என் மழைத்துளியே ஏன்தான் யோசித்தாய்" [91]

என்ற பாடலடிகளிலும்,மோக உவமைகள் பயின்று வந்துள்ளன.

**பா. விஜய் பாடல்களில் மோகவுவமை**

"ஒரு வயசு ஆனது போல் இன்பம் இருக்கு
ஒரு கோடிகாலம் வாழ ஆசை எனக்கு" [92]

என்ற பாடலிலும்,

"பெண்கள் வாசம் இல்லாது போனால்
ஊரில் கவிதையில்லை
எங்கள் பேச்சைப் போல
சில்லென்ற கவிதை நீங்கள் எழுதவில்லை" [93]

என்ற பாடலிலும் மோக உவமையைக் கையாள்கிறார் பா. விஜய்.

**அபூதவுமை**

உலகில் முன்பு இல்லாத ஒன்றை உவமிப்பது அபூதவுவமை ஆகும். இதனை இல்பொருளுவமை என்றும் கூறுவர்.

"தங்கச் சலங்கை கட்டித்
தழுவுது தழுவுது பூச்செண்டு
கண்ணை நடக்க விட்டு
கலங்குது மயங்குது பொன் வண்டு!" [94]

என்ற கண்ணதாசன் பாடலில் கண் என்பது பார்க்கும் இயல்பில் இருந்து நடக்கும் இயல்பினுக்கு அபூதமாகக் காட்டப்பெற்றுள்ளதால் இது அபூத உவமையாகும்.

"நடமாடும் தங்கக் குடமாக
நதியோடும் செல்லும் படகாக
தொட்டு வரும் காற்றில் கட்டி

ரதமாகத் தொடருவதென்ன துணையாக?" [95]

என்ற கண்ணதாசனின் பாடலடிகளிலும் தங்கக் குடம் நடப்பது என்ற நிலையில் அபூத உவமை ஆகின்றது.

"பாலுற்றி உழவு செய்வார்

பனிபோல் விதை நடுவார்"[96]

என்ற கண்ணதாசன் பாடலடிகளில் பனிபோல் விதை என்பது அபூத உவமை சார்ந்ததாகும்.

"தண்ணீர் தணல்போல் எரியும்-செந்

தணலும் நீர்போல் குளிரும்!" [97]

என்ற கண்ணதாசன் பாடலடிகளிலும் அபூத உவமை அமைந்துள்ளது.

"பெண்ணில்லாத ஊரிலே

பிறந்து வந்தாற்போலவே

வண்ணம் போடும் வெண்ணிலா

வாராய் சேதி கூறுவேன்!" [98]

என்ற பாடலில் பெண்ணில்லாத ஊரில் பிறந்தவள் போல என்பது அபூத உவமையாகப் பயின்று வந்துள்ளது.

**வாலி பாடலில் அபூத உவமை**

"குத்தால மேகமெல்லாம் கூந்தலிலே நீந்திடுவரும்

கொய்யாத மாங்கனியை கொடியிடைதான் ஏந்திவரும்

மத்தாப்பு வானமெல்லாம் வாய்சிரிப்பு காட்டி வரும்

மானோடு மீனிரண்டை மைவிழியோ கூட்டி வரும்

பொன்னாக ஜொலிக்கும் பெண்பாவை அழகு

ஒண்ணாகக் கலந்த முந்நூறு நிலவு

பொட்டோடு பூவும் கொண்டு தாவும் மயில்தான்”[99]

என்ற பாடலில் முன்னூறு நிலவுகள் ஒன்றாதல், மானோடு மீன், கொய்யாத மாங்கனி, குற்றால மேகம் கூந்தலில் இருத்தல் போன்ற அபூத உவமை சார்ந்தனவாகும்.

**பலவயிற் போலியுவமை**

ஒரு தொடராகப் பல உவமைகள் வந்து, அவ்வுவமை தோறும் உவமஉருபு வந்தமைவது பலவயிற்போலி உவமை அணியாகும்.

**கண்ணதாசன் பாடலில் பலவயிற்போலி உவமைஅணி**

“தேரு வந்தது போலிருந்தது

நீ வந்த போது

போதை வந்தது போலிருந்தது

நான் கண்டபோது-என்” [100]

என்ற கண்ணதாசன் பாடலடிகளில் பலவயிற் போலியுவமை அமைந்துள்ளது.

**பட்டுக்கோட்டைப் பாடலில் பலவயிற் போலியுவமை**

தலைவி தாமரை மலரைப்போன்ற நிறத்தை பெற்றவள். அவள் விண்மீனைப்போல் கண் சிமிட்டும் நாணம் கொண்டவள். அவள் கொடியைப் போன்ற சிறிய இடையை பெற்றிருக்கிறாள். அவள் தங்கத்தைப்போல் வயதாகாக மதிப்பு கொண்டவள். அவள் ஒளியைப் போல் கலங்கமற்ற அறிவைப் பெற்றுள்ளாள். இவ்வாறு நற்குணங்களைப் பெற்று விளங்கும் நாயகியின் காவியம் அவள் என்று பலவயிற்போலி உவமையாக அமைகின்றன. இதனை,

“காலத் தாமரைபோலத் தோன்றும் நிறமாகியே!

வானத் தாரகை நாணத்தோன்றும் முகமாகியே

வஞ்சிக் கொடிதனை மிஞ்சித் திகழும் வடிவாகியே!

வண்ணத் தங்கம் மங்கத் திகழும் வயதாகியே!

அறிவாகியே ஒளியாகியே தெளிவாகியே!" [101]

என்ற பாடலடிகள் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் பலவயிற் போலி உவமை அணி சான்றாகிறது.

"நளின நடை அன்னம் போலே
நெளியும் இடை மின்னல் போலே
ஆடை கொடி மின்னல் போலே
அன்பு மொழி கன்னம் போலே" [102]

என்ற பட்டுக்கோட்டை பாடலிலும் பலவயிற்போலி உவமை அமைந்துள்ளது.

"வெல்வெட்டுபோல் வண்ண முகம்
கல்வெட்டு போல் நின்றது
சிக்கென்று நானும் நீயும்
ரெக்கை கட்ட வேண்டும்
சிட்டுப்போல் எட்டுத்திக்கும்
சுற்றிப் பார்க்க வேண்டும்" [103]

என்ற வாலியின் பாடலிலும் பலவயிற்போலி உவமை பயன்படுத்தப்பெற்றுள்ளது.

**வைரமுத்து பாடலில் பலவயிற் போலியுவமைஅணி**

"டெலிபோன் மணிபோல்
சிரிப்பவள் இவளா
மெல்போர்ன் மலர்போல
மெல்லிய மகளா" [104]

என்ற பாடலில் வைரமுத்து பலவயிற் போலி உவமைகளைப் பயன்படுத்தியுள்ளார்.

“கடலோடு அலைபோல

உறவாட வேண்டும்

இலைமூடும் மலர்போல

எனைமூட வேண்டும்”[105]

என்ற பாடலிலும்,

“எண்ணெயும் தண்ணியும் ஒண்ணாக

கலந்ததில்ல கலந்ததில்ல

நெல்லப்போலக் கோரையிருக்கும்

வெளைஞ்சதில்ல வெளைஞ்சதில்ல”[106]

என்ற பாடலிலும்,

“ஊசி துளைத்த குமிழிகள் போலே

உடைவது உடைவது வாழ்வு

காற்று துரத்தும் கடலலை போலே

தொடர்வது தொடர்வது காதல்” [107]

என்ற பாடலிலும் பலவயிற்போலி உவமை பயன்படுத்தப்பெற்றுள்ளது.

“நம்ம தோழன் பாரு தோழன் பாரு

பால் வடியும் மொகத்தப் பாரு

பசுவப் போல குணத்தப் பாரு

பச்சைரத்தம் ஒழுகும் போதும்

பச்சைக் குழந்தைச் சிரிப்பப் பாரு”

என்ற பாடலிலும்

“மழை போல் மழை போல் வந்து

மண்ணோடு விழுந்து விட்டேன்

மனம்போல் மனம் போல் உந்தன்

ஊனோடு உறைந்து விட்டேன்" [108]

என்ற பாடலிலும்

"பாம்பு போலே ஊர வேண்டும்

பறவை போலே மாறவேண்டும்

சிங்கம் போலே பார்வை வேண்டும்

புலிகள் போலே பாய வேண்டும்:" [109]

என்ற பாடலிலும்

"சிறுபிள்ளை போல் மனம்

இருந்தால் துயரில்லையே

பறவையைப் போல்

உடலிருந்தால் பயமில்லையே" [110]

என்ற பாடலிலும் பலவயிற்போல உவமை இடம்பெற்றுள்ளது.

**பா. விஜய் பாடலில் பலவயிற் போலியுவமை அணி**

"போர்க் கப்பல் போல இரு இமை

மீன் தொட்டி போல இரு விழி

பால்சிப்பி போல இரு இதழ்

சேர்ந்த அழகி அவள் தான்

மின் காந்தம் போல ஒரு முகம்

ஊசிப் பூ போல ஒரு இடை

தங்க தூண் போல் ஒரு உடல்" [111]

என்ற பாடலில் பா.விஜய் அடிக்கு அடி உவமையையும், உவம உருபையும் கையாண்டு பலவயிற்போலியுவமை அணியைப் பயன்படுத்தியுள்ளார்.

"பட்டுபோல் முகத்தை வைத்தான்
பவளம்போல் இதழை வைத்தான்
முத்துப்போல் சிரிக்க வைத்தான்
முன்னாலே என்னை வைத்தான்" [112]

என்ற பாடலடிகளிலும், பலவயிற்போலியுவமை அணி பயன்படுத்தப்பெற்றுள்ளது.

**ஒரு வயிற் போலியுவமை**

ஒரு தொடரில் பல உவமைகள் வந்தும் வந்த உவமைகள் தோறும் உவமைச் சொல் தோன்றாமல் ஒரு உவமைச் சொல் மட்டும் வருவது ஒரு வயிற் போலியுவமை எனப்படுகிறது.

"ஓடைத் தாமரை ஏடுபோல் -முக
சாடை காட்டிடும் தங்கக் கலசமே
ஒய்யார நிலையே உண்டாக்கும் சிலையே
ஓயாத குறும்பும் ஏதுக்கோ?
உல்லாச மயக்கம் ஏதுக்கோ?" [113]

என்ற பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடலில் ஒருவயிற்போலி உவமை இடம்பெற்றுள்ளது. தங்கக்கலசம், சிலை போன்ற உவம உருபுகள் ஏற்கா நிலையில் தாமரை ஏடு போல என்று ஒரு வயின் உவம உருபு ஏற்றதால் இப்பாடல் ஒருவயிற்போலியுவமையாகின்றது.

**கூடாவுவமை அணி**

ஒரு பொருளுக்குப் பொருந்தாத தன்மையைப் பொருத்துவதாகக் கூறுவது கூடாவுவமை அணியாகும்.

**பட்டுக்கோட்டைப் பாடலில் கூடாவுவமை**

"முடியிருந்தும் மொட்டைகளாய்
மூச்சிருந்தும் கட்டைகளாய்
விழியிருந்தும் பொட்டைகளாய்
விழுந்து கிடக்கப் போறீங்களா"[114]

என்ற பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடலில் முடியிருந்தும் மொட்டை, மூச்சிருந்தும் கட்டை, விழியிருந்தும் பொட்டை என்ற நிலையில் கூடா உவமைகள் பயன்படுத்தப்பெற்றுள்ளன.

"துப்பாக்கி தூக்கி வந்து குறி வைத்து தாக்கினால்
தோட்டாவில் காதல் விழுமா
செம்மீன்கள் மாட்டுகின்ற வலைகொண்டு வீசினால்
விண்மீன்கள் கையில் வருமா" [115]

என்ற பாடலில் தோட்டாவை அனுப்பி காதல் கொள்ள இயலாது, விண்மீன்கள் வலையில் மாட்டாது போன்ற கூடாஉவமை அமையப்பெற்றுள்ளது.

**வைரமுத்து பாடலில் கூடாவுவமை அணி**

கவிப்பேரரசு வைரமுத்து தமது பாடலில் கூடா உவமையைத் தொகை உவமையாக்கிப் படைத்துள்ளார்.

"கடவுள் பாதி மிருகம் பாதி
கலந்து செய்த கலவை நான்
வெளியே மிருகம் உள்ளே கடவுள்
விளங்க முடியாக் கவிதை நான்" [116]

என்ற பாடலில் கடவுள் பாதி, மிருகம் பாதி என்ற முறைமை கூடாவுவமையாகின்றது.

“கல்லாக் கெடந்து பூவானா

ரெண்டாந் தடவ ஆளானா

கரும்பாளையைப் போலிருந்தா

சுக மாம்பழமாக் கனிஞ்சா” [117]

என்ற பாடலடிகளிலும் கூடாவுவமைகள் வைரமுத்துவால் கையாளப்பெற்றுள்ளன.

“அமுதென்பதா-விஷமென்பதா-உனை

அமுத விஷமென்பதா” [118]

என்ற பாடலடிகளில் கூடா உவமை இடம்பெற்றுள்ளது. இவ்வாறு கூடாவுவமைகள் திரைப்படக் கவிஞர்களால் எடுத்தாளப்பெற்றுள்ளன.

**பொது நீங்குவமை**

உவமானத்தைக் கூறி மறுத்துப் பின்பு உவமேயத்தையே உவமையாக உரைப்பது. இவ்வுவமை அணியைக் கவிஞர்கள் கையாளவில்லை

**மாலை உவமை**

ஒரு பொருளுக்கு ஒப்புமையாகப் பல உவமைகளை ஒரு மாலை போலத் தொடர்ச்சிப்படத் தொடுத்து இறுதியில் பொருள்களைச் சேர்த்து முடிப்பது மாலை உவமை அணியாகும்.

“தாய்மையில்லாமல் யாரும் இங்கில்லை

தாயை வணங்காத கடவுள் இங்கில்லை

தாய்ப் பால் போலே தீர்த்தம் வேறில்லை - அவள்

வாய்ச்சொல்லைப் போலே வேதம் வேறில்லை” [119]

வைரமுத்துவின் இப்பாடல் மாலை உவமை அணிக்குச் சான்றாகிறது

தாய் - கடவுள்

தாய்ப்பால் - கடவுள் சன்னதியில் தரப்படும் தீர்த்தம்

தாயின் சொல்- கடவுளுக்கு ஓதப்படும் வேதம்

என்ற நிலையில் மாலை உவமை இங்குக் கையாளப்பெற்றுள்ளது. இவ்வாறாக உவமை அணிகளின் வகைகளைத் திரைப்படக் கவிஞர்கள் எடுத்தாண்டுள்ளனர்.

## தொகுப்புரை

தொல்காப்பியர் காலத்திலேயே உவமை அணி பற்றிய செய்திகள் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. உவமை அணி தொழில், பயன், மெய், உரு, சிறப்பு, நலன், காதல், வலி ஆகியன கருதி அமையலாம் எனத் தொல்காப்பியர் குறிக்கிறார்.

தண்டியலங்காரத்தில் பண்பு, தொழில், பயன் ஆகிய உவமை களன்களாக அமைகின்றன. மேலும் ஒரு பொருளுடன் ஒரு பொருளையும், பல பொருளுடன் ஒரு பொருளையும் ஒப்புமைப் படுத்தி உரைக்கலாம் என்று தண்டியலங்காரம் குறிக்கிறது.

திரையிசைப் பாடல்களில் உவமை அணி அதிக அளவில் பயன்படுத்தப்பெற்றுள்ளது. தண்டியலங்காரம் காட்டும் அனைத்து உவமை அணிநலன்களும் ஆய்வுக்களமாக அமைந்த திரையிசைப் பாடல்களில் அமைந்துள்ளன. இதன் காரணமாகத் தண்டியலங்கார மரபு இற்றைக் கால மக்கள் இலக்கியமான திரையிசைப்பாடல்களில் பின்பற்றப்பட்டு எடுத்தாளப்பெற்றுள்ளன என்பதை உணரமுடிகின்றது.

திரையிசைப் பாடலாசிரியர்கள் விரியுவமையை அதிக அளவில் பயன்படுத்தியுள்ளனர். மேலும் பலவயிற்போலி உவமை, மோக உவமை போன்றனவும் அதிக அளவில் திரைக்கவிஞர்களால் பயன்படுத்தப்பெற்றுள்ளன.

திரையிசைப்பாடலாசிரியர்களில் இவ்வாய்வுக்களத்தின் அடிப்படையில் வைரமுத்து அதிக அளவில் உவமை வகைகளைக் கையாண்டுள்ளார் என்பது தெளிவாகின்றது. (காண்க பின்னிணைப்பு -1)

அடுத்த நிலையில் பா. விஜய், வாலி, கண்ணதாசன், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் ஆகியோர் அமைகின்றனர்.

உவமை அணிகளுக்கு எடுத்துக்காட்டாகத் தற்காலத்தில் திரையிசைப் பாடல்களைப் பயன்படுத்தலாம் என்பது இதன்வழி தெரியவருகிறது.

## இயல். 3

## திரையிசைப் பாடல்களில்

## தன்மையணி,பின்வருநிலையணி,சுவையணி

தமிழ்க் கவிதை மரபு தொன்மை வாய்ந்தது. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா போன்ற யாப்பு கட்டமைப்புகளில் செய்யுள்கள் எழுதப்படுகின்றன. இச்செய்யுள்களில் பாடுபொருள் சிறந்து இருக்கும். பாடுபொருள் மட்டும் இருந்தால் பாடலின்அடிகள் குறைவுபடலாம். பாடல்கள் படிப்பவர்களுக்குச் சோர்வைத் தரலாம். அதனால் செய்யுள்களை, பாடல்களை அழகுப் படுத்த, படிப்பவர்களைப் படிக்க வைக்க அலங்காரங்கள் தேவைப்படுகின்றன. உவமை அணி மட்டும் பாடல்களில் அமைந்திருந்தால் சோர்வு ஏற்படலாம். அதனால் உவமை அணியோடு மற்ற அணிகளும் தேவைப்படுகின்றன. உவமை அணியை அடுத்து நிலையில் தன்மையணி, பின்வருநிலையணி, சுவையணி ஆகிய அணிகளை திரையிசைப் பாடலாசிரியர்கள் அதிக அளவில் பயன்படுத்தியுள்ளனர் என்ற நிலையில் அவ்வணிகள் பயன்படுத்தப்பெற்ற முறைமையயினை இவ்வியல் ஆராய்கின்றது.

### தன்மை அணி

ஒரு பொருளின் அல்லது ஒருவரின் தன்மைகளை இயல்பாய் உரைப்பது தன்மை அணியாகும். ஒரு செய்யுள் அல்லது பாடல் செய்திகளை மட்டும் கொண்டிருக்கும் நிலைப்பாடு இத்தன்மையணியாகும். இவ்வணியைக் கண்ணதாசன், பட்டுக்கோட்டை, வாலி, வைரமுத்து, பா.விஜய் போன்ற பாடலாசிரியர்களின் பாடல்களில் காணமுடிகின்றது.

### கண்ணதாசன் பாடல்களில் தன்மையணி

கண்ணதாசனின் திரையுலக வாழ்விற்கு அடியெடுத்துத் தந்த பாடல் ‘கலங்காதிரு மனமே - நீ ’ என்று தொடங்கும் பாடலாகும். இப்பாடல் கவிஞரின் முதல்பாடல் என்பதால் மிக இயல்பாகச் செய்திகளைத் தன்மை அணியில் தந்துள்ளது.

“கலங்காதிரு மனமோ- உன் கனவெல்லாம்

நனவாகும் ஒரு தினமே!

கடினப்படாமல் ஏதும் கைக்கு வராது

கஷ்டப்படுவோர் தம்மை கை நழுவாது

அடுத்தடுத்து முயன்றால் ஆகாதேது! ஆகாதேது!"[1]

என்ற பாடலில் மனித மனதின் தன்மைகளைக் கவிஞர் எடுத்துரைக்கிறார். மனிதமனம் நிலையில்லாதது, முயற்சியைக் கைவிடாமல் மீண்டும் மீண்டும் போராடினால் வெற்றி கிடைக்கும் என்ற செய்தியை இயல்பாக உரைத்துள்ளார். இக்கவிஞர் பல நிலைகளில் தன்மை அணி கொண்ட பாடல்களை எழுதியுள்ளார்.

"கனக விசயரின் முடித்தலை நெரித்து

கல்லினை வைத்தான் சேரமகன்

இமய வரம்பினில் மீன்கொடி ஏற்றி

இசைபட வாழ்ந்தான் பாண்டியனே!"[2]

என்ற பாடலில் தொழில் தண்மையணியும்,

"அழகு ரசிப்பதற்கே

அறிவு கொடுப்பதற்கே

மனது நினைப்பதற்கே -ஆகா!

வாழ்க்கை வாழ்வதற்கே

மனது நினைப்பதற்கே – ஆகா !

வாழ்க்கை வாழ்வதற்கே!"[3]

"காணுகின்ற காட்சிகளும் நிலைப்பதில்லை- சுகம்

கைக்குவந்த பின்னாலும் இருப்பதில்லை!

தோனுகின்ற ஆசைகளும் முடிவதில்லை- இதைத்

துன்பம் என்று சொல்வதற்கும் இடமுமில்லை!”[4]

என்ற பாடலில் குணத்தன்மையணியும்,

“கன்னிப் பருவத்திலே கண்கள் பேசுமோ
காளையர் காணும் போது நாணம் மிஞ்சுமோ
அன்பு வைத்தால் இன்பம் தோன்றுமோ
ஆசையை யாராலும் மாற்ற முடியுமோ?”[5]

என்ற பாடலில் தொழில் தன்மையணியும்,

“மன்னவனே யானாலும் பொன்னளந்து கொடுத்தாலும்
பெண்மனதை நீ அடைய முடியாது
வான்முனையில் கேட்டாலும் வெஞ்சிறையில்போட்டாலும்
உடலன்றி உள்ளமுனைச் சேராது!”[6]

என்ற பாடலில் குணத்தன்மையணியும்,

“பருவம் வந்த அனைவருமே காதல் கொள்வதில்லை
காதல் கொண்ட அனைவருமே மணமுடிப்பதில்லை
மணமுடித்த அனைவருமே சேர்ந்து வாழ்வதில்லை
சேர்ந்து வாழும் அனைவருமே சேர்ந்து போவதில்லை”[7]

என்ற பாடல் குணத்தன்மையணியிலும்

“தெய்வம் என்றால் அது தெய்வம் . அது
சிலையென்றால் வெறும் சிலைதான்!
உண்டென்றால் அது உண்டு
இல்லையென்றால் அது இல்லை!”[8]

என்ற பாடலில் இறைவனின் குணத்தன்மை சொல்வதால் குணத்தன்மையணியும்.

“கண்ணிரண்டும் ஒன்றை ஒன்று
காண முடியுமா- கொண்ட
கடமையிலே காதல் இன்பம்
நாட முடியுமா.?”[9]

என்ற பாடலில் தொழில் தன்மையணியும’

“மார்கழி மாதத்துப் பனிமூட்டம்-அந்த
மனதிலே உங்கள் நினைவோட்டம்
உருவமில்லாத தேரோட்டம் என்
உள்மனதில் ஒரு போராட்டம்”[10]

என்ற பாடலில் தொழில் தன்மையணியும் கொண்டு கண்ணதாசன் திரையிசைப்பாடல்களை எழுதியுள்ளளார். அவரின் தன்மையணி சார்ந்த பாடல்கள் இன்னும் பல உள்ளன. அவை,

- அப்பனுக்கு பாடம் சொன்ன சுப்பையா (.தொ-2 ப.14,15)
- ஆண்டவன் படைப்பில் ரகசியமில்லை (.தொ-2 ப-91)
- பொய்யான கணக்கெழுதும் வணிகருண்டு (.தொ-3 ப-487)
- மைதீட்டும் கண்களிலே மயக்கம் உண்டு (.பா.தொ-3 ப-488)

என்ற தொடக்கமுடைய பாடல்கள் எல்லாம் தன்மையணிச் சார்ந்தனவாகும். இவ்வாறு தன்மையணியை அதிகமான அளவில் கண்ணதாசன் பயன்படுத்தியுள்ளார்.

**பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் பாடலில் தன்மையணி**

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரமும் தம் திரையிசைப்பாடல்கள் பலவற்றில் தன்மையணியைப் பயன்படுத்தியுள்ளார்.‘திருடாதே’ என்ற தலைப்புடைய

திரைப்படத்தில் இடம்பெறும் ‘திருடாதே பாப்பா திருடாதே’ என்ற தொடக்கமுடைய பாடலில் திருட்டின் தீ இயல்புகள் விளங்குமாறு அதற்குரிய சொற்களால் அமைத்துள்ளமையால் இது தொழில்தன்மை சார்ந்த பாடலாக விளங்குகிறது.

“திட்டம் போட்டுத் திருடுற கூட்டம்

திருடிக் கொண்டே இருக்குது-அதைச்

சட்டம் போட்டுத் தடுக்கிற கூட்டம்

தடுத்துக் கொண்டே இருக்குது

திருடராய்ப் பார்த்து திருந்தா விட்டால்

திருட்டை ஒழிக்க முடியாது”[11]

என்ற பாடலடிகளில் திருடராய்ப் பார்த்துத் திருந்தாவிட்டால் திருட்டை ஒழிக்கமுடியாது என்று தீர்வும் சொல்கிறார் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம். அவரின் பல பாடல்களில் தன்மையணி இடம் பெற்றுள்ளன.

“கணவன் துணையே நிலையான செல்வம்

கணவன் உயிரே மனையாளின் தெய்வம்

கணவன் சேவையைப் பறிப்பதிலும்

எனைப் பலிகொள்ளலாமே - மாதா மேரி மாதா![12]

என்ற பாடலில் கணவனின் குணத்தைக் குறிப்பதால் குணத்தன்மையும்,

“இந்த மாநிலத்தைப் பாராய் மகனே! - உன்றன்

வாழ்க்கையை உணர்வாய் மகனே! -இளம்

மனதில் வலிமைதனை ஏற்றடா-முக

வாட்டமதை உழைப்பால் மாற்றடா!

துயர்தனைக் கண்டே பயந்து விடாதே

சோர்வை வென்றாலே துன்பம் இல்லை

உயர்ந்திடவே நீ உன்னையே நம்பிடுவாய்

உதவிசெய்வார் யாரும் இல்லை!"[13]

என்ற பாடலில் மகனுக்கு வேண்டிய குணங்களைத் தாய் கூறுவதால் இப்பாடலில் குணத்தன்மையணியும்,

"வீடுநோக்கி ஓடுகின்ற நம்மையே!

நாடி நிற்குதே அநேக நன்மையே –உண்மையே

தேடுகின்ற தந்தை தாயை நேரிலே –கண்டுசேவை

செய்ய வேணம் சொந்த ஊரிலே![14]

என்று குடும்பத்தின் தன்மையை உரைப்பதால் இனத்தின் தன்மையணியும்,

"அந்தி நேரத்தின் ஆனந்தக் காற்றும்

அன்பு மணக்கும் தேன்சுவைப் பாட்டும்

அமுத விருந்தும், மறந்து போனால்

உலகம் வாழ்வது ஏது?-பல

உயிர்கள் உயிர்கள் மகிழ்வதும் ஏது? நெஞ்சில்

இனித்திடும் உறவை இன்பமெனும் உணவைத்

தனித்துப் பெற முடியாது!"[15]

என்ற பாடலில் மாலை நேரத்தின் இயல்புகளைக் குணத் தன்மை அணியாகவும், பல நிலைகளில் தன்மை அணியினைப் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் பயன்படுத்தியுள்ளார்.

**வாலியின் பாடல்களில் தன்மையணி**

கவிஞர் வாலியும் தன்மை அணியைப் பயன்படுத்தி திரையிசைப்பாடல்களை எழுதியுள்ளார். நாற்காலி சண்டை என்னும் பதவிச்சண்டை தற்காலத்தில் பெரிதாக நடந்து வருகிறது. இச்சண்டையில் மக்களை பெரிய அளவு ஏமாற்றியவர் வெற்றி பெறுகிறார்கள். குறைந்த அளவு

ஏமாற்றியவர்கள் ஏமாறுகிறார்கள். ஐந்தாண்டுக்கு ஒரு முறை நடக்கும் இந்தப் போராட்டத்தில் ஒவ்வொரு முறையும் பொது மக்கள்தான் தோற்றுப்போகிறார்கள் என்னும் அரசியல் தன்மையை விளக்கும் தன்மையணியினை,

"நாற்காலிக்குச் சண்டை போடும்
நாடு நம் பாரத நாடு
நான் சொன்னால் கேட்பது யாரு
நாளும் நீ பேப்பரைப் பாரு
நீ போட்டு நானும் போட்டு
என்னாச்சு நம் ஓட்டு"[16]

என்னும் பாடல் சுட்டும் மக்களின் மக்களாட்சி நடைமுறையை ஓட்டுப்போடுதலைப் பற்றிக் குறிப்பதால் இதில் தொழில் தன்மை அணி அமைந்துள்ளது என்பதை அறிய முடிகின்றது.

"கூவுகின்ற குயிலை கூட்டுக்குள் வைத்து
பாடென்று சொன்னால் பாடாதம்மா
சோலை மயில் தன்னை சிறை வைத்துப் பூட்டி
ஆடென்று சொன்னால் ஆடாதம்மா"[17]

என்ற பாடலில் சூழ்நிலைக் கைதியாக இருக்கும் ஒருவரின் நிலையைப் பாடலாக்கியுள்ளார் வாலி. இதனைத் தன்மையணியில் தந்து உள்ளத்தின் இயல்பை உரைத்துள்ளார்.

"பாட வந்ததோ கானம்
பாவை கண்ணிலோ நாணம்
கள் ஊறும் பொன் வேளை
தள்ளாடும் பெண் மாலை"[18]

என்ற பாடலில் பெண்ணின் இயல்பினை உணர்த்துவதால் குணத்தன்மை அணியும்,

“கெட்டி மேளம் கொட்ட வேணும்
மஞ்சதாலி கட்ட வேணும்
இப்ப நல்லாருக்கும் நேரம்
ரெண்டும் ஒண்ணாகத்தான் சேரும்
இனி பூமாலைதான் பொன்னூஞ்சல்தான்
ஒரே கொண்டாட்டம்”[19]

என்ற பாடலில் திருமணம் என்ற நிகழ்வின் கொண்டாட்டம் சொல்லப்படுவதால் தொழில் தன்மை அணியையும், கையாண்டு தன்மை அணிக்கான இலக்கியங்களை வடித்துள்ளார் வாலி. அவரின் பல பாடல்களில் தன்மைஅணி விளங்குகிறது.அவை,

- தம்பி கொஞ்சம் நில்லப்பா- (ப-454)
- கிண்ணத்தில் தேன் வடித்து(ப-159)
- தாலாட்டும் பூங்காற்று நானல்லவா(ப-343)
- இளமைக் கனவுகள் விழியில் மிதக்குது(ப-402)

என்ற தொடக்கமுடைய பாடல்களும் தன்மை அணிக்கான எடுத்துக்காட்டுகளாய் உள்ளன. இவ்வாறாக தன்மையணியை வாலியும் பெரிதும் பயன்படுத்தியுள்ளார்.

**வைரமுத்துவின் பாடல்களில் தன்மையணி**

வைரமுத்துவும் தன் பாடல்களில் தன்மையணியைக் கையாண்டுள்ளார். தலைவன் ஒருவன் அடிப்படை வசதியான வீடுகட்ட முனையும்போது அன்பு மனைவியை இழந்து தவிக்கிறான். இந்நிலையில் அவனின் நிலையைத் தன்மை அணியில் சுட்டுவதை,

“வீடு மனைவி மக்கள் மூன்றும் வாழ்வில் சிக்கல்

ஆயிரங்காலத்து பயிரொன்று இன்று அறுவடையானது

விதைத்தவன் வாழ்க்கை கண்ணீரில் நீராடுது

உதிரத்தில் பிறந்த குருவிகள் எல்லாம் உறவை மறந்தது

சொந்தம் இந்த வீட்டில் கடல்மீது மழையானது”[20]

என்ற பாடலில் தலைவியின் பிரிவினைத் தலைவன் குணத்தன்மையணியால் காட்டியுள்ளார் வைரமுத்து.

“சாலையில் தனிமையில் அழகிய இளமயில்

நடக்கவும் முடியவில்லை நடக்கவும் முடியவில்லை

இளமையும் கரைந்தது இருபுறம் நரைத்ததும்

வேலையும் கிடைக்கவில்லை வேலையும் கிடைக்கவில்லை”[21]

என்ற நிலையில் தனி ஒரு பெண்ணின் வாழ்க்கையின் வருத்த நிலையை இப்பாடல் தொழில் தன்மை அணியில் பதிவு செய்கின்றது.

“ஏழுதரம் நீயும் ஓட்டுப்போட்ட

என்ன கண்ட துணி ஒட்டுப் போட்ட

பாடி வச்சான் அன்று பட்டுகோட்ட

கேட்டுப்புட்டு நீயும் கொறட்டவிட்ட”[22]

“ஊருக்குள் வந்தது ஊமைச் சுதந்திரம்

ஒன்றும் தரவில்லையே

இந்தத் தலைமுறையே லஞ்சப் பரம்பரையே

கோவணம் இல்லாத தேசத்தில் இன்றைக்கு

எத்தனை கட்சிக்கொடி

கண்ணைப் பறிக்கிறதேவிண்ணை மறைக்கிறதே”[23]

“சில்லறைகள் துள்ளுவதும் தேர்தலுக்குத்தான்-இங்கு

செத்த பய பொழப்பதும் தேர்தலுக்குத்தான்”[24]

என்ற பாடலடிகள் சமுதாயத்தின் கெடுதலாக விளங்குகிற அரசியல் நிலைப்பாடுகளைக் கொண்டு பாடுகின்ற தொழில் தன்மையணிச் சார்ந்தனவாகும்.

- வாழும் வரை போராடு(ப-215)
- ஊரத் தெருஞ்சுக்கிட்டேன் (ப-220)
- கவிதை கேளுங்கள் (ப-273)
- வாசல் இது தலை வாசல் (ப-382)

என்ற பாடல்களும் வைரமுத்துவால் தன்மையணிச் சார்ந்துப் படைக்கப்பெற்றுள்ளன.

**கவிஞர் விஜய்யின் பாடல்களில் தன்மையணி**

தற்காலக் கவிஞராக விளங்கும் பா. விஜய் தன் திரையிசைப்பாடல்களில் தன்மையணியைப் பயன்படுத்தியுள்ளார்.

“ சாமி கருப்புத்தான்

சாமி சிலையும் கருப்புத்தான்

யானை கருப்புத்தான்

கூவும் குயிலும் கருப்புத்தான்”[25]

என்ற பாடலில் கருப்பு நிறப் பண்பு ஓரே இனம் சார்ந்து சொல்லப்படுவதால் இனத்தன்மையணியாக பதிவு செய்துள்ளதை அறிய முடிகின்றது.

“என் காதல் உயிர் பிழைத்துக் கொண்டது.

உன்னைப் பார்த்து என் வானம் இங்கு

விடியுதேஎன் கண்கள் அது உன்னையே

தினம் பார்த்திட வேண்டும் உன்

விரல்கள் என்னைத் தீண்டுமே"[26]

என்ற பாடலிலும் காதலியைக் காணத் துடிக்கும் காதலன் இயல்பு தன்மை அணியில் காட்டப்பெற்றுள்ளது.

இவ்வாறு தன்மை அணியை திரைப்படப் பாடலாசிரியர்கள் சமுதாயத்தின் இயல்பு நிலையைக் காட்டவும், மனிதர்களின் குணநலனைக் காட்டவும் பயன்படுத்தியுள்ளனர்.

**பின்வருநிலையணி**

ஒரு செய்யுளில் முன்னர் வந்த சொல்லோ பொருளோ அல்லது இவை இரண்டுமோ பலமுறை வருவது பின்வருநிலையணி ஆகும். கண்ணதாசன், பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம், வாலி, வைரமுத்து, பா. விஜய் போன்றோர் தம் பாடல்களில் அதிக அளவில் சொல் பொருள் பின்வருநிலையணி காணப்படுகிறது.

**கண்ணதாசன் பாடல்களில் பின்வருநிலையணி**

**சொல் பின்வருநிலையணி**

கவிஞர் 'காய்' என்ற ஒரு சொல்லைச் சொல் பின்வருநிலை அணியாகக் காட்டுகிறார். காய் என்பது காய்தல் என்ற பொருளிலும், பழத்தின் முன் நிலையான காய் என்ற பொருளிலும், இவற்றுடன் காய் என்பதை இடைச்சொல்லாகவும் பயன்படுத்திச் சொல் பின்வருநிலையணிக்கு எடுத்துக்காட்டாக பின்வரும் பாடலை அமைக்கிறார்.

"அத்திக்காய் காய் காய்

ஆலங்காய் வெண்ணிலவே

இத்திக்காய் காயாதே

என்னைப்போல் பெண்ணல்லவோ- நீ

என்னைப் போல் பெண்ணல்லவோ!

கன்னிக்காய் ஆசைக்காய்

காதல்கொண்ட பாவக்காய்

அங்கே காய் அவைரக்காய்

மங்கை எந்தன் கோவைக்காய்

மாதுளங்காய் ஆனாலும்

என்னுளங்கா யாகுமோ?"[27]

இதே நிலையில் தேன் என்ற சொல்லையும் தேன் என்ற பொருளிலும், தன்மை வினைமுடிவாகவும் பல இடங்களில் கையாண்டு சொல் பின்வருநிலை அணிக்கு இலக்கியம் கண்டுள்ளார்.

"பார்த்தேன் சிரித்தேன் பக்கத்தில் அழைத்தேன் -அன்று

உனைத்தேன் என நான் நினைத்தேன்- அன்று

மலைத்தேன் இதுவென மலைத்தேன்!

கொடித்தேன் இனி யெங்கள் குடித்தேன்- என

ஒரு படித்தேன் பார்வையில் குடித்தேன்- கைகளில்

அனைத்தேன் அழகினை ரசித்தேன்"[28]

இவ்வாறு சொல் பின்வருநிலையணிக்கு உரிய பாடல்களைக் கண்ணதாசன் படைத்தளித்துள்ளார்.

**சொற் பொருள் பின்வருநிலையணி**

ஒரு பாடலில் ஒரு முறை வந்த சொல், தானும் தன் பொருளும் மாறாமல் பல இடங்களில் மீண்டும் வருவது சொற்பொருள் பின்வருநிலையணியாகும். இதற்குப் பல சான்றுகளைக் கண்ணதாசன் திரையிசைப்பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

"கண்ணன் பிறந்ததும் சிறைச்சாலை-அந்தக்

காந்தி இருந்ததும் சிறைச்சாலை!

சிறைச்சாலை ஒரு கல்லூரி-சென்று

திரும்பியவன் ஒரு குருநாதன்”[29]

என்ற பாடலில் ‘சிறைச் சாலை’ என்ற சொல் திரும்பத் திரும்ப வந்துள்ளது.

“உண்டால் வருவது மது மயக்கம்

உணர்ந்தால் வருவது காதல் மயக்கம்

காலமெல்லாம் வரும் புகழ் மயக்கம்”[30]

என்ற பாடலில் ‘மயக்கம்’ என்ற சொல் பலமுறை பயின்று வந்துள்ளது.

“கலப்படம் கலப்படம்

எங்கும் எதிலும் கலப்படம் - அதை

எடுத்துச் சொன்னாலே புலப்படும்!

கஷ்டப்படும் தொழிலாளரோடு-கருங்

காலிக் கூட்டம் கலப்படம்!”[31]

என்ற பாடலில் ‘கலப்படம்’ என்ற சொல் பலமுறை பயின்று வந்து சொல்பொருள்பின்வருநிலையாயிற்று.

“காட்டோடு குழலாட ஆட ஆட

கண்ணென்ற மீனாட ஆட ஆட

கொத்தோடு நகையாட ஆட ஆட

கொண்டாடும் மயிலே நீ ஆடு”[32]

என்ற பாடலில் ‘ஆட ஆட’ என்ற சொல் பலமுறை வந்துள்ளது.

“சொல்லவா? கதை சொல்லவா? நடந்த கதை சொல்லவா?

பிறந்த கதை சொல்லவா? வளர்ந்த கதை சொல்லவா?

பெண்ணென்று பூமியிலே மலர்ந்த கதை சொல்லவா!”[33]

என்ற பாடலில் 'கதை' என்பது சொல் பொருள் பின்வருநிலையாகிறது.

"இந்த இரவை கேளது சொல்லும்
அந்த நிலவைக் கேளது சொல்லும்
உந்தன் மனதைக் கேளது சொல்லும்
நாம் மறுபடி பிறந்ததைச் சொல்லும்"[34]

என்ற பாடலில் 'சொல்லும்' என்ற சொல் சொல் பொருள் பின்வருநிலையணியாகிறது.

"இரவினில் கடவுள் ஏற்றிய விளக்கு
எல்லோருக்கும் குல விளக்கு
உயரத்தில் இருந்தே உலகத்தைக்
காக்கும் கல்யாணத் திருவிளக்கு"[35]

என்ற பாடலில் 'விளக்கு' என்ற சொல்லின் ஆட்சி திரும்பத் திரும்ப வந்துள்ளது.

"புலவர் சொன்னதும் பொய்யே பொய்யே
பூவையர் ஜாடையும் பொய்யே பொய்யே
கலைகள் சொல்வதும் பொய்யே பொய்யே
காதல் என்றும் மெய்யே மெய்யே
அழகு என்பதும் மெய்யே மெய்யே
ஆசை என்பதும் மெய்யே மெய்யே
பழகும் நோக்கமும் மெய்யே மெய்யே - உங்கள்
பாஷை ஒன்றுதான் பொய்யே பொய்யே"[36]

என்ற பாடலில் 'பொய்யே, மெய்யே' ஆகிய சொற்கள் திரும்பத் திரும்ப வந்து சொற்பொருள் பின்வருநிலையணி ஆகின்றது.

- வான்நிலா நிலா – (க.தி.இ.பா.தொ.5.ப-369)

- பால்வண்ணம் பருவம் கண்டு - (க.தி.இ.பா.தொ.2.ப-153)

என்ற பாடல்கள் சொல்பொருள் பின்வருநிலையணியைக் கொண்டுள்ளன.

**பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் பாடல்களில் பின்வருநிலையணி**

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பல பாடல்களில் பின்வருநிலை அணியைப் பயன்படுத்தியுள்ளார்.கண்களுக்கு குளிர்ச்சியும், இனிமையும் தருவது வெண்ணிலவு. அது தன் நெஞ்சைக் கவர்ந்த காதலிக்கு வெண்ணிலவு.'உடன்பிறந்தவளோ' என்னும் அன்பு பொங்க நிலவைகண்டு வியக்கும் பாடலில் வெண்ணிலாவே என்ற சொல் திரும்பத் திரும்ப இடம்பெறச் செய்யப்பெற்றுள்ளது. இது சொல்பொருள் பின்வருநிலையணியைச் சார்ந்ததாகும்.

"என்னருமைக் காதலிக்கு வெண்ணிலாவே –நீ
இளையவளா மூத்தவளா வெண்ணிலாவே!
கண்விழிக்கும் தாரகைகள் வெண்ணிலவே- உன்னை
காவல் காக்கும் தோழியரோ வெண்ணிலாவே!"[37]

இவரின் மற்றொருப் பாடலில்,

"எல்லோருக்கும் உலகம் ஒண்ணு!
இருளும் ஒண்ணு ஒளியும் ஒண்ணு!
இன்னும் சொன்னா நீயும் ஒண்ணு!
நானும் ஒண்ணே தானே!
யாருமேலே கீறினாலும்
ரத்தம் ஒண்ணுதானே!
ஆகமொத்தம் பிறந்ததெல்லாம்
பத்தாம் மாதம் தானே"[38]

என்ற பாடலில் 'ஒண்ணு' என்ற சொல் திரும்பத் திரும்ப வந்து சொல் பொருள்பின்வருநிலையணியாக பயின்று வந்துள்ளது.

“தூங்காது கண் தூங்காது இருள்சூழும்
உலகில் பொதுவாழ்வு தோன்றும் வரை
தூங்காது கண் தூங்காது”[39]

என்ற பாடலில் ‘தூங்காது’ என்ற சொல்லும்,

“மணவறையில் சேர்த்து வைத்து
வாழ்த்துரைக்கும் ஓர் காலம்
மக்களைப் பெற்று மகிழவைக்கும் ஓர் காலம்
மனத்திலே பாசங்கள் வளர்ந்து
மறைந்து பின்னே கனவு கண்டு
விழிப்பது போல் கலைத்து விடும் ஓர் காலம்”[40]

என்ற பாடலில் ‘காலம்’ என்ற சொல்லும்,

“கண்ணுக்கு அழகாப் பெண்ணைப் படைச்சான்
பெண்ணுக்குத் துணையா ஆணைப் படைச்சான்
ஒண்ணுக்குப் பத்தாச் செல்வத்தைப் படைச்சான்
உலகம் நிறைய இன்பத்தைப் படைச்சான்”[41]

என்ற பாடலில் ‘படைச்சான்’ என்ற சொல்லும்,

“துன்பத்தை வெல்லும் கல்வி கற்றிட வேணும்
சோம்பலைக் கொல்லும் திறன் பெற்றிட வேணும்!
வம்பு செய்யும் குணமிருந்தால் விட்டிட வேணும்! அறிவு
வளர்ச்சியிலே வான்முகட்டைத் தொட்டிட வேணும்!”[42]

என்ற பாடலில் ‘வேணும்’ என்ற சொல்லும்,

"போர் படைதனில் தூங்கியவன் வெற்றி இழந்தான்- உயர்
பள்ளியில் தூங்கியவன் கல்வி இழந்தான்"[43]

என்ற பாடலில் 'தூங்கியவன்' என்ற சொல்லும்,

"வண்ண மலர்மாலை கொண்டு
வாழ்வினிலே ஆசை கொண்டு
வந்திடுவாள் நாணம் கொண்டு"[44]

என்ற பாடலில் 'கொண்டு' என்ற சொல்லும்,

"ஆரம்பமாவது பெண்ணுக்குள்ளே-அவன்
ஆடி அடங்குவது மண்ணுக்குள்ளே
ஆராய்ந்து பார் மனக் கண்ணுக்குள்ளே
ஆத்திரங் கொள்ளாதே நெஞ்சுக்குள்ளே"[45]

என்ற பாடலில் 'உள்ளே' என்ற சொல் இணைப்புச் சொல்லாக 'உள்' என்ற பொருளிலும்,

"குறுக்கு வழியில் வாழ்வு தேடிடும்
குருட்டு உலகமடா - இது
கொள்ளையடிப்பதில் வல்லமை காட்டும்
திருட்டு உலகமடா - தம்பி!
இருக்கும் அறிவை மடமை மூடிய
இருட்டு உலகமடா - வாழ்வின்
எந்த நேரமும் சண்டை ஓயாத
முரட்டு உலகமடா! தம்பி"[46]

என்ற பாடலில் ‘உலகமடா’ என்ற சொல்லும், இடம்பெற்று சொல்பொருள் பின்வருநிலையணியாக அமைகிறது. இவ்வாறு அதிக அளவில் பின்வருநிலையணியைப் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பயன்படுத்தியுள்ளார்.

**வாலியின் பாடல்களில் பின்வருநிலையணி**

வாலியும் பின்வருநிலையணியைப் பல பாடல்களில் கையாண்டுள்ளார். அவர் பொருள் பின்வருநிலையணியைப் பல பாடலில் பயன்படுத்தியுள்ளார்.

“ காலையில் தினமும் கண் விழித்தால் -நான்
கை தொழும் தேவதை அம்மா
அன்பென்றாலே அம்மா என் தாய் போல் ஆகிடுமோ
இமைபோல் இரவு பகலும் என்னை காத்த அன்னையே”[47]

என்ற பாடலில் ‘அம்மா, அன்னை’ ஆகிய சொற்கள் பெற்ற தாயைக் குறிக்கும் இரு சொற்கள் ஆகும். இவற்றைப் பாடி பொருள் பின்வருநிலை அணியில் இப்பாடலை வாலி பாடியுள்ளார்.

‘வணக்கம்’ என்ற சொல்லை அதே பொருளில் சொல்பொருள் பின்வருநிலையணியில் பின்வரும் பாடலில் படைத்துள்ளார் வாலி.

“வணக்கம் வணக்கம் வணக்கம்
என் அம்மாவிற்கு வணக்கம்
வணக்கம் வணக்கம் வணக்கம்
என் அப்பாவிற்கு வணக்கம்
அண்ணனுக்கு ஒரு வணக்கம்-எனக்கு
அர்த்தமுள்ள குரு வணக்கம்!
மெல்லிசையை ரசிப்பதற்கு சபையில் இங்கு
உள்ளவர்க்கு பொது வணக்கம்
தமிழே தமிழே தாய்மொழியே மொழியே

எந்நாளும் சொல்வேன் கோடி வணக்கம்”[48]

மற்றொருப் பாடலில் ‘மாதவா’ என்ற பெயர்ச்சொல்லைத் திரும்ப திரும்பப் பயன்படுத்தி வாலி சொல்பொருள் பின்வருநிலையணியைக் கையாண்டுள்ளா.

“மாதவா மாதவா சேது மாதவா
உன்கையில் உள்ள புல்லாங்குழலாய்
நான் மாறவா. மாதவா... என் மாதவா
என் அம்மை அப்பன் ஆசான் நீதான் மாதவா
கோகுலம் மேவிய மாதவா
குன்றினை ஏந்திய மாதவா”[49]

என்ற பாடல் பெயர்பின்வருநிலையணியில் எழுதப்பெற்றுள்ளது.

“வேலை வேலை வேலை வேலை
வேலை மேல வேலை எத்தனையோ வேலை
ஆம்பளைக்கும் வேலை பொம்பளைக்கும் வேலை
பொம்பளையா போன ஆம்பளைக்கும் வேலை”[50]

என்ற பாடலில் ‘வேலை’ என்ற சொல்லும்,

“பெண்ணல்ல பெண்ணல்ல ஊதாப்பூ
சிவந்த கண்ணங்கள் ரோஜாப்பூ
கண்ணல்ல கண்ணல்ல அல்லிப்பூ
சிரிப்பு மல்லிகைப்பூ”[51]

என்ற பாடலில் ‘பூ’ என்ற சொல்லும்,

“மனதில் உறுதி வேண்டும்
வார்தையிலே தெளிவு வேண்டும்

உணர்ச்சி என்பது வேண்டும்

ஒளி படைத்த பார்வை வேண்டும்

ஞான தீபம் ஏற்ற வேண்டும்"[52]

என்ற பாடலில் 'வேண்டும்' என்ற சொல்லும்,

"என்னைப் பிடிச்ச காதல் பேய்

சிங்காரக் கன்னிப் பேய்

சிட்டாட்டம் சின்னப்பேய்"[53]

என்ற பாடலில் 'பேய்' என்ற சொல்லும்,

"இன்பத்தைக் கருவாக்கினாள் பெண்

உலகத்தில் மனிதனை உருவாக்கினாள் பெண்

விண்ணவர்க்கும் மன்னவர்க்கும்

விலையற்ற செல்வம் பெண்"[54]

என்ற பாடலில் 'பெண்' என்ற சொல்லும், திரும்பத் திரும்ப வந்து சொல்பொருள் பின்வருநிலை அணியாகியுள்ளமை குறிப்பிடத்தக்கது.இவ்வாறு வாலியும் பல பாடல்களைப் பின்வருநிலையணி அலங்காரத்தில் பாடியுள்ளார்.

**வைரமுத்துவின் பாடல்களில் பின்வருநிலையணிப் பாடல்கள்**

பின்வருநிலையணியைத் தனித்த தன்னுடைய உத்தியாகக் கொண்டவர் வைரமுத்து ஆவார். அவர் இவ்வணியை எளிமையாக, இனிமையாக, மக்கள் விரும்பும் வண்ணம் திசையிசைப்பாடல்களில் அமைத்துப் பாடியுள்ளார்.

"வெண்ணிலவு தொட்டு முத்தமிட ஆசை

என்னை இந்த பூமி சுற்றி வர ஆசை

மல்லிகைப் பூவாய் மாறிவிட ஆசை

தென்றலைக் கண்டு மாலையிட ஆசை

மேகங்களை எல்லாம் தொட்டுவிட ஆசை

சோகங்களை எல்லாம் விட்டுவிட ஆசை"[55]

என்ற இப்பாடலில் 'ஆசை' என்னும் சொல் ஒரே பொருளில் அமைந்து சிறக்கிறது.

மற்றொருப் பாடலில் 'அரசியல்' என்ற சொல்லானது,

"தொட்டில் தொடங்கி சுடுகாடு
வரையில் தொடர்ந்து வருகுது அரசியல்
ஓட்டை வாங்கி நாட்டை வாங்கி
உயிரையும் வாங்குது அரசியல்
எங்கும் அரசியல் எதிலும் அரசியல்
எதிலே இல்லை அரசியல்
நல்ல வார்த்தை சொல்லி சொல்லி
நாட்டை விற்றது அரசியல்"[56]

பலமுறை திரும்பத் திரும்ப வந்து சொல் பொருள்பின்வருநிலையணியாகியது.

"இந்திரன் வந்ததும் சந்திரன் வந்ததும் இந்தச் சினிமாதான்- அட

எம். ஜி.ஆர் வந்ததும் சிவாஜி வந்ததும் இந்தச் சினிமாதான்"[57]

என்ற பாடலில் 'வந்ததும்' என்ற சொல் பின்வருநிலையணிப் பாடலாக அமைந்துள்ளது.

"காதல் காதல் காதல்
ஆதாம் ஏவாள் உலக்கெல்லாம்
கற்றுத் தந்தது காதல் உன்னை
என்னை அன்னை தன்னைப்

பெற்றுத் தந்தது காதல்"[58]

என்ற பாடலில் 'காதல்' என்ற சொல்லும்

"கையில் கிண்ணம் பிடித்துவிட்டான்
இனிக்கின்ற விஷத்துக்குள் விழுந்துவிட்டான்
ராகம் தாளம் மறந்துவிட்டான்
ரசிகரின் கடிதத்தை கிழித்துவிட்டான்"[59]

என்ற பாடலடிகளில் 'விட்டான்' என்ற துணைவினையும்

"ஆத்து நீரில் குளிக்கும் போதும்
அயிர மீனு கடிக்கும் போதும்
தேடி வந்து சிரிக்கும் போதும்
தென்னந் தோப்பில் ஒளியும் போதும்"[60]

என்ற பாடலில் 'போதும்' என்ற வினைச் சொல்லும்

"சத்தம் இல்லாத தனிமை கேட்டேன்
யுத்தம் இல்லாத உலகம் கேட்டேன்
ரத்தத்தில் என்றென்றும் வேகம் கேட்டேன்
ரகசியம் இல்லா உள்ளம் கேட்டேன்"[61]

என்பதில் 'கேட்டேன்' என்ற சொல்லும்,

"அன்புக்கு உருவம் இல்லை
பாசத்தில் பருவம் இல்லை
வானோடு முடிவும் இல்லை
வாழ்வோடு வடிவம் இல்லை"[62]

என்பதில் 'இல்லை' என்ற சொல்லும், திரும்பத் திரும்ப வந்து சொல்பொருள் பின்வருநிலையணியாக அமைகின்றன.

மேலும் ஏறாத மலை மேல (ப-208) என்ற பாடலிலும் சொல்பொருள்பின்வருநிலை அணியைக் கையாண்டுள்ளார் வைரமுத்து. இவ்வாறு அழகான எளிமையான முறையில் மக்கள் மனதில் பதியும் வண்ணம் சொல் பொருள் பின்வருநிலை அணியைக் கையாண்டுள்ளார் வைரமுத்து.

**பா. விஜய்யின் பாடல்களில் பின்வருநிலையணி**

பா. விஜய்யும் பல திரையிசைப்பாடல்களைப் பின் வருநிலை அணி வரும்படிப் பாடியுள்ளார். இவை திரையிசைக்கும் மக்களுக்கும் ஈர்ப்பினைத் தருவனவாக உள்ளன.

"போடா பூமி
சின்னப் பந்து
தேவை நெஞ்சில் தில்
செவி கேக்காதா
பீத்தோவனின் சிம்பொனி தாண்டி தில்
எதையும் எதையும் நாம்
எதிர்க்க தேவை தில்"[63]

இப்பாடலடிகளில் 'தில்' என்னும் இடைச்சொல்லைச் சொல்பொருள் மாறாமல் கையாண்டு சொல்பொருள் பின்வருநிலையணியாகக் கைக்கொள்கிறார் விஜய்.

"பூக்களின் வாசமோ காற்றைத் தேடுதே
காற்றுதான் இசையைத் தேடுதே
இசையின் பாடலும் கவிதையைத் தேடுதே
கவிதைகள் காதலைத் தேடுதே"[64]

என்ற பாடலில் 'தேடுதே' என்ற சொல்லும்

"அந்த நீல குயில் என்ன சொல்லுது
கொஞ்சம் பக்கத்தில் வரச் சொல்லுது
அந்த சோலைக்கிளி என்ன சொல்லுது
சின்ன முத்தமொன்னு தரச் சொல்லுது"[65]

என்ற பாடலில் 'சொல்லுது' என்ற சொல்லும்

"பெண்ணை பார்த்ததும் வழிபவன் வேண்டாம்
டைம் கேட்டதும் குழைபவன் வேண்டாம்"[66]

என்ற பாடலில் 'வேண்டாம்' என்ற சொல்லும்

"திரும்ப திரும்பக் கடிதம் போட்டு
திரும்ப திரும்ப இதயம் கேட்டு
திரும்ப திரும்ப உயிரைக்கொல்லும்
நினைவு காதலா"[67]

என்ற பாடலடிகளில் 'திரும்ப' என்ற சொல்லும்

"முதலாம் சந்திப்பில் நான் "அறிமுகம் ஆனேனே
இரண்டாம் சந்திப்பில் என் இதயம் கொடுத்தேனே
மூன்றாம் சந்திப்பில் முகத்தை மறைத்தேனே"[68]

என்ற பாடலடிகளில் 'சந்திப்பில்' என்ற சொல்லும்

"சங்க தமிழ் நாட்டு சிங்கத் தமிழன் வாராரு
கறுப்புச் சூரியன் கம்பீரமா வராரு
ஏழை சனங்களுக்கு
பங்காளியா வாராரு

வாரிக் கொடுப்பதுல வரலாறா வாராரு"[69]

என்ற பாடலடிகளில் 'வாராரு' என்ற சொல்லும்

"வானம் தலையில் மோதாது
பூமி நகர்ந்து போகாது
நடுவில் இருக்கும் உந்தன் வாழ்க்கை
தொலைந்து ஒன்றும் போகாது"[70]

என்ற பாடலில் 'போகாது' என்ற சொல்லும் இடம்பெற்று சொல் பொருள் நிலை அணியாக விளங்குகின்றன. இவ்வகையில் பா. விஜய்யும் இவ்வணியைப் பொருத்தமாகக் கையாண்டுள்ளார் என்பதை அறியமுடிகிறது.

**சுவையணி**

கவிஞன் தான் சொல்ல வந்த கருத்தை சுவை படச் சொல்லுவது சுவையணியாகின்றது. நகை. அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம் ,பெருமிதம்., வெகுளி, உவகை என்று மெய்ப்பாடு எட்டுவகைப்படும். இச்சுவைகள் வெளிப்பட தம் கருத்துகளைப் பாடல்கள் வழி தெரிவித்துள்ளனர் திரைப்படப் பாடலாசிரியர்கள்.

**கண்ணதாசன் பாடலில் சுவையணி**

கண்ணதாசன் சுவை அணியையும் தம் திரைப் பாடல்களுக்குள் பயன்படுத்தியுள்ளார்.

"அழகு சிரக்கின்றது ஆசை துடிக்கின்றது
பழக நினைக்கின்றது பக்கம் வருகின்றது
வெட்கம் தடுக்கின்றது காதல் கனிகின்றது"[71]

என்ற பாடலில் உவகை அணி இடம் பெற்றுள்ளது.

"கடவுள் மனிதனாகப் பிறக்க வேண்டும்-

அவன்காதலித்து வேதனையில் வாட வேண்டும்

பிரிவென்னும் கடலினிலே மூழ்கவேண்டும்-

அவன் பெண்ணென்றால் என்னவென்று உணர வேண்டும்"[72]

என்ற பாடலிலும்,

பிறக்கும் போதும் அழுகின்றான்

இறக்கும் போதும் அழுகின்றான்

ஒரு நாளேனும் கவலை இல்லாமல்

சிரிக்க மறந்தாய் மானிடனே"[73]

என்ற பாடலிலும் அழுகைச் சுவையினைக் கண்ணதாசன் படைத்துள்ளார்.

- காத்து வாங்க பீச்சுப் பக்கம் (தொ-1.ப-.360) (பேதமை)
- புத்தியுள்ள பிள்ளையின்னா (தொ.1 ப -369) (மடம்)
- பின்னங்காலுக்கு முட்டு கொடுக்குது (தொ.1 ப-373) (இளமை எள்ளல்)
- வாழ்வை இழந்தேன் முதுமை அடைந்தேன் (தொ.1 ப-215)(இளிவரல்)
- பஞ்சுபோல் நரை வலிந்து (தொ.2 ப-67) (இளிவரல்)
- மானல்லவோ கண்கள் தந்தது(தொ.1 ப-253)(மருட்கை)
- சேவல் வந்து முட்டையுமிட்டது (தொ.2 ப-391)(புதுமை)
- நான் போட்டால் தெரியும் போடு(தொ.1 ப-377)(பெருமிதம்)
- அழியாத கலை என்று எனைப் பாடுவர் (தொ.1 ப-439)(பெருமிதம்)
- மூன்று நிலங்களுக்கும் முடிசூடினாள் புவனம் (.தொ.5.ப-112) (பெருமிதம்)
- அச்சத்திலே தலைமட்டும் குனிந்து (.தொ.1.ப- 181)(உவகை)
- ஆனது ஆகட்டும் போனது போகட்டும் (.தொ.1.ப- 241)(உவகை)

போன்ற தொடக்கமுடைய பாடல் அடிகளிலும் கண்ணதாசன் சுவையணியைப் பாடியுள்ளார்.

**பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் பாடல்களில் சுவைஅணி**

தாழ்வான நிலை இளிவரல் சுவையைத் தரும். பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரத்தின் பாடலகள் இளிவரல் சுவை உடையதாக உள்ளது.

"மட்டமான பேச்சு தன் வாயை கெடுக்குதுங்க- அது

வெட்டித்தனமா கேக்கறவங்க காதையும் கெடுக்குதுங்க

சந்திலும் பொந்திலும் வாதம்-அதனால்

தலைவலி மருந்துக்கு லாபம்-அந்த

ஜாடையில் சில கேடிகள் செய்வது சட்டையின்

பைகளைக் கெடுக்குதுங்க புரளியும் வதந்தியும் மூட்டி"[74]

என்ற பாடலடிகள் வாய்ச்சொல் வீரர்களின் வீணான பேச்சு தரும் விபரீதங்களைப் பட்டியல் இடுகிறது. இவ்வகையில் இது இளிவரல் சுவை அணி உடையதாகின்றது.

நகைச்சுவை அணியானது பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் பாடலில்அமைந்துள்ளது,

"சின்னக்குட்டி நாத்துனா சில்லறைய மாத்துனா

குன்னக்குடி போற வண்டியில் குடும்பம் பூரா ஏத்துனா!

குளிரடிக்கிற குழந்தை மேலே துணியப் போட்டுப் போத்துனா

குவாகுவானு கத்துனதாலே முதுகில் ரெண்டு சாத்துனா"[75]

என்ற பாடலடிகள் ஒரு குடும்பத்தின் நகைச்சுவைச் செயல்களைக் காட்டுவதாக உள்ளதால் இது நகைச்சுவையணியாகின்றது.

அச்சத்தை வரவழைக்கும் மற்றொரு பாடல் பின்வருமாறு.

"மஞ்சள் குங்குமம் அணியும் வழக்கமுண்டோ- நல்ல
மனைவிக்குத் தேவையுள்ள
அடக்கமுண்டோ நெஞ்சில் -இரக்கம் உண்டோ
நேர்மை யுண்டோ-அவள் நேசனுக்கு
நடக்கும் இணக்கம் உடையவளோ!"[76]

என்ற பாடல் மனைவிக்கு அவள் கடமைகளைக் காட்டி சற்றே அச்சம் கொள்ளச் செய்வதாக உள்ளநிலையில் இது அச்ச மெய்ப்பாடு உடையதாக விளங்கி அச்சச்சுவையணியாக அமைகிறது.

"காதலிலே தோல்வியுற்றாள் கன்னியொருத்தி
கலங்குகின்றாள் அவனை நெஞ்சில் நிறுத்தி"[77]

என்ற அடிகளில் காதலிலே தோல்வியுற்ற கன்னி கலங்கி அழுதலால் இழிவு வகையில் அழுகைச்சுவை தோன்றுவதை உணரமுடிகின்றது.

இவ்வாறு பல சுவையணிகளைப் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் தன் திரையிசைப்பாடல்களில் படைப்பாக்கம் செய்துள்ளார்.

**வாலியின் பாடல்களில் சுவையணி**

வாலியின் பாடல்களில் பல சுவையணிகளை அவர் பயன்படுத்தியுள்ளமை அவரின் பாடல்களை ஆராயும்போது புலப்படுகின்றது.

"பத்துமாசம் மடியேந்தி பெத்தெடுத்த மகராசி
பச்சு புள்ள உன்ன விட்டு போன தெண்ணி அழுதாயா"[78]

என்ற பாடலில் அழுகைச்சுவையும்,

"அவ தாலாட்டு தந்த வரம் என் பாட்டுதான்
பட்டாள வேலைக்குத்தான் போய் சேர்ந்த புருசனுந்தான்

வீடு வந்து சேரவில்லே சேதி என்ன தெரியவில்லே

ஆனாலும் தன் புருஷன் வந்து சேரக்கூடுமுன்னு

வெச்ச பூவை எடுக்க வில்லே"[79]

என்ற பாடலில் அழுகைச்சுவையும்.

"காட்டுக் குயிலு மனசுக்குள்ளே

பாட்டுக்கென்றும் பஞ்சம் இல்ல... பாடத்தான்

தவிலைத் தட்டு துள்ளிக்கிட்டு

கவலை விட்டு கச்சைகட்டு... ஆடத்தான்"[80]

என்ற பாடலில் உவகைச் சுவையும்

" சோறு போடத் தாயிருக்கா

பட்டினியப் பார்த்ததில்ல

தாயிருக்கும் காரணத்தால்

கோயிலுக்குப் போனதில்ல"[81]

என்ற பாடலில் பெருமிதச் சுவையும், இடம் பெற்றுள்ளன.

**வைரமுத்துவின் பாடல்களில் சுவையணி**

வைரமுத்து இன்பச்சுவையை உவகை படப் பாடலில் தருகிறார். இதனை,

பெ: என்ன சொல்லி விளக்க எனக்கிது புதுசு

இடைவெளி இல்லாமத் துடிக்குது மனசு

ஆண்: காணாதத கண்ட ஒடம்பு நூலாச்சு- இரு கண்ணுக்குள்ள தீவிழுந்தது போலாச்சு இன்னும் கொஞ்சம் கிட்ட வந்தா என்னாவது"[82]

என்ற பாடலில் உவகை அணி இடம் பெற்றுள்ளது.

"உழுதானே உழுதானே விவசாயி உழுதானே
யாருக்கு என்னவச்சான்
மனைவிக்கும் மகனுக்கும் மகன்பெத்த மகனுக்கும்
கடன்தானே மிச்சம் வச்சதான்"[83]

என்ற பாடலில் அவலச்சுவை அமைந்துள்ளது.

"உன்னையும் என்னையும் பெற்றது காதல்
உலகப் பந்தின் உயிர்தான் காதல்
ஊசி முனையின் காதுக்குள்ளே
ஒட்டகங்களை நுழைப்பது காதல்
காதின் ஓரம் நரைத்தும் கூட
இளமை போட்டு இழுப்பது காதல்"[84]

என்ற பாடலில் மருட்கை (வியப்பு) சுவை அமைந்துள்ளது.

" கொங்கு நாட்டுத் தங்கமடா
கொள்கையிலே சிங்கமடா
எட்டுச் சில்லா மன்னனடா
ஏழைகளின் அண்ணனடா
சுக்கிர திசையோ உச்சத்தில்
சொல்லித்தான் அடிப்பேன் மச்சத்துல"[85]

என்ற பாடல் வீரச்சுவைக்கு எடுத்துக்காட்டாக அமைகிறது.

- பையில் உள்ள எட்டணாவைப் பத்துமுறை எண்ணுவான் (ப.46)(எள்ளல்)
- தூண்டி முள்ளுக் கண்ணழகா (ப.459)(எள்ளல்)

- குண்டான ஓடம்பிளைக்கக் குதிரைச் சவாரி செஞ்சா(ப.427)(எள்ளல்)
- கண்திறந்த தேசம் அங்கே் (ப.834)(அழுகை)
- பொருள் வித்து மனுசன் வாங்கும் காலம் போனதே (ப.1071)(இளிவரல்)
- சோறில்லை சொட்டுமழை நீரில்லை (ப.1102)(இளிவரல்)
- வானவில்லைக் கொஞ்சம் (ப.410)(மருட்கை)
- பூப்பூக்கும் ஓசை (ப.577) (மருட்கை)
- மாலைசூடும் தேதி எண்ணிப் பத்துவிரலும் தேயும் (ப.47)(மருட்கை)
- பாவி மக கண்ணீரில் பாயும் மெதந்திருக்கும் (ப.60)(மருட்கை)
- சாராயம் குடுத்தாலும் தங்க வடம் போட்டாலும் (ப.1092)(அச்சம்)
- எந்தன் பாடல் கேட்டு (ப.132)(பெருமிதம்)
- பூச்சியைப் பார்த்தாலே (ப.1085)(பெருமிதம்)
- பகைவனுக்கருள்வது பிழையே (ப.256)(வெகுளி)
- இன்றேனும் என்றேனும் ரெண்டாகத் துண்டாடிக் (ப.785)(வெகுளி)
- பூமியெங்கும் பூந்தோட்டம் (ப.82)(உவகை)

என்ற தொடக்கமுடைய பாடல்களிலும் சுவையணியைப் பயன்படுத்தியுள்ளார் வைரமுத்து.

**பா. விஜய் பாடல்களில் சுவையணி**

பா. விஜய் வியப்புச் சுவைப் பாடல்களைத் தந்துள்ளார்.

“சூரியன சூரியன சுருக்குப் பையில் நான்

அள்ளிவர அள்ளிவரஆசைப்பட்டேன்

சிங்கத்தையும் சிங்கத்தையும் சிலநாளா

என் சின்ன சின்ன கம்மலுக்குள் பூட்டிகிட்டேன்

தண்ணிக்குள்ளதான் நட்ட தாமரைக்கொடி

தெப்பக் குளத்தையும் குடிச்சிருச்சே"[86]

என்ற பாடலில் மருட்கை சுவை அமைந்துள்ளது.

"உளிதாங்கும் கற்கள் தானே

மண் மீது சிலையாகும்

வலி தாங்கும் உள்ளம் தானே

நிலையான சுகம் காணும்"[87]

என்ற பாடலில் அவலச் சுவையைத் தாங்கும் மனப்பாங்கைப் பாடியுள்ளார் பா.விஜய். இவ்வாறு சுவையணிகள் திரைப்படப் பாடலாசிரியர்களால் பாடப்பெற்றுள்ளன.

## தொகுப்புரை

ஆய்வுக் களத்தில் எடுத்துக்கொள்ளப்பெற்ற திரையிசைப்பாடல்களில் உவமை அணிக்கு அடுத்ததாக தன்மையணி, பின்வருநிலையணி, சுவையணி ஆகியவற்றைக் கவிஞர்கள் பெருமளவில் எடுத்தாண்டுள்ளனர்.

ஆய்வுக் களத்தில் எடுத்துக்கொள்ளப்பெற்ற கவிஞர்களை ஒப்பு நோக்கிக் காணுகையில் கவிஞர் கண்ணதாசன் தன் திரையிசைப்பாடல்களில் தன்மையணி, பின்வருநிலையணி, சுவையணி போன்றவற்றை அதிக அளவில் பயன்படுத்தியவராக விளங்குகிறார்.

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரனார், பா. விஜய் ஆகியோர் பின்வருநிலையணியை அதிக அளவில் பயன்படுத்தியவர்களாக விளங்குகின்றனர்.

ஆய்வுக் களத்தில் எடுத்துக் கொள்ளப்பெற்ற கவிஞர்களை ஒப்பு நோக்கிக் காண்கையில் வைரமுத்து சுவையணிகளை அதிகம் பயன்படுத்தியவராக விளங்குகிறார்.

ஆய்வுக் களத்தின் அடிப்படையில் காண்கையில், வாலி சுவையணிகளை ஓரளவிற்குக் கையாண்டவராகவும், பின்வருநிலையணியையும் தன்மையணியையும் அதிகம் பயன்படுத்தியவராகவும் அறியப்பெறுகிறார்.

நூற்றுக்கும் மேற்பட்ட பாடல்கள் தன்மையணி, பின்வருநிலையணி, சுவையணி சார்ந்து அமைந்தனவாக ஆய்வுக்களத்தில் விளங்குகின்றன.

திரைப்படப் பாடலாசிரியர்கள் அதிகம் பயன்படுத்திய அணிகளாக தன்மையணி, பின்வருநிலையணி, சுவையணி ஆகியன விளங்குகின்றன என்பதனை இவ்வியலின் மூலம் அறியமுடிகிறது.

**சான்றாதாரங்கள்**


1. கண்ணதாசன், கண்ணதாசன் திரையிசைப்பாடல்கள்,தொ-2,ப.23
2. மேலது, தொ.2,ப.7
3. மேலது, தொ..2,ப.34
4. மேலது, தொ.2,ப.37
5. மேலது, தொ.2,ப.39
6. மேலது, தொ.2,ப.72
7. மேலது, தொ.2,ப.336
8. மேலது, தொ.2,ப.337
9. மேலது, தொ.3,ப.13
10. மேலது, தொ.3,ப.187
11. பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், பாடல்கள், ப.64
12. மேலது, ப.14
13. மேலது, ப.41
14. மேலது, ப.42
15. மேலது, ப.136
16. வாலி, வாலி ஆயிரம் திரையிசைப்பாடல்கள், தொ.2,.ப.460
17. மேலது, ப.257
18. மேலது. ப.362
19. மேலது, ப.386
20. வைரமுத்து, ஆயிரம் பாடல்கள், ப.340
21. மேலது, ப.191
22. மேலது, ப.194
23. மேலது, ப.217
24. மேலது, ப.344
25. பா. விஜய், பா.விஜய்யின் திரைப்படப்பாடல்கள், பா.1,ப.180
26. மேலது, பா.2,ப.27
27. கண்ணதாசன், கவிஞர் கண்ணதாசன் திரையிசைப்பாடல்கள், தொ.2,பக்.144-145
28. மேலது, தொ.2, ப.143,144
29. மேலது, தொ.3, ப.346
30. மேலது, தொ.3, ப.395

31. மேலது, தொ.2, ப.364
32. மேலது, தொ.1, ப.55
33. மேலது, தொ.1, ப.121
34. மேலது, தொ.1, ப.135
35. மேலது, தொ.1, ப.269
36. மேலது. தொ.3, ப.170
37. பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடல்கள், ப.32
38. மேலது, ப.20
39. மேலது, ப.46
40. மேலது, ப.55
41. மேலது, ப.57
42. மேலது, ப.65
43. மேலது, ப.62
44. மேலது, ப.107
45. மேலது, ப.201
46. மேலது, ப.96
47. வாலி, வாலி ஆயிரம் திரையிசைப்பாடல்கள், தொ.2,பக்.323
48. மேலது. ப.222-.223
49. மேலது, ப.220-221
50. மேலது, ப.227
51. மேலது, ப.314
52. மேலது, ப.61
53. மேலது, ப.231
54. மேலது, ப.330
55. வைரமுத்து, ஆயிரம் பாடல்கள், ப.410
56. மேலது, ப.607-608
57. மேலது, ப.175
58. மேலது, ப.338
59. மேலது, ப.212
60. மேலது, ப.208
61- மேலது, ப.680
62. மேலது, ப.377
63. பா. விஜய், பா.விஜய்யின் திரைப்படப்பாடல்கள், பாகம்.1,ப.80-81

64. மேலது, பா.2,ப.62-63
65. மேலது, ப.2,ப.10-11
66. மேலது, பா.2,ப.28
67. மேலது, பா.1,ப.53
68. மேலது, பா.2,ப.56
69. மேலது, பா.2,ப.64
70. மேலது, பா.2,ப.172
71. கண்ணதாசன், கவிஞர் கண்ணதாசன் திரையிசைப்பாடல்கள், தொ.2,பக்.**167**
72. மேலது, ப.290
73. மேலது, ப.322
74. பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடல்கள், ப.53
75. மேலது, ப.173
76. மேலது, ப.191
77. மேலது, ப.186
78. வாலி, வாலி ஆயிரம் திரையிசைப்பாடல்கள், தொ.2,.ப.86
79. மேலது, ப.88
80. மேலது, ப.152
81. மேலது, ப.351
82. வைரமுத்து, ஆயிரம் பாடல்கள்,ப.154
83. மேலது, ப-405
84. மேலது, ப-594
85. மேலது, ப-300
86. பா. விஜய், பா.விஜய்யின் திரைப்படப்பாடல்கள், பா.2,ப.192-194
87. மேலது,பா.1,ப.150

# இயல் - 4

## திரையிசைப்பாடல்களில் பிற அணிகள்

திரையிசைப் பாடல்களும் மரபுக் கவிதைகளை ஒத்தனவாகவே விளங்குகின்றன. புதுக்கவிதை புனைய வல்ல கவிஞர்களும் திரையிசைப் பாடல்களை எழுத முன்வருகையில் ஏறக்குறைய யாப்பு மரபுகளைக் கையாண்டே பாடல்களை எழுதியுள்ளனர். கவிஞர்கள் திரையிசைப் பாடல்களை எழுத எளிமையான யாப்பு மரபுகளைக் கையாளுகையில் அணி மரபுகளும் அவற்றுடன் இணைந்தே படைக்கப்பெறும் சூழலும் வந்துவிடுகின்றது.

திரையிசைப் பாடல்கள் சொல்வளம், பொருள்வளம், சூழலும் பொருந்தும் தன்மை, இலக்கிய நலம் பொருந்தியனவாக இருப்பதுடன் அணிநலம் உடையனவாகவும் திகழ்கின்றன. திரைப்படப் பாடலாசிரியர்கள் தமிழ் அணிமரபினை உணர்ந்த நிலையில் தம் திரையிசைப்பாடல்களைப் படைத்துள்ளனர் என்பதும் இங்குக் குறிக்கத்தக்கது.

தமிழின் ஐவகை இலக்கண மரபில் அணி மரபு என்பது இன்னமும் உயிர்ப்புடன் இருப்பதைத் திரையிசைப்பாடல்கள் உணர்த்தி வருகின்றன. காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள் போன்றனவற்றின் தொடர்ச்சியாக திரையிசைப் பாடல்களும் இலக்கியத் தன்மை பெற அணி இலக்கண மரபு பெரிதும் உதவுகின்றது.

திரையிசைப் பாடல்களில் அதிக அளவில் பயன்படுத்தப்பெற்ற உவமை, தன்மை, பின்வருநிலை, சுவையணிகள் முன் இயல்களில் எடுத்துரைக்கப் பெற்ற நிலையில் இவ்வியலில் அவை தவிர்ந்த பிற அணிகள் பயன்படுத்தப் பெற்ற நிலை எடுத்துரைக்கப்பெறுகின்றது.

**உருவக அணி**

அதுதான்இது என உறுதிப்படுத்தி உரைப்பது உருவக அணியாகும். இது உவமை அணியின் மறுதலையாகும். இவ்வணியினை திரைக்கவிஞர்கள் குறைந்த அளவே பயன்படுத்தியுள்ளனர்.

**கண்ணதாசன் பாடல்களில் உருவக அணி**

"கொண்டையிலே மலர்ச்செண்டு குலுங்கிட

வண்டு விழியெனும் கெண்டைகள் துள்ளிட"[1]

என்ற பாடல் அடிகளில் 'வண்டுவிழி' என விழியானது உவமிக்கப்பட்டு இது மீண்டும் கெண்டைகள் என உருவகம் செய்யப்படுவதால் உருவக அணியாக விளங்குகின்றது.

" பூவினும் மெல்லிய பூங்கொடி

பொன்னிறம் காட்டும் பைங்கிளி

சிறுமாவிலை பின்னிய தோரணம்

இருமைவிழி நாடகக் காவியம்"[2]

என்ற பாடலடிகளில் இடம்பெற்றுள்ள மைவிழி நாடகக்

காவியம் என்பது உருவகஅணி சார்ந்ததாகும்.

**வாலி பாடலில் உருவக அணி**

வாலியும் தன் பாடலில் உருவக அணியைப் பயன்படுத்தியுள்ளார்.

"புன்னகை முல்லை புது விழி குவளை

அழகிய அதரங்கள் அரவிந்தப் பூவோ

உன் கன்னங்கள் ரோஜா கொடி இடை அல்லி

நிறத்தினில் நீயொரு செவ்வந்தி பூவோ

எனக்கென பிறந்ததோ குன்றினில் தோன்றும்

குறிஞ்சியும் இங்கே குமரியாய் விளைந்ததோ"[3]

என்ற வாலியின் பாடலில் புன்னகை முல்லை, விழி குவளை, கன்னங்கள் ரோஜா, இடை அல்லி, என்பன உருவக நிலைப்பாடு

உடையனவாகும்.இவ்வகையில் உருவக அணி பயன்பாடு என்பது திரையிசைப் பாடல்களில் குறைந்த அளவில் காணப்படுகிறது.

**தீவக அணி**

செய்யுளில் ஓரிடத்தில் நின்ற சொல் அச்செய்யுளின் பல இடங்களில் உள்ள சொற்களுடன் பொருந்தி பொருள் நிறைவைத் தருவது தீவக அணியாகும். இவ்வணியும் திரைக்கவிஞர்களால் எடுத்தாளப்பெற்றுள்ளது.

**கண்ணதாசன் பாடல்களில் தீவக அணி**

“மன்னவர் நாடும் மணிமுடியும் மாளிகை
வாழ்வும் தோழியரும்பஞ்சணை சுகமும்
பால் பழமும் படையும் குடையும்
சேவகரும் ஒன்றாய் இணையும் காதலர்
முன்னே கானல் நீர்போல் மறையாதோ”[4]

என்ற பாடலடிகளில் இறுதி அடியில் இடம்பெற்றுள்ள “மறையாதோ” என்ற சொல் மற்ற அடிகளில் இடம்பெற்ற மன்னவர் நாடு, மணிமுடி, மாளிகை வாழ்வு, தோழியர், பஞ்சணை சுகம், பால் பழம், படை, குடை, சேவகர் முதலிய சொற்களுடன் பொருந்திப் பொருள் தருவதால் கடைநிலைத் தீவக அணியானது இப்பாடலில் இடம்பெற்றுள்ளமையை அறியமுடிகிறது.

கண்ணதாசன் மற்றொரு பாடலில்

“இனிமையானது-அந்த
இறைவன் போன்றது-அது
புனிதமானது- காதல்
பொருள் நிறைந்தது
பொருள் நிறைந்தது”[5]

என்று இடை நிலைத் தீவக அணியைப் பயன்படுத்தியுள்ளார். இப்பாடலில் காதல் என்ற சொல் இடையில் நின்று மற்ற அடிகளுடன் கூடி பொருள் நிறைவிக்கிறது.

**பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரனாரின் பாடலில் தீவக அணி**

தீவக அணியைப் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரமும் தன் திரையிசைப் பாடல்களில் எடுத்தாண்டுள்ளார்.

"மட்டமான பேச்சு சந்திலும் பொந்திலும் வாதம்-அதால்
தலைவலி மருந்துக்கு லாபம்-அந்த
ஜாடையில் சில கேடிகள் செய்வது
சட்டையின் பைகளைக் கெடுக்குதுங்க
கும்பல் சேர்த்து வம்பு வளர்த்து
குடும்பத்தைக் கலக்குதுங்க – பெரும்
குழப்பம் ஆக்கியே சண்டைகள் மூட்டி
பொழப்பையும் கெடுக்குதுங்க"[6]

என்ற பாடலடிகளில் 'மட்டமான பேச்சு' என்ற சொல் பாடலின் முதல் அடியில் இடம்பெற்று சந்திலும் பொந்திலும் வாதம்,தலைவலி மருந்துக்கு லாபம், சட்டையின் பைகளைக் கெடுக்குது,குடும்பத்தை கலைக்குது, பெரும் குழப்பம், சண்டைகள் மூட்டுது,பொழப்பை கெடுக்குது என்ற நிலையில் மற்ற அடிகளோடு பொருந்தி பொருள் அமைவதால் இது முதல்நிலைத் தீவக அணியாக விளங்குகிறது.

"மேட்டிலே நிற்காது வேற்றுமை பார்க்காது
காட்டுப் பயிர்களதைக் காணாவிட்டால் வாழாது
நாடெல்லாம் சுற்றிவரும் நன்மைதரும் அதன் பேரு
நதியய்யா எந்தன் பதிலய்யா"[7]

என்ற அடிகளில் இறுதி அடியிலுள்ள ‘நதியய்யா’ என்ற சொல் முதல் மூன்று அடிகளில் இடம்பெறும் மேட்டிலே நிற்காது. வேற்றுமை பார்க்காது, காட்டுப் பயிர்களைக் காணாவிட்டால் வாழாது . நாடெல்லாம் சுற்றிவரும் நன்மைதரும் முதலிய சொற்களொடு பொருந்திப் பொருள் தருதலால் கடைநிலைத் தீவகமாவதை அறியமுடிகிறது

“அந்த நாளிலே பஞ்ச பாண்டவர் அரசு
உரிமையை இழந்ததும் அழகு பாஞ்சாலி
அம்மையாருடன் அனைவரும் காட்டில்
அலைந்ததும் அன்பு மேலிடும் நளன் தமயந்தி
அல்லல் சுமந்து வருந்தியதும்
அரிய காதலைப் பிரிய நேர்ந்ததும்
ஆதாரம் இழந்ததும் சூதாட்டத்தாலே”[8]

என்ற பாடலில் ‘சூதாட்டத்தாலே’ என்ற சொல் மற்ற அடிகளில் பொருந்திக் கடைநிலைத் தீவகமாக நிற்கிறது. இவ்வாறு பட்டுக்கோட்டை பாடல்களில் தீவக அணியின் பயன்பாடு அதிக அளவில் உள்ளது.

**வாலியின் பாடலில் தீவக அணி**

வாலி ‘கள்’ என்ற போதை தரும் பொருளைக் கடைநிலைத் தீவகமாக தமது பாடலில் கையாண்டுள்ளார்.

“பொல்லாத கண்ணுக்கு விஷமாகும்
பொன்னான நெஞ்சுக்கு விருந்தாகும்
உல்லாசத் தேனை நீ குடிச்சாலே
உண்டான நோய்க்கு இது மருந்தாகும்
வண்டுகள் போகும் மலர்த்தேடி
வசந்த காலத்தில் இசை பாடி
அடிச்சது யோகம் ராஜாதான்

வண்டினைத் தேடுது ரோஜாதான்

சர்தான் போடா மடையன் தாண்டா

கள்ளைப் பால்போல் குடிப்பாண்டா”[9]

என்ற பாடலில் ‘கள்’ என்பது தீவகமாகியுள்ளது.

**வைரமுத்து பாடலில் தீவகம்**

வைரமுத்து தனது திரையிசைப்பாடலில் தீவக அணியைப் பயன்படுத்தியுள்ளார்.

“பார்வைக்கு நரைகள் விழுந்த பின்னும்

பருவத்தின் தேவை கழிந்த பின்னும்

எரிகின்ற பிரச்சினை தடுக்கையிலும்

தோளுக்கு மேல் பிள்ளை இருக்கையிலும்

கிழடுகள் பாடும் இது ஒரு காதல்”[10]

என்ற பாடலடிகளில் இறுதி அடியில் இடம் பெற்ற ‘காதல்’ என்ற சொல் மற்ற அடிகளான நரைகள் விழுந்த பின், பருவத்தின் தேவை கழிந்த பின், எரிகின்ற பிரச்சனை, தோளுக்கு மேல் பிள்ளை போன்ற சொற்களுடன் பொருந்திப் பொருள் தருவதால் இதுவும் கடைநிலை தீவகம் என அறியமுடிகிறது. மேலும் இப்பாடல் முதியோர் தம் காதல் இயல்பு உரைப்பதாகும்.

**பா. விஜய்யின் பாடலில் தீவக அணி**

பா.விஜய்யின் திரையிசைப்பாடலாக அமைந்துள்ள,

“ஓவியம் மெல்லிசை

கற்சிலை கவிதைகள்

அழகாக இல்லையே”[11]

என்ற பாடல் அடிகளில் இறுதி அடியில் இடம்பெற்ற 'அழகாக இல்லை' என்ற சொல் மற்ற அடிகளில் இடம்பெற்ற ஓவியம், மெல்லிசை, கற்சிலை, கவிதைகள் முதலிய சொற்களுடன் பொருந்திப் பொருள் தருவதால் கடைநிலைத் தீவகமாவதை அறியமுடிகிறது. இதே பாடலில் இடம்பெற்றுள்ள பின்வரும் அடிகளிலும் தீவக அணி இடம் பெற்றுள்ளது .

"ஈரமண் பிறைநிலா

பூமடல் பனிமழை

வெப்பமாய் உள்ளதே"[12]

என்ற பாடல் அடிகளில் இறுதி அடியில் இடம்பெற்ற 'வெப்பமாய் உள்ளதே' என்ற சொல் மற்ற இரு அடிகளில் இடம் பெற்ற ஈரமண், பிறை நிலா, பூமடல், பனிமழை ஆகிய சொற்களுடன் பொருந்திப் பொருள் தருவதால் கடைநிலைத் தீவக அணி இப்பாடலில் இருப்பதை உணரமுடிகின்றது.

**முன்ன விலக்கணி**

ஒரு பொருளை முதலில் நயம்பட சொல்லி பின்பு அதனை விலக்குவது என்னும் இலக்கணமுடையது முன்ன விலக்கணியாகும். இதனை ஓரளவிற்குத் திரையிசையில் திரைப்படப் பாடலாசிரியர்கள் கையாண்டுள்ளனர்.

**கண்ணதாசன் பாடல்களில் முன்னவிலக்கணி**

"காட்டிலுள்ள பாம்புகளில் நஞ்சுமிருக்கு- ஆனால்

கடிக்கக் கூடாதென்ற நெஞ்சுமிருக்கு

நாட்டிலுள்ள மக்களிடம் நாலுமிருக்கு-அந்த

நாலோடு சேர்ந்து கொஞ்சம் வாலுமிருக்கு"[13].

என்ற பாடலில் முன்ன விலக்கு அணி சார்ந்ததாகும். பாம்பினை முன் சொல்லி பின்பு அதனை மக்களைவிட மேலானது என விலக்கிய திறம் முன்னவிலக்கணியாக உள்ளது.

"பள்ளியறை நீ இல்லாமல் பாசி படிந்தது – என்
பஞ்சணையில் நீ இல்லாமல் தூசி விழுந்தது
நள்ளிரவில் நீ இல்லாமல் தூக்கம் கலைந்தது – என்னை
ரசிப்பதற்கு நீ இல்லாமல் பொழுது விடிந்தது"[14]

என்ற பாடலில் தலைவனின் துணையில்லாமல் நிகழ்ந்த நிகழ்வுகளைச் சுட்டிக்காட்டி இனிமேலும் பிரியாதிருக்கக் குறிப்பின் வழி பிரிவு விலக்குதலால் முன்னவிலக்கணியாவதைக் காணமுடிகின்றது.

**பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடலில் முன்னவிலக்கணி**

"கூட்டிலே குஞ்சு பறக்க நினைத்தால்
குருவியின் சொந்தம் தீருமடா
ஆட்டுலே குட்டி ஊட்ட மறந்தால்
அதோட சொந்தம் மாறுமடா –காலை
நீட்டியே வைத்து நெருப்பாகும் போது
நேசம் பாசம் பொருளாசைக் கெல்லாம்
காட்டிய ஒருபிடி வாய்க் கரிசியிலே
கணக்குத் தீர்த்திடும் சொந்தமடா"[15]

என்ற அடிகளில் வாழ்வில் எந்த உறவுகளும் நிரந்தரமானதல்ல என்று எடுத்துக்கூறி ஆசைப் பற்றுள்ள வாழ்க்கையைக் குறிப்பின் வழி விலக்கினமையால் முன்னவிலக்கணி இடம் பெறுகின்றது.

**வைரமுத்து பாடலில் முன்னவிலக்கணி**

"சொத்து சுகங்கள் நம்மிடத்தில் மெத்த உண்டு
உள்ள வரையில் இன்பம் கொள்வேன்
முத்தச் சரங்கள் கொண்டு வைக்க இடம் இல்லை
நட்சத்திரத்தை எங்கே வைப்பேன்

விண்ணைப் பிரிக்கின்ற போது மயங்குது

உன்னைப் பிரிகின்ற போது கலங்குது மனது

கண்ணா என்னை விட்டு நீ செல்லும்பொழுது –என்

கண்ணில் உள்ள தூக்கமும் செல்லும் அழுது”[16]

என்ற அடிகளில் பொருள் வயின் பிரிவு மேற்கொள்ளவிருக்கம் தலைவனைப் பிரிவதால் ஏற்படும் துன்பங்களையும் தன்னிடம் உள்ள செல்வச் சிறப்பையும் எடுத்துக்கூறி பிரிவு வேண்டாம் என குறிப்பின் வழி விலக்குவதால் இப்பாடலடிகள் முன்னவிலக்கணியாக அமைகின்றது.

**வேற்றுப்பொருள் வைப்பணி**

கவிஞன் தான் கூறவந்த சிறப்புப் பொருளை உலகமறிந்த பொதுப்பொருள்களைக் கொண்டு விளக்கும் இலக்கணமுடையது வேற்றுப்பொருள் வைப்பணியாகும். இவ்வணியைக் கவிஞர்கள் திரையிசைப்பாடல்களுக்குள் கையாண்டுள்ளனர்.

**பட்டுக்கோட்டை கல்ணயாண சுந்தரத்தின் ̈ பாடலில் வேற்றுப்பொருள் வைப்பணி**

“ஓங்கி வளரும் மூங்கில் மரம் ஒண்ணையொண்ணு புடிச்சிருக்கு

ஒழுங்காக் குருத்துவிட்டுக் கெளைகெளையா வெடிச்சிருக்கு

ஒட்டாமெ ஒதுங்கி நின்னா உயர முடியுமா? எதிலும்

ஒத்துமை கலைஞ்சுதுன்னா வளர முடியுமா?”[17]

என்ற பாடலில் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் பாடலில் மூங்கில் என்ற சிறப்புப்பொருள் முன்பும் அதன் பின்பு ஒற்றுமைப் பண்பு என்ற உலகப் பொதுப்பண்பும் இப்பாடலில் சொல்லப்பட்டு வேற்றுப்பொருள் வைப்பணியாக இப்பாடலடிகள் அமைகின்றன.

**வாலியின் பாடலில் வேற்றுப் பொருள் வைப்பணி**

"அன்றாடம் நூறு வகை பூப் பூக்கும்
ஆனாலும் காயாகும் சில பூக்கள்தான்
எல்லோர்க்கும் காதல்வரும் என்றாலும்
கல்யாண வைபோகம் சில பேர்க்குத்தான்
காதலன் காதலி தோற்றதுண்டு
காதல்கள் எப்பவும் தோற்பதில்லை"[18]

என்ற பாடலில் நூறுவகைப் பூக்களில் சில பூக்களே காய்களாக வளர்கின்றன. சில பூவாகவே கொட்டி விடுகின்றன. எல்லோர்க்கும் காதல் வரும். சிலருக்கு மட்டும் காதல் திருமணத்தில் முடியும். திருமணத்திற்கு வரை செல்லாத காதலர்கள் தோல்வி பெறுகிறார்கள். ஆனால் காதல் தோற்பதில்லை என்று இருபொருள்களைக் காட்டிச் சிறப்புப் பொருளை ஒரு பகுதியிலும் காதல் தோற்பதில்லை என்ற உலகறி பொதுப் பொருளை ஒரு பகுதியிலும் சொல்லி வேற்றுப் பொருள் வைப்பணியாக விளங்குகிறது.

**பா. விஜய் பாடலில் வேற்றுபொருள் வைப்பணி**

"விடியலில் கூட விடுமுறை இல்லை
விருந்துக்கு இனிமேல் புதியதும் இல்லை
இன்னுந்தான் சலிக்கலையா?
ஏற்றம் கட்டி நீர் இறைச்சி
வற்றுகின்ற கேணி ஏது"[19]

என்ற அடிகளில் 'காம வேட்கை சலிக்காது' என்பதை உரைக்க அதனையொத்தவற்றை உரைத்துத் தொடங்கி 'ஏற்றம் கட்டி நீர் இறைச்சி வற்றுகின்ற கேணி ஏது' என்ற உலகறிந்த வேறொரு பொருளை உரைத்து முடித்தலால் வேற்றுப்பொருள் வைப்பணியாக விளங்குகிறது.

**வேற்றுமை அணி**

இரு பொருள்களுக்கு இடையேயுள்ள ஒற்றுமையைக் காட்டிப்பின் அவற்றை வேறுபடுத்திக் காட்டுவது வேற்றுமை அணியாகும்.

உலக மக்கள் பொன்னையும், பெண்ணையும் பெரிதும் நேசிக்கின்றனர். இவை இரண்டில் எது சிறந்தது இறுதியில் அதன் தேவை மக்களின் மனதில் நிறைவு பெறுகிறது என்ற கேள்விக்கு விளக்கம் தருவதாக பாடல்வரிகள் அமைகின்றன.

**கண்ணதாசன் பாடல்களில் வேற்றுமை அணி**

கண்ணதாசன் திரைக்கதைக்குப் பொருத்தமாக பாடல் புனைபவர். இவரின் பாடல்களில் வேற்றுமை அணி கதையை ஒட்டிய நிலையிலும், பாத்திரப் பண்புகளை ஒட்டிய நிலையிலும், இசைக்கு ஏற்பவும் அமைக்கப்பெற்றுள்ளது.

“பொன்னாலே வாழும் புதிய உலகம் இது!
பெண்ணாலே வாழும் பெரிய உலகம் இது!
பொன் என்றால் உருண்டு விளையாடும்!
பெண் என்றால் திரண்டு விளையாடும்
பொன்னா! பெண்ணா ! உன் தேவையென்ன?”[20]

என்ற பாடலில் பொன்னையும், பெண்ணையும் ஒற்றுமைப்படுத்தி இறுதியில் ‘பெண்ணே’ பொன்னைவிட சிறந்தது என உறுதிபடுத்துவதால் ‘வேற்றுமையணி’ ஆயிற்று.

“கணவன் உயிராய் கட்டில் சிலையாய்
வாழ்வது பழமையடிகணவனைப் போலே
மனைவிக்கும் உரிமை நாகரீகமடி
படித்தபோதும் பெண்களின் கடமை
பதியின் சேவையடி! பதியின் சேவை மனைவிக்கும்
வேண்டும் அதுதான் வாழ்க்கையடி”[21]

என்ற பாடலடிகளில் கட்டில் சிலையாய் வாழ்வது பெண் வாழ்க்கையல்ல. உரிமை பெற்று வாழ்வதே வாழ்க்கை என்று கண்ணதாசன் இரு செய்திகளை வேறுபடுத்திப் பின்பு பதிக்கு எக்காலத்தும் சேவை செய்தலே சிறப்பு என்று முடித்து வேற்றுமை அணி பட பாடலை எழுதியுள்ளார்.

**வைரமுத்துவின் பாடல்களில் வேற்றுமை அணி**

வைரமுத்து வேற்றுமை அணியைத் தன் திரையிசைப்பாடல்களில் பயன்படுத்தியுள்ளார். உலகில் யார்தான் சிறந்த மனிதன். உலகை ஆள்பவன் சிறந்த மனிதனா? அறிவாளியா? முட்டாளா? கொலை செய்பவனா?, கொள்ளை அடிப்பவனா? யார் சிறந்த மனிதன் என்பதை வேற்றுமையணியாக,

"மனிதன் மனிதன் எவன்தான் மனிதன்
வாழும் போதும் செத்து செத்துப் பிழைப்பவன் மனிதனா
வாழ்ந்த பின்னும் பேரை நாட்டி நினைப்பவன் மனிதனா
பிறருக்காகக் கண்ணீரும் பிறருக்காகச் செந்நீரும்
சிந்தும் மனிதன் எவனோ அவனே
மனிதன் மனிதன் மனிதன்"[22]

எனப் பதிவு செய்துள்ளார். பலதரப்பட்ட மக்களில் எவர் பிறருக்காக வாழ நினைக்கிறாரோ, வாழ்கிறாரோ அவரே சிறந்த மனிதர் என்று வேறுபடுத்திக் காட்டியுள்ளதால் வேற்றுமையணி என்று அறியமுடிகிறது.

"குரங்கிலிருந்து பிறந்தானா? குரங்கை மனிதன் பெற்றானா?
யாரை கேள்வி கேட்பது டார்வின் இல்லையே!
கடவுள் மனிதனைப் படைத்தானா ?
கடவுளை மனிதன் படைத்தானா?
ரெண்டு பேரும் இல்லையே ரொம்ப தொல்லையே"[23]

என்ற பாடலிலும்,

“பாலுக்கும் கள்ளுக்கும் வண்ணம் ஒன்றுதான்- பார்க்கும்

கண்கள் ஒன்றுதான்- உண்டால் ரெண்டும் வேறுதான்”[24]

என்ற பாடலிலும்

“குடலுக்குள் பசியெடுத்தால்

உணவு கொடுக்க அடங்கிவிடும்

உடலுக்குப் பசியெடுத்தால்

கொடுக்கக் கொடுக்க வளர்ந்துவிடும்”[25]

என்ற பாடலிலும்

“உலகத்தின் ஜீவ சக்தி பசி- காதல் ரெண்டும் தான்

பசி கூடத் தீர்ந்து போகும் தீராது காதல்தான்”[26]

என்ற பாடலிலும் வேற்றுமை அணிகள் பயின்று வந்துள்ளன.

**பா. விஜய்யின் பாடலில் வேற்றுமை அணி**

பா.விஜய்யின் திரையிசைப் பாடலிலும் வேற்றுமை அணி பயின்று வந்துள்ளதை,

“வான் உயர்ந்த எவரஸ்டை டென்சிங் தொட்டான்

விண் வெளியில் நிலவைத்தான் ஆம் ஸ்ட்ராங் தொட்டான்

எனக்கு ரெண்டும் ரொம்ப சிம்பிள் உன்னைத் தொட்டேன்

எனக்கு ரெண்டும் ரொம்ப சிம்பிள் உன்னைத் தொட்டேன்

ஈசியாக கின்னஸ் புக்கில் இடம் பெற்றேன்”[27]

என்ற பாடல் விளக்கும் நிலவினைத் தொடல், தலைவியைத் தொடல் இரண்டுக்கும் வேறுபாடு காட்டப்பெற்று பெண் தொடல் சிறப்பாக வேற்றுமை அணி நிலையில் காட்டப்பெற்றுள்ளது.

**விபாவனை அணி**

ஒரு செயலைச் செய்யுளில் உரைக்கும்போது பலரும் அறிந்த காரணத்தை நீக்கி வேறொரு காரணத்தை உரைப்பது விபாவனை அணியாகும். இவ்விபாவனை அணியையும் திரையிசைப்பாடல்களில் திரைப்படப் பாடலாசிரியர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

**கண்ணதாசன் பாடல்களில் விபாவனை அணி**

கண்ணதாசன் விபாவனை அணியிலும் பாடல்களை எழுதியுள்ளார்.

"மல்லிகை மலரை நெருப்பென்றாள்- நன்
மணியோசைதனை இடியென்றாள்
மெல்லிய பனியை மழையென்றாள்-தன்
மேனியை வெறும் கூடென்றாள்"[28]

என்ற பாடலில் மல்லிகை மலர் குளுமையானது அது நெருப்பானது என்றும், மணியோசை இனிமையானது அது இடியோசை போன்றது என்றும், பனியை மழையென்றும், மேனியைக் கூடு என்றும் உலகறி காரணம் இன்றி வேறு காரணம் மோகத்தால் உரைக்கப்பெற்றுள்ளதால் இது விபாவனை அணியாகியது.

"எனது கைகள் மீட்டும் போது
வீணை அழுகின்றது
எனது கைகள் தழுவும்போது
மலரும் சுடுகின்றது "[29]

என்ற பாடலில் உலகொழி காரணம் விளக்கப்பெற்றுள்ளது. இதே அணியில்

"நிலவுக்கு என்மேல் என்னடி கோபம்
நெருப்பாய் எரிகிறது-இந்த
மலருக்கு என்மேல் என்னடி கோபம்
முள்ளாய் மாறியது"[30]

என்ற பாடலடிகளும் அமைந்துள்ளன.

இவ்வாறு கண்ணதாசன் திரையிசைப்பாடல்களில் விபாவனை அணியினைக் காண முடிகின்றது.

**வைரமுத்து பாடலில் விபாவனை அணி**

“முகிலினங்கள் அலைகின்றதே முகவரிகள் தொலைந்தனவோ

முகவரிகள் தவறியதால் அழுதிடுமோ அதுமழையோ”[31]

முகில்கள் காற்றால் அலைதலும் மழை பொழிதலும் உலகறிந்த காரணங்களாகும்.முகவரிகள் தொலைந்ததால் அலைவதாகவும் அழுவதாகவும் சிறப்பான காரணங்களை கூறுவதால் விபாவனையணியாவதை அறிய முடிகிறது.

**ஒட்டணி**

பாடலாசிரியர் தான் சொல்ல வந்த கருத்தை நேரடியாகக் கூறாமல் வேறொரு பொருளைக் காட்டிப் பெற வைப்பது ஒட்டணியின் இலக்கணம் ஆகும்.அவ்வகையில் திரைப்படபாடல்களில் ஒட்டணிகள் பயன்படுத்தப்பெற்றுள்ளன.

**கண்ணதாசன் பாடல்களில் ஒட்டணி**

கண்ணதாசன் ஒட்டணி இலக்கணம் சார்ந்த பாடல்களைப் பாடியுள்ளார்.

“வண்டு வருகின்றது மலரில் அமர்கின்றது

உண்டு சுவைக்கின்றது உறங்கி விழுகின்றது”[32]

என்ற பாடலில் தலைவன், தலைவி காதலை ஒட்டிய செய்திகள் தரப்பெற்றுள்ளன. இவை ஒட்டணி சார்ந்த நிலைப்பாடுகள் உடையன.

“மன்னனின் கௌரவம் சதுரங்க நடுவிலே

மறிக்கின்ற சேனையோ பிள்ளையின் வடிவிலே

ஆகட்டும் பார்க்கலம் ஆட்டத்தின் முடிவிலே

அறுபதை இருபது வெல்லுமா உலகிலே"[33]

என்ற பாடலில் சதுரங்க ஆட்டம் என்ற நிலையில் தந்தை மகன் தொழில் போராட்டம் குறிக்கப்பெற்று அறுபதை இருபது வெல்ல முடியுமா? என்று அனுபவம், அனுபவமின்மையை வெல்லுமா? என்ற நிலையில் செய்திகள் ஒட்டி உரைக்கப்படுகின்றன.

"வந்த வண்டு மதுவை உண்டு
மயங்கி விழும் தெரியுமா- அந்த
மயக்கத்திலே படுக்கை போட்டு
உறங்கி விடும் புரியுமா"[34]

என்ற பாடலடிகளிலில் காமத்தின் குறிப்புகள் வண்டு, மது செயல்பாடுகள் கொண்டு ஒட்டி உரைக்கப்பெற்றுள்ளன. எனவே இதுவும் ஒட்டணியாகின்றது.

"நிலவைப் பார்த்து வானம் சொன்னது
என்னைத் தொடதே!
நிழலைப்பார்த்து பூமி சொன்னது
என்னைத் தொடதே!
நதியைப்பார்த்து நாணல் சொன்னது
என்னைத் தொடதே!
நாளைப் பார்த்து இரவு சொன்னது
என்னைத் தொடதே!"[35]

என்ற பாடலில் தலைவி நெருங்கி வரும் நிலையில் தலைவன் தன்னை நெருங்காமல் இருக்கவேண்டும் என்பதைச் சுட்ட இத்தனை செய்திகளை வழங்குவதாக உள்ளது. இவ்வாறு கண்ணதாசன் பல பாடல்களில் ஒட்டணியைக் கையாண்டுள்ளார்.

**பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் பாடலில் ஒட்டணி**

"கன்று நட்ட நீர் இரைத்துக்
கண் விழித்துக் காத்திருந்து
பிஞ்சு விட்டக் கனியாகும் போதிலே –கிளையில்
துண்டுபட்டால் என்ன பலன் வாழ்விலே"[36]

என்ற பட்டுக் கோட்டைக் கல்யாணசுந்தரத்தின் பாடலில் விளைச்சல் வரும்போது அதனைத் தடுக்கும் நிலை ஏற்பட்டால் என்று வாழ்வில் வரும் துன்பத் தடைகளை இப்பாடல் ஒட்டணியாகக் காட்டுகிறது.

**கவிஞர் வாலியின் பாடல்களில் ஒட்டணி**

"ஒரு இறைவன் வரைந்த கவிதை
புதிய கவிதை இனிய கவிதை
கதை முடிவும் தெரிவதில்லை
இளைய மனதை இழுத்த கவிதை
பாசம் என்றொரு ராகம் கேட்கும்
பார்வை அன்பெனும நீரை வார்க்கும்
பாடும் நாள் இதுதான்[37]

என்ற பாடலும் ஒட்டணி சார்ந்து அமைவதாகும்.

**வைரமுத்துவின் பாடலில் ஒட்டணி**

வைரமுத்துவும் ஒட்டணி சார்ந்து பாடல்கள் எழுதியுள்ளார்.

"என்னைப் பார்த்து ஒரு மேகம்
ஜன்னல் சாத்தி விட்டுப்போகும்
தண்ணீரில் மூழ்காது காற்றுள்ள பந்து"[38]

என்ற பாடல் தண்ணீரில் மூழ்காது காற்றுள்ள பந்து என்ற நிலையில் தன் உள்ளத்தை மறைக்கும் தலைவியின் நிலையை ஒட்டிக் கூறுவதாக அமைவதால் இப்பாடலில் ஒட்டணி பயின்று வந்துள்ளது.

"தாகம் எடுக்கிற நேரம் வாசல் வருகுது மேகம்
மதுமழை பொழியுமா மலர்வனம் நனையுமா
இனி சந்தனப் பூக்களில் சிந்தும் மகரந்தம்"[39]

என்ற பாடலடிகள் தலைவியின் வருகையை ஒட்டணியால் பாடியது விளக்ககிறது.

மல்லிகைப் பூப் பூத்திருக்கு-அதுமழையில் நனைஞ்சிருக்கு
வருசமெல்லாம் காத்திருக்கு- ஒரு வண்டுக்குத் தவமிருக்கு"[40]

என்ற 'தாய்மேல் ஆணை' படத்தில் வரும் பாடலிலும் ஒட்டணி பயன்படுத்தப்பெற்றுள்ளது.

**பா.விஜய் அவர்களின் ஒட்டணிப் பாடல்கள்**

"மயிலே மயிலே தோகை தருவியா?
தோக அதிலே சேல நெய்யணும்
யாருக்குன்னு மயிலே நீதான் கேட்காதே
எனக்குத் தெரியாதே!
நிலவே நிலவே விண்மீன் தருமா?
விண்மீன் அதிலே வீடு கட்டணும்"[41]

என்ற பாடலில் மயில் தோகை, விண்மீன் போன்றவற்றைத் தலைவன் கேட்கிறான். இதன்வழி அவனது காதல் சிறப்பு ஒட்டணியாக வெளிப்படுகிறது.

இவ்வாறு ஒட்டணியையும் திரையிசைப் பாடல்களில் அமைத்துத் திரைப்படப்பாடலாசிரியர்கள் காட்டியுள்ளனர்.

**அதிசயவணி**

ஒரு பாடலில் ஒரு பொருளின் அல்லது ஒருவரின் அழகை கற்பனைத் திறன் மிக்குற கேட்போர் வியக்கும் வகையில் உரைக்கும் நிலை அதிசயவணியாகும். இதனை உயர்வு நவிற்சி அணி என்றும் அழைக்கலாம். இவ்வகையில் கவிஞர்கள் கற்பனை உடையவர்கள். குறிப்பாக திரைப்படப் பாடலாசிரியர்கள் நிறைய உயர்வு நவிற்சிக் கற்பனைகளைத் தம் பாடல்களில் தந்துள்ளனர்.

**கண்ணதாசன் பாடல்களில் அதிசய அணி அமைந்த பாடல்கள்**

கண்ணதாசன் பல அதிசய அணி சார்ந்த பாடல்களைப் படைத்துள்ளார். ஆகாயத்தை பந்தல் என்றும், அவற்றில் தங்கத்தால் ஆன ஊஞ்சல் ஒன்று ஆடுவதாக கூறியிருக்கும் அதிசயத்தை வியக்கும் விதத்தினை,

"ஆகாயப் பந்தலிலே

பொன்னூஞ்சல் ஆடுதம்மா

ஊர்கோலம் போவோமா

உள்ளம் அங்கே ஓடுதம்மா"[42]

என்ற பாடலில் அதிசயத்தக்க ஊர்கோலம் சொல்லப்பெற்றுள்ளது.

"அல்லிப் பந்தல் கால்களெடுத்து

ஆட்டம் ஆடிடவா

அங்கொரு மல்லிகை கிள்ளியெடுத்துப்

பாட்டுப் பாடிடவா"[43]

என்ற பாடலடிகளில் அல்லிப் பந்தலைக் கால்களாக ஆக்கி அதிசய அணியைக் காட்டியுள்ளார் கண்ணதாசன்.

"நிலவும் மலரும் பாடுது-என்

நினைவில் தென்றல் வீசுது-நிலை

மயங்கி மயங்கிக் காதலினால் ஜாடை பேசுது"[44]

என்ற பாடலில் நிலவும் மலரும் பாடும் நிலை அதிசய அணியாகிறது.

"பாலூற்றி உழவு செய்வார் பனிபோல விதை நடுவார்
மாம்பழத்தைச் சாறெடுத்து வயலுக்கு உரமிடுவார்
தேன்பாய நெல் விளையும் தென்பாண்டி நாட்டினிலே"[45]

என்ற அடிகளில் தென்பாண்டி நாட்டின் உழவின் பெருமையை உரைக்க உலகநடைமுறையைக் கடந்து வியக்கும் வண்ணம் உரைத்து அதிசய அணியைக் காட்டியுள்ளார். தலைவியின் உருவத்தை

"கட்டித் தங்கம் வெட்டியெடுத்துக் காதல் என்னும் சாறுபிழிந்து
தட்டித் தட்டிச் சிற்பிகள் செய்த உருவமடா"[46]

என்ற பாடலிலும் அதிசய அணி இடம்பெற்றுள்ளது. இவ்வாறு அதிசய அணியைக் கண்ணதாசன் பயன்படுத்திக்கொண்டுள்ளார்.

**பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் பாடல்களில் அதிசய அணி**

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரமும் அதிசய அணிப் பாடல்களைப் படைத்தளித்துள்ளார். காதலன் ஒருவன் காதலியைத் தேடிப் போகும் நிலையை,

"இலங்கை நகரத்திலே இன்பவல்லி நீயிருந்தால்
இந்துமகா சமுத்திரத்தை இங்கிருந்தே தாண்டிடுவேன்!
மேகம் போல வான வீதியிலே நின்னு மிதந்திடுவேன்
இடி மின்னல் மழை புயலானாலும் துணிஞ்சி இறங்கிடுவேன்!"[47]

என்று வானவீதியில் மிதக்கும் நிலையை அதிசயத் தக்க உணர்வாகக் கருதமுடிகின்றன ஆகவே இப்பாடல் அதிசயவணியாகின்றது.

தமிழ்ச்சமுதாயம் சாதி பேதமற்ற சமுதாயமாக விளங்கவேண்டும் என்று எண்ணுகிறார் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம். இதனைத் தரணியின் புதுமை என்கிறார்.

"ஜாதிகள் யாவும் ஒன்றாக மாறும்
தேதியில் தோன்றும் பொறுமை
சண்டைகள் தீர்ந்தே மனிதர்கள் சேர்ந்தால்
தாரணியில் அது புதுமை"[48]

என்ற நிலை அதிசயமாகக் கொள்ளத்தக்கது. பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் தம் பாடல்களில் நாட்டு நடப்பு சார்ந்த அதிசயங்களைப் பாடியுள்ளார் என்ற கருத்து இங்குப் பெறத்தக்கது.

**வாலியின் பாடல்களில் அதிசய அணி**

வாலியும் உயர்வு நவிற்சி பட அதிசய அணியைக் கையாண்டுள்ளார். வான்நிலவு ஒரு போதும் தரையிறங்குவது கிடையாது. கொடியானது துணையில்லாமல் படரமுடியாது. தாளமில்லாமல் பாட்டு கிடையாது. விடியாது இரவொன்று இருக்கமுடியாது. இவையெல்லாம் அவர் பாடலில் அதிசயமாகின்றன என்பதை,

"ஆகாயம் இல்லாமலே- ஒரு
நிலவு தரைமீது தள்ளாடுது
ஆதாரம் இல்லாமலே"[49]

என்னும் பாடல் சுட்டும்.

"ஒரேநாள் உனை நான் நிலாவில் பார்த்தது
உலாவும் உன் இளமைதான் ஊஞ்சலாடுது
மங்கைக்குள் காதலெனும் கங்கைக்குள் நான் மிதக்க
நெஞ்சத்தில் பேரெழுதி கண்ணுக்குள் நான் படித்தேன்"[50]

என்ற பாடலில் தலைவியை நிலவில் காண்கிறான் தலைவன் என்னும் நோக்கில் அதிசய அணியாயிற்று.

"வானமென்ன கீழிருக்கு

பூமி என்ன மேலிருக்கு

சொர்க்கலோகம் பக்கம் வந்தது

தேவகானம் பாடப்பாட

தேனும் பாலும் ஓட ஓட

தென்றல் வந்து தளாம் தட்டுது"[51]

என்ற பாடலில் சொர்க்கம் அருகில் வரும் அதிசயம் நிகழ்கிறது.

"பூங்காவியம் பேசும் ஓவியம்

ஆனிப்பொன் தேரோ ஆரிரோ ஆரோ

வெள்ளிப் பன்னீரோ ஆரிரோ ஆரோ"[52]

என்ற பாடலில் அதிசயங்கள் இடம்பெற்றுள்ளன.

"தூளியிலே ஆடவந்த வானத்து மின்விளக்கே

ஆழியிலே கண்டெடுத்த அற்புத ஆணிமுத்தே

தொட்டில் மேலே முத்து மாலை

வண்ணப்பூவா விளையாட"[53]

என்ற பாடலும் அதிசயவணி சார்ந்ததே ஆகும்.

"ஒரு பூமழைதான் இங்கு பொழியுது பார்

நீ புன்னகை புரிகையிலே

தேன் மழைதான் கண்ணில் வழியுது பார்

நீ தரிசனம் தருகையிலே"[54]

என்ற பாடலில் இடம்பெறும் பூமழை, தேன்மழை முதலியன அதிசயவணி சார்ந்தன.

- ஒரு பூங்காவனம் புது மனம் (தொ.2 ப-29)
- மீனம்மா அதிகாலையிலும் (தொ.2 ப-82)

என்ற தொடக்கமுடைய பாடல்களிலும் அதிசயத்தக்க பலவற்றை வாலி தந்துள்ளார். இவ்வாறாக அதிசய அணியை வாலி பலநிலைகளில் கையாண்டுள்ளார்.

**வைரமுத்துவின் பாடல்களில் அதிசயத் தன்மை**

வைரமுத்துவின் பாடல்களில் அதிசய அணி அதிக அளவில் பயன்படுத்திக் கொண்டுள்ளார்.

“வைரப் பொடியெடுத்து வாசலெல்லாம் கோலமிடு
மின்னல் கீத்தெடுத்து மேகம்வரை பந்தலிடு
வெள்ளரிப் பூப்பறிச்சு வீதியெல்லாம் சிந்திவிடு”[55]

என்ற பாடலில் வைரப்பொடி, மின்னல் கீற்று, மேகப்பந்தல் போன்றன அதிசய அணி சார்ந்தனவாகும்.

“வானெங்கும் தங்க விண்மீன்கள்
விழி இமை மூட சூரியன் வந்து
கடல் குளித்தேறும் நேரம்
வானில் ஒரு தீபாவளி
நாம் பாடலாம் கீதாஞ்சலி”[56]

என்ற பாடலில் தங்க விண்மீன்கள், சூரியன் கடல் குளித்தல், வானில் தீபாவளி என்பன அதிசய அணிக்கான சான்றுகளாகின்றன.

பல அதிசயங்களை ஒன்றுகூட்டி உரைக்கும் பாடல் பின்வருமாறு.

“பூவுக்குள் ஒளிந்திருக்கும் கனிக்கூட்டம் அதிசயம்
வண்ணத்துப்பூச்சி உடம்பில் ஓவியங்கள் அதிசயம்

துளை செல்லும் காற்று மெல்லிசையாதல் அதிசயம்

குருநாதர் இல்லாத குயில்பாட்டு அதிசயம்

அதிசயமே அசந்துபோகும் நீ எந்தன் அதிசயம்”[57]

என்ற பாடலடிகளில் மிகச் சாதாரண இயற்கை நிகழ்வுகளைக் கூட அதிசயமாக இப்பாடல் காட்டி அதிசய அணியாக்கியுள்ளது.

வைரமுத்து பின்வரும் தொடக்கமுடைய பாடல்களிலும் அதிசய அணியைக் கையாண்டுள்ளார்.

- வண்ண நிலவு என்ன விலை விலை என்று (.ப-347)
- காதல்பித்து ஏதேதோ பண்ணும் (.ப-508)
- நிலவொளியை நெசவு செய்து (.ப-595)
- கண்ணே உன் கை பட்டால் (.ப-288)

என்ற பாடல்களிலும் அதிசய அணி இடம்பெற்றுள்ளது.

**பா.விஜய்யின் பாடல்களில் அதிசய நயம்**

தலைவியை அதிசயித்துப் பாடும் முறைமையில் பா. விஜய் பல பாடல்களை ஆக்கியுள்ளார்.

“ஒரு மூன்றாம் பிறையைச் சுற்றி

தங்க ஜரிகை செய்த நெற்றி

பனிப் பூக்கள் தேர்தல் வைத்தால்

அடி உனக்கே என்றும் வெற்றி!”[58]

என்ற பாடலில் மூன்றாம் பிறையைச் சுற்றிய தங்க ஜரிகை அதிசயமாககி பாடல் புனைந்துள்ளார்.

"நீ கால் முளைத்த புஷ்பம்

கடல் நுரையில் செய்த சிற்பம்

உன் முன்பு வந்து நின்றால்

அந்த சொர்க்கம் கூட அற்பம்"[59]

என்ற பாடலில் கால்முளைத்த மலர், கடல் நுரையில் செய்த உடல் கொண்டவளாகத் தலைவி கற்பனை செய்யப்பெற்றுள்ளாள்.

"அருவிகள் மேலே நோக்கிப் பாய்ந்திடுதே

மலைகளும் துள்ளித்துள்ளி நடந்திடுதே

என்னை எனக்கே அறிமுகம் செய்தாய்

அழகிய சிண்டரெல்லா சிண்டரெல்லா"[60]

என்று அருவிகள் மேல்நோக்கிப் பாயும் நிலை, மலைகள் துள்ளி நடக்கும் நிலை அதிசயமாகின்றது.

"தேவதை அம்சம் நீயோ?

தேன்நிலா அம்சம் நீயோ?

பூமிக்கு ஊர்வலம் வந்த

வானவில் நீயோ."[61]

என்ற பாடலடிகளிலும் அதிசய அணி அமைந்துள்ளது.மேலும்,

- வானத்தில் இருந்து (பா.1.ப-3)
- என் மனசுல நீ நெனக்கிறியே(.பா.1.ப-217)
- மூச்சு விடும் ரோஜாப்பூ(பா 2 ள.ப-15)

என்ற பாடல்களிலும் அதிசய அணி இடம் பெற்றுள்ளது.

இவ்வாறு அதிசய அணியைத் தலைவியைப் பாராட்டும் போக்கில் திரைப்பாடலாசிரியர்கள் கையாண்டுள்ளனர். பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் மட்டும் சமுதாய நோக்கில் அதிசய அணியைக் கையாண்டுள்ளார்.

**தற்குறிப்பேற்ற அணி**

இயல்பாக நடக்கும் செயலில் தன் குறிப்பினை ஏற்றிக் காட்டல் தற்குறிப்பேற்ற அணியாகின்றது. இது இலக்கியத்தன்மை வாய்ந்த அணியாகும். இவ்வணியினையும் திரைப்படப் பாடலாசிரியர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

**கண்ணதாசன் பாடல்களில் தற்குறிப்பேற்ற அணி**

கண்ணதாசன் பாடல்களில் தற்குறிப்பேற்ற அணி பாடல்கள் அமையப்பெற்றுள்ளன.

"கடற்கரை காத்து அடிக்கிது
காத்திலே சேலை நடிக்கிறது
முன்னாலே வரச்சொல்லி அழைக்கிது
முகத்திலே கடுகு வெடிக்குது"[62]

என்ற பாடலில் காற்றில் சேலை நடிக்கிறது என்று தன் குறிப்பினை ஏற்றிப் படைத்துள்ளார் கண்ணதாசன்.

**வாலியின் பாடல்களில் தற்குறிப்பேற்ற அணி நயம்**

வாலி தமது பாடல்களில் தற்குறிப்பேற்ற அணியைப் பயன்படுத்தியுள்ளார்.

"வெளிச்சம் அடிக்குதடி ஒரு வெண்ணிலவு உள்ளே இருக்கா
மயக்கம் பிறக்குதடி ஒரு மல்லிகைப் பூ உள்ளே இருக்கா
நிலா நேரில் வந்து என்னை யாருன்னு கேட்காதா
நிழல் மேகம் என்னும் திரைச் சீலையை நீக்காதா
அடி ஊரெங்கும் உன் பேச்சு புதுவெள்ள மென வந்தாச்சு
உன்னை சந்திக்கும் பேராசை எந்தன் நெஞ்சில் உண்டாச்சு"[63]

என்ற பாடலில் இடம்பெற்றுள்ள நிலா அசைவது கேட்பதைப்போலவும், மேகம் திரைச்சீலையாகவும் தற்குறிப்பேற்றமாகி நிற்கின்றன.

"தூங்குமூஞ்சி மரங்களெல்லாம் வெட்கத்தினாலே
ஒரு தாவணிதான் போட்டிருக்கு பூக்களினாலே"[64]

இயல்பாக நடக்கும் நிகழ்வை வெட்கத்தினால் தாவணி போடுவதாக தன்குறிப்பை ஏற்றி கூறியுள்ளார்.

"கடலலை மணல்களைத் தழுவிட –ஒரு
கும்மாளம் கொண்டாட்டம போடும்
கரைகளில் கவிதைகள் எழுதி – குளிர்
காற்றோடு கை கொட்டி பாடும்"[65]

கடல் அலை கரைக்கு வருவதும் பேரொலி எழுப்புவதும் இயல்பாக நடக்கும் செயல் ஆகும் இதனை தன் கருத்தை ஏற்றி கூறுவதால் தற்குறிப்பேற்றம் என அறியமுடிகிறது.

**வைரமுத்துவின் பாடலில் தற்குறிப்பேற்றஅணி**

வைரமுத்து தன் திரையிசைப்பாடல்களில் தற்குறிப்பேற்ற அணியைப் பயன்படுத்தியுள்ளார்.

"மேகத்தை தூதுவிட்டா திசைமாறி போகுமின்னு
தாகமுள்ளமச்சானே தண்ணியை நான் தூதுவிட்டேன்
தண்ணிக்கு இந்தக்கன்னி தந்தனுப்பும் முத்தமெல்லாம்
எண்ணிக்கை குறையாம எப்ப வந்து தரப்போற"[66]

தண்ணீர் தூது போகும் நிலையில் தற்குறிப்பேற்ற அணி பயன்படுத்தப்பெற்றுள்ளது.

"பூவில் வண்டு கூடும்-கண்டு
பூவும் கண்கள் மூடும்
பூவினம் மாநாடு போடும்
வண்டுகள் சங்கீதம் பாடும்"[67]

என்ற பாடலடிகளில் பூக்களின் கூட்டம் மாநாடாகிறது. வண்டுகள் சங்கீதம் பாடுகின்றன. இவ்வாறு தற்குறிப்பேற்றம் அமைந்துள்ளது.

"வசந்தங்கள் வாழ்த்தும் பொழுது
உனது கிளையில் பூவாவேன்
இலையுதிர் காலம் முழுதும்
மகிழ்ந்து உனக்கு வேராவேன்"[68]

என்ற பாடலில் தற்குறிப்பேற்ற அணி இடம்பெற்றுள்ளது.

"தங்க தாமரை மலர்ந்தபின்பு மூடுமோ
பட்டுப் பூங்கொடி படர இடம் தேடுமோ
மலர்க்கணை பாயதோ மதுக்குடம் சாயதோ
இந்த ராஜமல்லிகை தேவகன்னிகை தானம்மா"[69]

இதே பாடலில்

"மழைசெய்யும் கோளாறு கொதிக்குதே பாலாறு "

என்ற அடிகளிலும் தற்குறிப்பேற்றம் அமைந்துள்ளது

"நனைந்த மலர்களுக்குக் குளிரெடுக்காதோ
வண்டுகள் பறந்து வந்து தலை துவட்டாதோ"[70]

என்ற பாடலிலும் தற்குறிப்பேற்ற அணி பயன்படுத்தப்பெற்றுள்ளது. மேலும் தொடக்கமுடைய பாடல்களிலும் தற்குறிப்பேற்ற அணி பயன்படுத்தப்பெற்றுள்ளது.

- பூமி என்னும் பெண்ணும் (.ப.308)
- ஒற்றைக் காலிலே பூக்கள் நிற்பது (.ப.642)

இவ்வாறு வைரமுத்து தற்குறிப்பேற்ற அணியைத் தன் திரையிசைப்பாடல்களில் பயன்படுத்தியுள்ளார்.

**பா. விஜய் பாடலில் தற்குறிப்பேற்ற அணி**

"சின்னசின்ன பூக்கள் எங்கள்
பெயர் கேட்டால் மலர்ந்து வாழ்த்திடுமே
ஜன்னல் வந்த காற்று எங்கள்
சொந்தம் பார்த்து கவிதை பேசிடுமே"[71]

என்ற பாடலிலும்

"உந்தன் வண்ணச் சேலையை
காற்றுக் கொண்டு போனதோ?
காற்றுக் கொண்டு போனதை
மேகம் வாங்கிக் கொண்டதோ?
வாங்கிக் கொண்ட சேலை தான்
வான வில்லும் ஆனதோ...."[72]

என்ற பாடலிலும் தற்குறிப்பேற்ற அணி பயின்று வந்துள்ளன.

"பகலினில் முழுவதும் வெய்யிலிலே
உன்னைச் சுட்டு வருத்திய வானமது
இரவினில் முழுவதும் அதை எண்ணியே
பனித்துளி சிந்தி அழுகிறது"[73]

என்ற பாடலில் வானத்தின் பகல், இரவு இயல்புகளைத் தற்குறிப்பேற்றமாக ஆக்கியுள்ளார்.

இவ்வாறு திரைப்படப்பாடலாசிரியர்கள் தற்குறிப்பேற்ற அணியைப் பயன்படுத்தி அழகு சேர்த்துள்ளனர்.

**ஏதுவணி**

ஏதேனும் ஒரு செயலைக் கூறும்போது அந்தச் செயல் நிகழ்ந்ததற்கான காரணத்தையும் காட்டி உரைப்பது ஏதுவணியாகும். ஏதுவணியையும் பல பாடல்களில் திரையிசைப்பாடலாசிரியர்கள் கையாண்டுள்ளனர்.

**கண்ணதாசன் பாடலில் ஏதுவணி**

பாலும் பழமும் இருந்தும் பசி இல்லை, பஞ்சணையில் காற்று வந்தும் தூக்கம் வரவில்லை. நால்வகை குணமிருந்தும் ஆசை விடவில்லை நடக்க காலிருந்தும் நடைவரவில்லை. இத்தனைக்கும் ஓரே காரணம் 'காதல்' காதல் வந்தவுடன் இயல்புநிலை மாறிப்போனதை விளக்கும்,

"பாலிருக்கும் பழமிருக்கும் பசியிருக்காது
பஞ்சணையில் காற்றுவரும் தூக்கம் வராது
நாலுவகைக் குணமிருக்கும் ஆசை விடாது "[74]

என்ற இப்பாடலடிகள் பசி, தூக்கம் போன்றன தோன்றாமல் இருக்கக் காரணம் 'காதல் உணர்வு' என்பதை விளக்குவதால் ஏதுவணியாகின்றன.

"இன்று நானும் கவியாக யார் காரணம்
அந்த நாலும் விளையாடும் விழி காரணம்"[75]

என்ற பாடலிலும்

"பனி எது? மழை எது?
நதி எது? கடலெது?
சகலமும் உனதொரு

கருணையில் எழுவது

வருவாய் குகனே வேலய்யா!"[76]

என்ற பாடலிலும்

"கன்னத்தில் என்னடி காயம்?

இது வண்ணக்கிளி செய்த மாயம்

கனி உதட்டில் என்னடி தவிப்பு

பனி காற்றினிலே வந்த வெடிப்பு"[77]

என்ற பாடலிலும்

"சங்கினால் பால் கொடுத்தால்

சந்தனவாய் நோகுமென்று

தங்கத்தால் சங்குசெய்து

தருவாராம் தந்தையடி"[78]

என்ற பாடலடிகளிலும் ஏதுவணி பயின்று வந்துள்ளன. இவ்வகையில் கண்ணதாசன் ஏதுவணியை இலக்கியச்சுவை தரும் நிலையில் பயன்படுத்தியுள்ளார் என்பது புலனாகின்றது.

**பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் பாடல்களில் ஏதுவணி**

சமுதாயத்தில் தோல்வி பெறுவது எதனால் என்ற கேள்விக்கான காரணங்களை அடுக்கி மொழிந்து பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் ஏதுவணி வரும்படி பாடியுள்ளார்.

"போர் படைதனில் தூங்கியவன் வெற்றி இழந்தான்- உயர்

பள்ளியில் தூங்கியவன் கல்வி இழந்தான்!

கடைதனில் தூங்கியவன் முதல் இழந்தான்- கொண்ட

கடமையில் தூங்கியவன் புகழ் இழந்தான்!"[79]

என்ற நிலையில் காரக ஏதுவணி இப்பாடலில் பயன்படுத்தப்பெற்றுள்ளது.

“நாளை நாளை என்று பொன்னான
நாளைக் கெடுப்பவன் குருடன்
நடந்து போனதை நெனைச்சு உடம்பு
நலிஞ்சு போனவன் மடையன் -
சுத்த மடையன்
நம்மைப் போல கெடச்சதைத் தின்னு
நெனைச்சதைச் செய்யிறவன் மனுஷன்”[80]

என்ற பாடலிலும் குருடன், மடையன், மனிதன் இவர்களுக்கான காரணத்தை கருவி ஏதுவாக இப்பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

**வாலியின் பாடல்களில் ஏதுவணி**

வாலியின் பாடல்களும் ஏதுவணி சார்ந்ததாகும்.

“கண்ணோடு தூக்கம் ஏது நீ இல்லையேல்
கண்ணீரில் நீந்துகின்றேன் தேன் முல்லையே
புதுத் தேன் முல்லையே புயல் காற்றில்
மரங்கள்சாயும் மலைசாயுமா பூவே
நம்காதல் மண்ணில் சாயாதம்மா”[81]

என்ற பாடலடிகளில் தூக்கம் வராமைக்குக் காரணம், மரங்கள் சாயும் காரணம், மலைகள் சாயா காரணம் ஆகிய தரப்பட்டுள்ளன. இதனால் இப்பாடல் ஏதுவணி சார்ந்ததாகின்றது.

“இரைபோடும் மனிதருக்கே
இரையாகும் வெள்ளாடே
இதுதான் உலகம் வீண்

அனுதாபம் கொண்டு –நீ

ஒரு நாளும் நம்பிடாதேடா அண்ணா”[82]

என்ற பாடலில் வீண் அனுதாபம் தேவையில்லை என்பது ஏதுவாக அமைந்துள்ளது.

**வைரமுத்துவின் பாடலில் ஏதுவணி**

“பணம் காசு இருந்தாலும் வருமோ நிம்மதி

பழஞ்சோறு அதுபோதும் மனமே சந்நிதி

குழப்பம் வந்தாலே அட உறக்கம் வராது

மனம் தெளிஞ்சாலே- ஒரு மயக்கம் வராது”[83]

என்ற பாடலில் செயலும் காரணமும் இணைந்தே வழங்கப்பெற்றுள்ளன.

“கண்ணகி கண்ணீர் சிந்தியதாலே காவியம் உண்டாச்சு

பேதையின் வாழ்விலே தாலியும் முள்ளாச்சு”[84]

என்ற பாடலடிகளில் கண்ணகியின் காவியமான சிலப்பதிகாரம் தோன்றுதற்கு அவளின் கண்ணீர் காரணமாக அமைந்ததைக் காட்டுகின்றது.

“அடுப்பங்கரைகள் சரியாய் இருந்தால்

படுக்கை அறைகள் சரியாகும்

அடுப்பங்கரையில் கோளாறென்றால்

படுக்கை அறையோ இரண்டாகும்”[85]

என்ற பாடலிலும் ஏதுவணி அமைந்துள்ளது.

**விஜய்யின் பாடலில் ஏதுவணி**

“இலக்கணம் உடைத்ததும் கவிதை வரும்

இரவினை துடைத்ததும் கனவு வரும்

ஸ்வரங்களை திறந்ததும் இசை மலரும்

உணர்வினை திறந்ததும் கலை வளரும்"[86]

என்ற பாடலில் கவிதை, கனவு, இசை, கலை ஆகியன வளர்தவற்கான காரணங்கள் குறிக்கப்படுவதால் இப்பாடலடிகள் ஏதுவணி சார்ந்தனவாக அமைந்துள்ளன.

**நுட்பவணி**

ஒரு பாடலில் உணர்த்த வேண்டிய செய்திகளை குறிப்பால் நுட்பமாக உணர்த்துவது நுட்பவணியாகும்.

**வைரமுத்து பாடலில் நுட்பவணி**

"ஊருக்கு மேற்கே ஊருணி ஓரம் ஒற்றை பனை இருக்கு-ஊர்

சத்தம் கொறஞ்சிருக்கு-இந்த செவ்வந்தி பூவு தாமரையாக

நேரம் பொறந்திருக்கு –என் நெத்தி குளிர்ந்திருக்கு"[87]

என்ற பாடலில் சந்திப்பதற்கான இடத்தைத் தலைவி நுட்பமாக உரைத்தலால் நுட்ப அணி ஆவதைக் காணமுடிகின்றது.

"இரவும் பகலும் உரசிக் கொள்ளும்

அந்திப் பொழுதில் வந்துவிடு

அலைகள் உரசும் கரையில் இருப்பேன்

உயிரைத் திரும்பித் தந்துவிடு"[88]

என்ற வைரமுத்துவின் பாடல் நுட்பவணி சார்ந்ததாகும். தலைவி தலைவனை பொழுது காட்டி இடம் காட்டி வரச்சொல்லும் நிலையில் இப்பாடல் நுட்பவணி சார்ந்து அமைகிறது. இவ்வணியினை அதிகம் திரைக்கவிஞர்கள் பயன்படுத்தவில்லை.

**இலேசவணி**

மனதில் கருதிய கருத்தை, குணங்களை, மெய்ப்பாடுகளை வேறு ஒன்றால் நிகழ்ந்ததாக மறைத்துக் கூறுவது இலேசவணியாகும். இவ்வணி சார்ந்த திரையிசைப்பாடல்கள் மிகக்குறைவான நிலையில் எழுதப்பெற்றுள்ளன.

**வைரமுத்து பாடலில் இலேச அணி**

"காண்பதென்ன இது மாயமா –என்

ரசிகரில் பல வகை இது ஒரு புது வகை

உங்கள் நேசம் வாழ்க

ஆடச் சொன்னால் அது நியாயமா-அட

யமுனையைச் சிறை கொண்டு

குவளைக்குள் அடைக்கின்ற உங்கள் வீரம் வாழ்க"[89]

என்ற பாடலில் புகழ்தல் போல் பழித்தல் இடம்பெறுவதால் இலேசணி ஆகும்

"எலுமிச்சை பழம் போல் எளம் பொண்ணு சிறுசு

வாக்கப்படும் வாயாடிக்கு வாயி மட்டும் பெருசு"[90]

என்ற பாடலடிகளில் சிறியது எனக் கூறி புகழ்தலும் பெரியது எனக்கூறி பழித்தலும் நிகழ்வதால் இலேச அணி ஆயிற்று.

**நிரல் நிறை அணி**

பாடலில் ஒரு சொல்லை முதலில் நிறுத்தி அதன்பின் அதற்குரிய பொருள், அல்லது அதற்கு இயைபான குணம், தொழில் ஆகிய ஏதேனும் ஒன்றை இயைபு நிரலாக நிறுத்துவது நிரல் நிறை அணியாகும். இந்த அணியும் ஓரளவு திரைக்கவிஞர்களால் பயன்படுத்தப்பெற்றுள்ளது.

"சொர்க்கம் தெரிகிறது-அதிலே

சுகமும் இருக்கின்றது

வெட்கம் வருகின்றது-அதையே

விடவும் சொல்கிறது."[91]

என்ற பாடலின் முறையே முதலடியில் சொர்க்கம் அடுத்த அடியில் அதற்கு நிரலாக சுகம், வெட்கம் அதற்கு அடுத்த அடியில் விடல் போன்ற இயைபு நிரல் நிறையாக வைக்கப்பெற்றுள்ள முறைமை நிரல் நிறை அணியாகும்.

"காலம் கரைந்தாலும் கோபம் சிதைந்தாலும்

பாசம் வெளுக்காது மானே

நீரில் குளித்தாலும் நெருப்பில் எரித்தாலும்

தங்கம் கருக்காது தாயே"[92]

என்ற வைரமுத்துவின் பூவே பூச்சூடவா படத்தில் இடம்பெறும் பாடலும் நிரல் நிறையணியாகின்றது. காலம் கரைதல், கோபம் சிதைதல் - பாசத்திற்கு இல்லை, என்பதும் நீரில் நனைத்தாலும், தங்கத்தை எரித்தாலும் தங்கம் கருப்பதில்லை என்பதும் நிரல் நிறையாகின்றன.

**ஆர்வமொழியணி**

ஒரு பாடலில் ஒருவனுக்கு ஏற்படும் அன்பின் மிகுதியையும், மகிழ்ச்சியின் மிகுதியையும் அமைத்துப் பாடும் பாடல்கள் ஆர்வமொழியணிப் பாடல்களாகின்றன. தலைவனை, தலைவியை உயர்த்திப்பாட இவ்வணி பெரிதும் திரைப்படப் பாடலாசிரியர்களால் கையாளப்பட்டது.

**கவிஞர் கண்ணதாசன் பாடலில் ஆர்வமொழியணி**

கண்ணதாசன் பல பாடல்களை இவ்வணியில் எழுதியுள்ளார்.

"கடலோரம் வீடுகட்டி கற்பனையால்

சுவரெடுத்து காதலினால் வாசல் வைத்து

காத்திருப்பேன்- என் கண்ணே உன்

பொன்னழகைப் பார்த்திருப்பேன்"[93]

என்ற பாடலில் தலைவன் தலைவிக்காக கட்டிய கற்பனைவீட்டின் திறம் தலைவனின் ஆர்வமொழியாகின்றது.

“பனிவண்ணம் உன் கன்னம்
பால்வண்ணம் உன் எண்ணம்
அன்பென்பதே என்னை ஆளும்
இன்பத் தேன் கிண்ணம்”[94]

என்ற பாடலிலும் தலைவி குறித்த தலைவனின் ஆர்வமொழிதல் வெளிப்பட்டுள்ளது.

“மாலை போல நான் - நெஞ்சில் மயக்கம் கொள்ளவா
சேலைபோல் நான்-அதைச் சேர்த்துக் கொள்ளவா
நாலு காலமும்-அதை நடத்திச் செல்லவா”[95]

என்ற பாடலில் தலைவி ஒருத்தி தலைவனைக் குறித்து ஆர்வமொழிகிறாள். மற்றொரு பாடலிலும் தலைவியின் ஆர்வம் வெளிப்படுகிறது.

“பட்டத்துக்குப் பிள்ளை ஒண்ணு
கட்டித் தங்கம் போலே வந்து
தொட்டில் போடப் போகுதுன்னு
கொட்டு மேளம்”[96]

என்ற பாடலும் ஆர்வமொழிதலே ஆகும்.

“கவிதை உலகம் கெஞ்சும்
உன்னைக் கண்டால்
கவிஞர் இதயம் கொஞ்சும்”[97]

என்ற பாடலும் ஆர்வ மொழிதல் அணியாகும்.

**பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் பாடலில் ஆர்வமொழியணி**

தீபாவளி விழாவைக் கொண்டாடும் ஆர்வத்தைச் சிறப்புடன் ஆர்வமொழிதல் அணியாகக் காட்டியுள்ளார் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம்.

"உன்னைக் கண்டு நானாட என்னைக்கண்டு நீயாட
உல்லாசம் பொங்கும் இன்பத் தீபாவளி
ஊரெங்கும் மகிழ்ச்சி ஒன்றாகக் கலந்து
உறவாடும் நேரமடா!ஆ. உறவாடும் நேரமடா!
சித்திரப் பூப்போலே சிதறும் மத்தாப்பு
தீயேதும் இல்லாமல் வெடித்திடும் கேப்பு"[98]

என்ற பாடலில் தீபாவளி கொண்டாடுவதற்கான ஆர்வம் வெளிப்பட்டு நிற்கிறது.

**வாலியின் பாடலில் ஆர்வ மொழி நயம்**

அன்பை எல்லோருக்கும் பகிரும் போது எதிரியும் நண்பனாக மாறுகிறான். இங்கு, மாறுபட்ட காதலொன்று படைக்கப்படுகிறது. தலைவனை பழிவாங்கும் நோக்குடன் தலைவி நல்லவள் போல் நாடகம் போடுகிறாள். ஆனால் தலைவன் அன்புக்கு முன்னால் கோபமும் காதலாக மாறி மனைவியான நிலையில் ஆர்வ மொழிதல் பயின்று வந்துள்ளது.

"வங்கக் கடல் ஆழம் என்ன வல்லவர்கள் கண்டதுண்டு
அன்புக்கடல் ஆழம் யாரும் கண்டதில்லை
என்னுடைய நாயகனே ஊர் வணங்கும் நல்லவனே
உன்னுடைய அன்புக்கந்த வானம் எல்லையே"[99]

என்ற வாலியின் பாடலில் தலைவன் மீது கொண்ட அன்பு ஆர்வமொழிதல் அணியாக வெளிப்பட்டுள்ளது.

"இவளொரு இளங்குருவி எழுந்து ஆடும் மலர்க்கொடி
இடையில் நடையில் இறைவன் வரைந்த கோலம்

தவழ்ந்திடும் மலை அருவி பறந்து பாடும் பசுங்கிளி”[100]

என்ற பாடலில் தலைவியின் இயல்பினைஆர்வமொழிதலாக தலைவன் பாடியுள்ளார்.இவ்வாறாக வாலி ஆர்வமொழிதல் அணியைப் பயன்படுத்தியுள்ளார்.

**வைரமுத்துவின் பாடலில் ஆர்வமொழி அணி**

வைரமுத்து காட்டும் தலைவி தலைவனுக்காக நிலவைப் பிடிக்கும் ஆர்வமுள்ளவளாக இருக்கிறாள்.

“அந்த நெலாவத்தான் -நான்
கையிலே புடிச்சேன் என் ராசாவுக்காக”[101]

என்ற பாடல் ஆர்வமொழி அணி சார்ந்ததாகும்.

“ஆளான சிங்கம் ரெண்டும் கைவீசி நடந்தால்
காலடியில் பூமியெல்லாம் அடங்கும்
சிங்காரத் தங்கம்ரெண்டும் தேர்போல வளர்ந்தால்
ஆகாயம் வந்து இங்கேவணங்கும்”[102]

என்ற பாடலும் ஆர்வ மொழி அணி சார்ந்தாகும்.

- அன்பே உந்தன் பெயரை யாரும் (வை.ஆ.பா.ப.146)
- உன் பேரை யாரும் சொல்லவும் விடமாட்டேன் (வை.ஆ.பா.ப.540)
- மொட்டுகளே மொட்டுகளே மூச்சுவிடா மொட்டுகளே (வை.ஆ.பா.ப.840)

என்ற பாடல் அடிகளிலும் ஆர்வமொழி அணி அமைந்துள்ளது.

**பா. விஜய்யின் பாடலில் ஆர்வமொழி அணி**

தலைவனின் பார்வையிலிருந்து விலகியிருப்பதாக தலைவி பாடுகிறாள். அதனைத் தகர்த்துத் தலைவன் தன் ஆர்வத்தை வெளிப்படுத்தி நிற்கும் நிலையில் ஒரு பாடலை விஜய் பாடியுள்ளார்.

“பெ: பூக்களின் கூட்டிற்குள் சென்று தேன் துளியில் குளிப்பேனே!

உன்விழியில் விழவே மாட்டேனே ஆ...

ஆ: ஓ காற்று என்னும் ராணுவம் ஏவி பூக்கதவை உடைப்பேனே

உன் குளியல் கோலம் காண்பேனே... ஓ

பெ: நான் வானவில்லின் பின்னால் அட நின்று கொண்டு குளிப்பேன்!

ஆ: நான் வெண்ணிலவில் ஏறி அடி உன்னை எட்டிப்பார்ப்பேன்[103]

என்ற பாடலில் தலைவன் தன் ஆர்வத்தை வெளிப்படுத்துகிறான்.

“ நீ கால் முளைத்த புஷ்பம்

கடல் நுரையில் செய்த சிற்பம்”[104]

என்ற பாடலில் தலைவியின் மென்மைத் தன்மையைத் தலைவன் புகழ்ந்து உரைத்தலால் ஆர்வமொழி என அறியமுடிகிறது.

“முல்லைப்பூ காம்புதான் உன்கைய குத்தாதா?

ஊருக்குள் காம்பில்லாத பூவும் பூக்காதா?[105]

என்ற பாடலில் தலைவி மீதுள்ள காதல் ஆர்வத்தால் தலைவன் உரைக்கிறான். இதனால் இப்பாடலடிகள் ஆர்வமொழியானது.

### தன் மேம்பாட்டுரை அணி

பாடலில் இடம்பெறும் ஒருவர் தன்னைத் தானே மேம்படுத்தி உரைப்பது தன்மேம்பாட்டுரை அணியாகின்றது. திரையிசைப் பாடல்களில் தலைவனைத், தலைவியை மேம்படுத்தி உரைக்கும் நிலைப்பாடுகள் நிறைய அமைத்துப் பாடப்பெற்றுள்ளன.

**கண்ணதாசன் பாடலில் தன்மேம்பாட்டுரையணி**

இந்த உலகம் எனக்காகவே படைக்கப்பட்டது என்ற நிலையில் உலகைத் தன் மேம்பாட்டிற்காக கொள்ளும் கண்ணதாசனின் பாடல் தன்மேம்பாட்டுரை அணியாக இடம் பெற்றுள்ளது. இதனை,

"உலகம் பிறந்தது எனக்காக
ஓடும் நதிகளும் எனக்காக
மலர்கள் மலர்வது எனக்காக-அன்னை
மடியை விரித்தாள் எனக்காக!"[106]

இப்பாடலில் இடம்பெற்றுள்ள எனக்காக, எனது, நான் ஆகிய சொற்கள் ஒருவர் தன்னைத்தானே பெருமைபடுத்திக்கொள்ளும் நிலையைக் காட்டுவதால் இப்பாடல் தன்மேம்பாட்டுரை அணியைச் சார்ந்ததாக அறியப்படுகிறது.

"ஒரு கோப்பையிலே என் குடியிருப்பு
ஒரு கோலமயில் என் துணை இருப்பு
இசை பாடலிலே என் உயிர் குடிப்பு
நான் பார்ப்பதெல்லாம் அழகின் சிரிப்பு"[107]

என்ற பாடல் கண்ணதாசன் தன்னை வெளிப்படுத்தி நிற்கும் பாடலாகும். இது இவரின் வாழ்க்கையில் வைத்திருந்த கொள்கைகளை வெளிப்படுத்தித் தன்மேம்பாட்டுரை அணியாக அமைகிறது.

"தொடைமீது வாவென்ற துரியோதனா-உந்தன்
தொடை கீறி ரத்தம் எடுப்பேன்!
துச்சாதனா உந்தன் பச்சை ரத்தம் கொண்டு
தோகை என் கூந்தல் முடிப்பேன்"[108]

என்ற பாடலடிகள் திரௌபதி தன் மேம்பாட்டினை எடுத்துரைப்பதாக அமைக்கப்பெற்றுள்ளது.

"வளரும் தென்னை மரமே-நீ

வளர்ந்ததைப்போல் நான் நிமிர்ந்து நிற்பேன்

வணங்கி வளையும் நாணல் நீ

வளைவதைப் போல் தலை குனிவதில்லை

பார்க்கும் கண்கள் பணியவேண்டும்

பாவை உலகம் மதிக்க வேண்டும்"[109]

என்ற பாடலில் நிமிர்தல், தலைத் தாழ்தல், பணிதல் போன்றவற்றை மரம் செடிகளில் இருந்து பெற்றுக் கொள்ளும் தன்மை தன்மேம்பாட்டுரை அணியாகிறது.

"மங்கையரின் குங்குமத்தைக் காக்கும் முகம் ஒன்று

வாடுகின்ற ஏழைகளைக் காணும்முகம் ஒன்று

சஞ்சலத்தில் வந்தவரைத் தாங்கு முகம் ஒன்று

சாதிமத பேதமின்றிப் பார்க்கும் முகம் ஒன்று "[110]

என்ற பாடலடிகளில் ஆறுமுகனாக விளங்கும் முருகனின் முகங்களின் செயல்பாடுகளை தன்மேம்பாடாகக் கண்ணதாசன் உரைத்துள்ளார்.

"எனது ராஜசபையினிலே ஒரே சங்கீதம்-

அதில் இரவுபகல் தூக்கமில்லை ஒரே சந்தோஷம்

இந்தமுகம் எனது வானில் சந்திரனன்றோ-இதை

எடுத்துச்சொல்லும் வார்த்தை யெந்தன் மந்திரமன்றோ!"[111]

என்ற பாடலிலும்,

" நான் கவிஞனும் இல்லை நல்ல ரசிகனும் இல்லை

காதலெனும் ஆசையில்லா பொம்மையுமில்லை"[112]

"பொன் வண்டொன்று மலரென்று முகத்தோடு மோத

நான் வளை கொண்ட கையாலே மெதுவாக மூட”[113]

“நான் இடைவிட்ட சிலம்புக்கு இடைவிட்ட கூட்டங்கள்

எத்தனை நான் சொல்லலாமா”[114]

என்ற பாடலிலும் தன்மேம்பாட்டுரை அணியைக் கண்ணதாசன் பயன்படுத்தியுள்ளார். இவ்வாறு திரைக்கதையின் தலைவி, தலைவி தன்மைகளைத் தன்மேம்பாட்டுரை அணிவழியாகக் கண்ணதாசன் புனைந்துள்ளார்.

**பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் பாடல்களில் தன்மேம்பாட்டுரை அணி**

தலைவனும் தலைவியும் ஒருவருக்கு ஒருவர் தாமே வீரத்தில் சிறந்தவர் என்று போட்டி போடும் பாடலில் தன்மேம்பாட்டுரை அணி சிறக்கச் செய்துள்ளார் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்.

“பெ: அடக்கிடுவேன் ஓய் அடக்கிடுவேன் -ஓய்அடங்காத காளையையும் அடக்கிடுவேன் கண்ணாலே ஆட்டம் போடாதே ஓய் சாட்டை இருக்கும் பின்னாலே!

ஆ: மிரட்டிடுவேன் ஏய் மிரட்டிடுவேன், ஏய் மிரளாத உருவத்தையும்

மிரட்டிடுவேன் கொம்பாலே வீணாத்துள்ளாதே-ஏய் வளைச்சிடுவேன்

வாலாலே!”[115]

என்ற பாடலடிகளில் பெண்ணின் தன் மேம்பாடும், ஆணின் தன் மேம்பாடும் போட்டி போட்டு அமைக்கப்பெற்றுள்ளன.

**வாலியின் பாடலில் தன்மேம்பாட்டுரை அணி நயம்**

உலகப்பொருள்கள் படைக்கப்பட்டது தனக்காகத்தான் என்ற நிலையில் கண்ணதாசனின் மேற்பாடல் ஒட்டியே ஒரு தன்மேம்பாட்டுரை அணிப் பாடலை வாலி எழுதியுள்ளார்.

“பழமுதிர்ச்சோலை எனக்காகத்தான்

படைத்தவன் படைத்தான் அதற்காகத்தான்

நான்தான் அதன் ராகம் தாளமும்

கேட்பேன் தினம் காலையும் மாலையும்

கோலம் அதன் ஜாலம் இங்கு ஓராயிரம்"[116]

இப்பாடலில், எனக்காகத்தான், நான்தான், எனக்கு ஆகிய சொற்கள் தன்மேம்பாட்டுரை அணியை வெளிப்படுத்துவனவாகும்.

"கட்டவண்டி எங்கிட்டே காரா மாருண்டா

ஓட்ட வண்டி கைபட்டா ஜோரா ஓடுண்டா

என்னைப்பத்தி யாருண்ணு ஊரைகேளுப்பா

இல்லையானா உன் வீட்டுக்காரைக்கேளுப்பா"[117]

என்ற பாடலிலும்,

"நானும் ஒரு தென்றல்தான் ஊரெல்லாம்

சோலைதான் எங்குமே ஓடுவேன்

நதியிலே நீந்துவேன் மலர்களை

ஏந்துவேன் எண்ணம் போல வாழுவேன்"[118]

என்ற பாடலிலும் தன்மேம்பாட்டுரை அணி இடம்பெறச் செய்யப்பெற்றுள்ளது. இவரின்

- ராசிதான் கைராசிதான் (வா.ஆ.பா-ப-87)
- நான் ஆளான தாமரை (ப-192)
- கம்பெடுத்து ஆடுவேன் (ப-134

ஆகிய தொடக்கமுடைய பாடல்களிலும் தன்மேம்பாட்டுரை அணி அமையப்பெற்றுள்ளது.

**வைரமுத்துவின் பாடல்களில் தன்மேம்பாட்டுரை அணி**

பணக்கார நண்பன் முன் தன் மேம்பாட்டை ஒரு ஏழைத்தலைவன் சொல்லும் நிலையில் அமைந்துள்ள வைரமுத்துவின் பாடல் தன்மேம்பாட்டுரை அணி சார்ந்ததாகும்.

"இமயமலை ஆகாமல்எனது உயிர் போகாது
சூரியன் தூங்கலாம் எனது விழி தூங்காது
பணமும் புகழும் உனது கண்களை
மறைக்கிறதே அடே நண்பா
உண்மை சொல்வேன் சாவல்
வேண்டாம் உன்னை வெல்வேன்"[119]

என்ற பாடல் தலைவன் ஒருவனின் தன் மேம்பாட்டை உரைப்பதாக உள்ளது.

தன் முயற்சியின் சிறப்பினைக் காட்டும்

"வாழ்க்கையைப் பிளந்து பார்ப்பேன்
நாளையைக் கேள்வி கேட்பேன்
நாட்டியக் கலைகள் காப்பேன்
புதியவன் இவன் போட்டியில் எவன்"[120]

என்ற பாடலிலும்,

"விக்ரம், விக்ரம், விக்ரம் நான்
வெற்றிபெற்றவன் இமயம் தொட்டுவிட்டவன்
பகையை முட்டிவிட்டவன் தீயைச் சுட்டு
விட்டவன் என் வீரமே வாகை சூடும்"[121]

என்ற பாடலிலும், தன் மேம்பாட்டுரை அணி பயின்று வந்துள்ளது.

**பா. விஜய்யின் பாடலில் தன்மேம்பாட்டுரை அணிநயம்**

பா. விஜய் காட்டும் தலைவன் விரல்கள் கொண்டு தன்மேம்பாட்டினை அறிவிக்கிறான்.

“நான் ஒத்த விரல காட்டினா ஒன்னாகும் கூட்டம்தான்
ரெட்ட விரல் காட்டினா ரெடியாகும் பாட்டுதான்
மூனு விரல் காட்டினா முன்னேறும் நேரந்தான்
நாலு விரல் காட்டினா நட்பாகும் வானந்தான்”[122]

என்ற பாடல் தன் மேம்பாட்டுரை அணி சார்ந்ததாகும்.

இவ்வாறு தன் மேம்பாட்டுரை அணியில் தன்னையும், தான் படைத்த தலைவன், தலைவியையும் தன் மேம்பாடு உடையவர்களாகத் திரைப்படப் பாடலாசிரியர்கள் காட்டியுள்ளனர்.

**பரியாய அணி**

பாடலாசிரியன் தான் கூற வந்ததை நேரடியாகக் கூறாமல் வேறு ஒன்றை வைத்துக் காட்டுவது பரியாய அணியாகும்.

“நாதர் முடிமேலிருக்கும் நல்ல பாம்பே- உனக்கு
நல்ல பெயர் வைத்தவர் யார் சொல்லு பாம்பே!
ஆதி சிவன் தலை அமர்ந்த ஆணவமா- அவன்
அங்கமெல்லாம் விளையாடும் தைரியமா.”[123]

என்ற பாடல் பாம்பினைக் குறிக்காது பாம்பு போல அதிகாரம் உள்ளவர்களின் அருகில் இருந்து கொண்டு சமுதாயத்தை அச்சப்படுத்தும் மனிதர்களைக் குறித்துக் கண்ணதாசன் படைத்துள்ளார். இவ்வகையில் இது பரியாயம் ஆகின்றது.

தலைவன் ஒருவன் தலைவியை ஒரு தலையாகக் காதலிக்கிறான். அதை அவளுக்கு உணர்த்த நிலவை அவளாக எண்ணிப் பாடும் வாலியின் பாடல் பரியாய அணி சார்ந்ததாகும்.

"பொட்டு வைத்த ஒரு வட்ட நிலா
குளிர்ப் புன்னகையில் எனைத் தொட்ட நிலா
என் மனதில் அம்பு விட்ட நிலா
இது எட்ட நின்று எனைச் சுட்ட நிலா
வாழ்நாள்தோறும் தினம் தான் காதோரம் பாடல் கூறும்"[124]

என்ற பாடல் பரியாய அணிக்குச் சான்றாக அமைகிறது.

" சண்டை போட்ட கெண்டை மீனு ரெண்டும் சேந்து ஒண்ணாச்சு
ரெண்டும் சேந்து கொஞ்சும்பொது ஏரித்தண்ணி தேனாச்சு
தூண்டியில சிக்கவில்லை சுத்தி ஒரு கொக்குமில்ல
மீனு ரெண்டும் தூங்கையில அக்கம் பக்கம் யாருமில்ல"[125]

என்ற பாடலில் மீன்கள் என்பன காதலர்களைப் பரியாயமாகக் காட்டுகிறது.

"தூரிகை எரிகின்ற போது -இந்தத் தாள்களில் ஏதும் எழுதாது
தினம் கனவு எனதுணவு நிலம்புதிது விதை பழுது
எனக்கொரு மலர்மாலை நீ வாங்க வேண்டும்"[126]

தலைவியின் மரணத்தை மறைமுகமாக உரைத்தலால் பரியாயம் ஆயிற்று.

இவ்வாறு பரியாய அணியையும் திரைப்படப் பாடலாசிரியர்கள் கையாண்டுள்ளனர்.

**சமாகித அணி**

ஒரு செயல் நிறைவேறல் அல்லது ஒரு பொருள் கிடைக்க வேண்டல் ஆகியன கருதி ஒருவர் செய்யும் முயற்சியின்போது அது பலனளிக்காமல்

இருப்பதாகக் காட்டி வேறொன்றின் வழியாகத் தானாகவே அச்செயல் நிறைவேறுவதாக அல்லது அந்த ஒரு பொருள் கிடைப்பதாகப் பாடுவது சமாகித அணியாகும்.

“எங்கே வாழ்க்கை தொடங்கும்
அது எங்கே எவ்விதம் முடியும்
இதுதான் பாதை இதுதான்
பயணம் என்பது யாருக்கும்
தெரியாது பாதையெல்லாம்
மாறிவரும் பயணம் முடிந்துவிடும்”[127]

என்ற பாடலடிகள் பாதைகள் மாறி பயன் தரவில்லை. ஆனால் பயணம் முடிகிறது என்று காட்டி சமாகித அணியாகின்றன.

“எல்லோர்க்கும் வாழ்க்கை இங்கே
எண்ணம் போல் வாய்க்காதம்மா
வாய்க்காட்டி விட்டுத்தள்ளு ஏன்
ஏங்கணும் வந்ததை வரவில் வைப்போம்
வராட்டி செலவில் வைப்போம் வேண்டாத
பாரமெல்லாம் ஏன் தாங்கணும்”[128]

என்ற வாலியின் பாடலடிகளில் எண்ணம் போல் செயல்கள் நடப்பதில்லை. வரவு செலவாகும். செலவு வரவாகும். இந்நிலையில் நினைப்பது நடக்காமல் வேறொன்றால் முடிவது அதை ஏற்பது குறித்து இப்பாடல் எடுத்துரைப்பதால் இப்பாடலடிகள் சமாகித அணியாகின்றன.

“அன்பே உன் ஒற்றை பார்வை
அதைத்தானே யாசித்தேன்
கிடையாதென்றால் கிளியே - என்
உயிர் போக யோசித்தேன்

நான்காண்டுத் தூக்கம் கெட்டு
இன்றுன்னைச் சந்தித்தேன்"[129]

"முன்னேற்றம் தேடிப் தேடிப் போகும் கூட்டம்
ஏமாற்றம் காணும் போது தர்மம் எங்கே?
ஏமாற்றம் செய்தே செய்தே வாழும் கூட்டம்
முன்னேற்றம் காணும் போது தெய்வம் எங்கே?
ஆதிக்க வாசிகளின் கையிலே அட்சய
பாத்திரமும் உள்ளதே"[130]

என்ற பா. விஜய்யின் பாடலில் முன்னேற்றம் ஏமாற்றம் ஆகிறது. ஆனால் ஏமாற்றம் முன்னேற்றம் தானாய்க் காண்கிறது என்ற நிலையில் இப்பாடல் சமாகித அணி சார்ந்ததாக விளங்குகின்றது.

**உதாத்த அணி**

செல்வ மிகுதி, உள்ளத்தின் அன்பு மிகுதி, போன்றவற்றை வியந்து பாடும் பாடல்கள் உதாத்த அணி சார்ந்தவையாகும். இந்த மிகுதியைத் திரைப்படப் பாடலாசிரியர்கள் பலர் எடுத்தாண்டுள்ளனர்.

**கண்ணதாசன் பாடலில் உதாத்த அணி**

செல்வம் மிகுதியைப் பின்வருமாறு கண்ணதாசன் உதாத்த அணிக் கொண்டு பாடுகிறார்.

" வானை இடித்திருக்கும் மாளிகை
நூறிருக்கும் யானை மணியோசை
நாடெங்கும் கேட்டிருக்கும் மன்னவர்
மண்டபம் அந்தியர் தந்திடும்
பொன்னை அளந்திருக்கும்"[131]

என்ற ராணி சம்யுக்தா என்னும் படத்தில் இடம்பெறும் பாடல் செல்வ மிகுதி கருதியதாகும்.

"பொன்மகள் வந்தாள், பொருட்கோடி தந்தாள்"என்னும் பாடலும் செல்வமிகுதி சொல்லும் உதாத்த அணி சார்ந்ததே ஆகும்.

" கண்ணாலே பண்பாடும் உன்னாலே
வாழ்விலே இன்பம் கொண்டாடுவேன்
சந்தோஷம் நின்றாடும் கண்ணா
உன் பேச்சிலே இன்பம் கண்டாடுவேன்"[132]

என்ற உள்ளத்தில் இடம்பெறும் மகிழ்ச்சியின் மிகுதி அளவு காட்டப்பெற்றுள்ளது.

**பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் பாடலில் உதாத்தம்**

மனம் ஆனந்தம் பெறுவதைக் காட்டி உதாத்த அணியைப் பயன்படுத்திப் பாடல் படைத்துள்ளார் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்.

"இன்ப முகம் ஒன்று கண்டேன்!-கண்டு
எதுவும் விளங்காமல் நின்றேன்!-அதை
இரவே உன்னிடம் சொல்ல வந்தேன்!
தேடாமல் அலையாமல் நேரிலே!
சுகம் ஓடோடி வந்தது வாழ்விலே!
மனம் ஆனந்தம் பாடுவது ஏனோ!"[133]

என்ற பாடலில் மனத்தின் இன்ப மிகுதி பாடப்பெற்றுள்ளது.

**வைரமுத்துவின் பாடலில் உதாத்த அணி**

மண்ணுக்குள் வைரம் என்ற படத்தில் இடம்பெறும் வைரமுத்துவின் பின்வரும் பாடல் செல்வம் மிகுதியைக் காட்டி உதாத்த அணியாக நிற்கிறது.

“மாடுகட்டிப் போராடிச்சா மாளாது என்று சொல்லி

ஆனைகட்டிப் போரடிச்சா ஆகாது என்று சொல்லி

சேனைகட்டிப் போரடிச்சோம் சீமையெல்லாம் பேரெடுத்தோம்

எங்க ஊருப் பொண்ணுக்கெல்லாம் ஏழுநாள் சீர்கொடுத்தோம்”[134]

என்ற பாடல் செல்வ மிகுதியினை பதிவு செய்யும் உதாத்த அணியாகும்.

**பா. விஜய்யின் பாடலில் உதாத்த அணி**

“ காதலித்தால் ஆனந்தம் கண்ணடித்தால் ஆனந்தம்

சத்தமின்றி முத்தம் தந்தால் ரொம்ப ரொம்ப ஆனந்தம்”[135]

என்ற பா. விஜய்யின் பாடலில் மனதின் ஆனந்த மிகுதி காட்டப்பெற்று உதாத்த அணியாகின்றது.

**அவநுதி அணி**

பாடலில் ஒரு பொருளின் அல்லது ஒருவரின் இயல்பான குணத்தை மறைத்து அப்பொருளுக்குச் சிறப்பு தோன்றும் நிலையில் பிரிதொன்றைக் கூறுவது அவநுதியணியாகும். இதனைத் திரையிசைப் பாடலாசிரியர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

**பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் பாடலில் அவநுதியணி**

கடலோரத்தில் நண்டுகள் வளை தோண்டி வாழும். இவை குடும்பம் நடத்துவதாக, இன்பம் தேடுவதாகக் கல்யாண சுந்தரம் அவநுதி அணியைப் படைக்கிறார்.

“நில்லாத வேகத்திலே!அல்லும் பகல் மோகத்திலே!

நீண்ட வளை தோண்டிக்கிட்டு குடும்பம் பண்ணுது!

இத்தனையும் நம்மை போல இன்பம் தேடுது-இதை

எண்ணும்போது நமது மனம் எங்கோ போகுது!”[136]

என்ற பாடல் நண்டு குடும்பம் பற்றி வரும் அவநுதியணியாகும்.

**வாலியின் பாடல்களில் அவநுதியணி**

கண்கள் பார்க்கும் அறிவு கொண்டவை. இதுவே இவற்றின் இயல்பான குணம். ஆனால் அதற்குத் தீப்பற்றும் குணம் உண்டென்று சொல்லில் அவநுதி அணியைக் கையாண்டுள்ளார் வாலி.

" ஆகாரம் இல்லாமல் நான் வாழக் கூடும்
கண்ணே உன் பேரைச் சிந்தித்தால்
தீக்குச்சி இல்லாமல் தீ மூட்டக்கூடும்
கண்ணே நம் கண்கள் சந்தித்தால்"[137]

என்ற நிலையில் அவநுதி அணி இப்பாடலடிகளில் இடம்பெற்றுள்ளது. தலைவியின் பேர் சொன்னால் அவள் திரும்புவாள். ஆனால் அதுவே தலைவனுக்கு பசி போக்கும் உணவு என்பதும் கண்கள் சந்தித்தால் தீ பிறக்கும் என்பது அவநுதி சார்ந்தனவாகும்.

விஜய் பாடலில்,

"ஏன் சுடவில்லை சூரியன் என்னை
ஏன் சுற்றவில்லை பூமியும் உன்னை
அட குத்தவில்லை முட்கள் இங்கே
இது ஏன் என்று கேட்டேன் அன்பே
காதல் என்றுதான் காற்றும்
பூவும் சேர்ந்தே சொல்கிறது"[138]

என்ற அடிகளில் சூரியன் சுடுவதும் பூமி சுற்றுவதும் முட்கள் குத்துவதுமான உண்மையை மறைத்து பிறிதொன்றை உரைத்தலால் அவநுதியணி ஆயிற்று.

**சிலேடை அணி**

ஒரு சொல்லோ தொடரோ பல பொருள்கள் பாடும்படி பாடலில் அமைப்பது சிலேடை அணியாகும். இதனையும் திரைப்படப் பாடலாசிரியர்கள் பயன்படுத்திக் கொண்டுள்ளனர்.

**கண்ணதாசன் பாடலில் சிலேடை அணி**

கண்ணதாசன் சிலேடை அணியை இலக்கிய நயத்துடன் பல திரையிசைப்பாடல்களில் கையாண்டுள்ளார்.

"வஞ்சி என்றால் என்னை வஞ்சிப்பதோ

வந்த பின்னே இன்னும் சிந்திப்பதோ"[139]

என்ற நிலையில் வஞ்சி என்ற சொல் பெண்ணையும், வஞ்சித்தல் என்ற வஞ்சனைச் செயலையும் செம்மொழிச் சிலேடையாகக் குறிக்கும் நிலையில் கண்ணதாசன் பாடியுள்ளார்.

"இம்மான் ஒரு பெண்மான் மகள்

அம்மான் மகள் என் மானென வள்ளி

என்றென்னை அழைப்பான்"[140]

என்ற 'கந்தன் கருணை' என்ற படத்தில் இடம்பெறும் பாடலில் மான் என்பது மானையும், பெண்ணையும் செம்மொழிச் சிலேடையாகக் காட்டியுள்ளது.

"அவனிடம் சொன்னேன் அஞ்சுதலை- அந்த

அண்ணலே தந்துவைத்தாள் ஆறுதலை"[141]

என்ற கந்தன் கருணை என்ற படத்தின் பாடலில் ஆறுதலை என்பது ஆறுதலைகளையும் ஆதரவான நிலையையும் செம்மொழிச் சிலேடையாகக் காட்டுகின்றது.

“கொடியவளே! பூங்கொடியளே

கொவ்வைச் செவ்வாய்க் கிளியவளே”[142]

என்னும் முத்துமணி படத்தில் வரும் பாடலில் கொடியவள் என்ற சொல், கொடி போன்றவள் என்பதையும் உள்ளத்தால் கொடியவள் என்பதையும் காட்டுவதாக உள்ளது.

“ தங்கத் தட்டில் பூச்சரத்தோடு

வெற்றிலை களிப்பாக்கு-வைத்து

தாய்போல் உன்னை வருகவென்றழைக்கும்

உள்ளத்தைக் களிப்பாக்கு- கண்ணே

உள்ளத்தைக் களிப்பாக்கு”[143]

என்ற பாடலில் களிப்பாக்கு என்பது ஒரு நிலையில் உண்ணும் பாக்கினைக் குறிக்கிறது. மற்றொரு இடத்தில் மகிழ்ச்சியாக இரு அதாவது களி – பாக்கு என்பதாக இரு பொருள்பட வந்துள்ளது.

“ஆறு குளங்களில் நீந்துமடி- இது

ஆனந்தம் என்றதைக் கூறுமடி

நூறு குளங்களில் நீந்தியபின்-அது

நோயறும் ஆற்றில் குளிக்குதடி”[144]

என்ற அடிகளில் ஆறு குளங்களில் என்ற சொற்றொடர் ஆற்றிலும் குளங்களிலும் என்ற பொருளிலும் எண்ணிக்கையில் ஆறு குளங்கள் என்ற பொருளிலும் இருவேறு பொருள் தந்து செம்மொழிச் சிலேடையணியாவதைக் காணமுடிகின்றது.

இவ்வாறு சிலேடை அணியை திரையிசைப்பாடல்களில் கையாண்டுள்ளார் கண்ணதாசன்.

**வைரமுத்துவின் பாடல்களில் சிலேடை அணி**

வைரமுத்து தன் பாடல்களில் சிலேடை அணியைக் கையாண்டுள்ளார்.

“என்னைக் கேளாமல் கன்னம் வைத்தாய்

நெஞ்சில் கன்னம் வைத்தாய்”[145]

என்ற கீதாஞ்சலி படத்தின் பாடலில் கன்னம் என்பது முகத்தில் உள்ள பகுதியாகவும், கன்னம் என்பது திருடுதல் என்பதாகவும் இரட்டுற மொழியப்பட்டு சிலேடை அணியாகின்றது.

“இங்கு ரெண்டு ஜாதி மல்லிகை

தொட்டுக் கொள்ளும் காமன் பண்டிகை”[146]

என்ற அலைகள் ஓய்வதில்லை படத்தில் இடம்பெறும் பாடலடிகளில் ஜாதி என்பது மனிதர்களின் பகுப்பைக் காட்டும் நிலையிலும் மல்லிகை ஜாதி மல்லிகை என்ற வகையிலும் சிலேடைஅணியாகிறது.

“சின்னச் சின்ன அத்துமீறல் புரிவாய்-என்

செல் எல்லாம் பூக்கள் பூக்கச் செய்வாய்

மலர்கையில் மலர்வாய்”[147]

என்ற அலைபாயுதே படப்பாடலில் மலர்கை, மலர்வாய் என்ற சொற்கள் மலர்தல் என்ற வினையாகவும், மலர் என்ற பெயராகவும் இருபொருள் தந்து சிலேடை அணியாகின்றது.

“இது மாலை மயக்கம்

என் மனதில் நடுக்கம்”[148]

இபபாடலடியில் இடம்பெற்றுள்ள மாலை என்ற சொல் மாலை நேரத்தையும் பூமாலையையும் குறித்து இருவேறு பொருள் தந்து செம்மொழிச்சிலேடையணியாவதைக் காணமுடிகின்றது.

**பா. விஜய்யின் பாடலில் சிலேடை அணி**

'மெர்குரி பூக்கள்' என்ற திரைப்படத்தில் இடம்பெற்ற "மலர்வாய் இதழ் தீண்ட தீண்ட மலர்வாய்" என்ற பாடலடிகளில் மலர்வாய் என்பது மலர் போன்ற வாயையும், மலர்வாய் என்பது எதிர்காலத்தில் பூப்பாய்- மலர்வாய் என்பதையும் குறித்து சிலேடையணியாக அமைந்ததுள்ளது.

**விசேட அணி**

குணம், தொழில், சாதி, பொருள், உறுப்பு போன்ற கருதி ஒரு பொருளுக்கு குறைதலையே மேம்பாடாகக் காட்டுவது விசேட அணியாகின்றது. இதனையும் ஓரளவிற்குத் திரைப்படப் படலாசிரியர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

**கண்ணதாசன் பாடலில் விசேட அணி**

காதலன் தன் காதலியை குழந்தை பருவத்திலிருந்தே காண்கிறான். அவள் பருவம் மாறும்போது அவன் உள்ளத்தில் எழுந்த எண்ணங்களை பதிவு செய்யும் பாடல் வரிகளான,

"உங்கள் அங்கத்திலோ ஒரு குறையிருந்தாலும்
அன்பில் குறைவதுண்டோ"[149]

என்ற பாடலில் உடல் உறுப்பில் குறையிருந்தாலும் அன்பில் குறைவில்லை என்று இப்பாடல் விசேட அணியாக நிற்கிறது.

'படிக்காத மேதை' படத்தில் இடம்பெறும் பாடலான,

"வாழை மரம் படித்ததில்லை கனிகொடுக்க மறந்ததா?-உயர்
வான் முகிலும் கற்றதில்லை மழை பொழிய மறந்ததா?"[150]

என்பதில் வாழைமரம் படிக்கவில்லை, முகில் கற்றதில்லை என்பது குறையானாலும் அவை முறையே கனிகள், மழை தருகின்றன என்று விசேடப் படுத்தப்படுகின்றன.

“தட்டில் வைத்த பட்டுச் சேலை கெட்டுப் போவதுமில்லை
தங்கம் ரெண்டு துண்டானாலும் மாத்துப் போவதுமில்லை
கொட்டிப் போன சந்தனத்தில் வாசம் போவதுமில்லை’’

என்னும் ‘சொந்தம்’ என்ற தலைப்புடைய திரைபடப்பாடலும் விசேட அணி சார்ந்ததாகும்.

**வைரமுத்துவின் பாடலில் விசேட அணி**

“அடடா எனக்காக அரும கொறஞ்சீக
தரும மகராசா தலையைக் கவுந்தீக
களங்கம் வந்தாலென்ன பாரு அதுக்கும்
நெலான்னுதான் பேரு-அடமந்தையில்
நின்னாலும் நீ வீரபாண்டித் தேரு”[151]

என்ற வைரமுத்துவின் ‘முதல்மரியாதை’ படத்தில் வரும் பாடலில் களங்கம் நிலாவுக்கு இழுக்கு என்றாலும் அதன் நிலைக்கு அது களங்கமில்லை என்பதாக விசேடப்பட்டு நிற்பதால் இப்பாடலடிகளில் விசேட அணி உள்ளது என்பது தெரியவருகிறது.

“பொண்டாட்டி கட்டுக்கோப்பா இருப்பதனாலே
நரம்பு துடிக்குது நரச்ச பின்னாலே
தங்கம் என்றும் தங்கம் தானே-மீசை
நரைச்சாலும் சிங்கம் தானே”[152]

என்ற சேனாதிபதி படப்பாடலில் சிங்கம் வயதானாலும் சிங்கம்தான் என்பதால் விசேட அணியாகின்றது.

**பா.விஜய்யின் பாடலில் விசேட அணி**

“மெய்பொருளாய் உள்ள மேனியின் வளைவு

பொய்பொருளாய் உள்ள இடையின் அளவு”[153]

மேனி வளைந்தாலும் மெய்ப்பொருள் போல பரந்து உள்ளது. இடை குறைந்திருந்தாலும் அது பொய்ப்பொருள் போல சிறிதினும் சிறிதாக இருக்கிறது. இவ்வகையில் விசேட அணியைத் தன்பாடலில் கையாண்டுள்ளார் பா.விஜய் இவ்வாறாக விசேட அணியைக் கவிஞர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

**ஒப்புமைக் கூட்டணி**

ஒரு பொருளின், ஒருவரின் பல சிறப்புகளை ஒன்று கூட்டி உரைப்பது ஒப்புமை கூட்ட அணி என்பதாகும்.

“எண்ணும் எழுத்தென்றும் கண் திறந்தாய்!

ஏற்றம் தரும் புலமை ஆற்றல் தந்தாய்!

ஐயம் தெளிய வைத்த அறிவு தந்தாய்!

ஒலி தந்து மொழி தந்து குரல் தந்தாய்!

ஓங்கார இசை தந்து உயரவைத்தாய் தேவி!

தாயில்லாத பிள்ளை யென்று வாயில்லாத ஊமை

யென்று ஆயிரங்க ளான கல்வி வாய்திறந்து தந்த

செல்வி அன்னை உன்னை சரணடைந்தேன் தேவி”[154]

என்ற பாடலடிகளில் தான் பெற்ற கல்வியின் சிறப்புகளை ஒப்புமைக் கூட்டமாகப் பெற்றவன் பாடுவதாகக் கண்ணதாசன் பாடியுள்ளார். இதனால் இப்பாடலடிகள் ஒப்புமைக் கூட்ட அணியாகின்றன.

“செந்தமிழா எழுந்து வாராயோ- உன்

சிங்காரத் தாய்மொழியைப் பாராயோ!

சிந்தையெல்லாம் இனிக்கும் தேனாகும்

செல்வமிதே! அமுதே! தமிழே!”[155]

என்ற பாடலில் தமிழின் சிறப்புகள் ஒப்புமைக் கூட்டமாகபயின்று வந்துள்ளன.

“ உறங்கையிலே பானைகளை உருட்டுவது
பூனைக் குணம் காண்பதற்கே
உருப்படியாய் இருப்பதையும் கெடுப்பதுவே
குரங்குக் குணம்- ஆற்றில்
இறங்குவோரைக் கொன்று இரையாக்கல்
முதலைக் குணம்- ஆனால் இத்தனையும்
மனிதனிடம் மொத்தமாய் வாழுதாடா”[156]

என்ற பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் பாடலில் பல குணங்களின் தொகுப்பு உரைக்கப்பட்டு ஒப்புமைக் கூட்ட அணியாக விளங்குகின்றது.

“ சாமி கருப்புத்தான்
சாமி சிலையும் கருப்புத்தான்
யானை கருப்புத்தான் கூவும்
குயிலும் கருப்புத்தான்
என்னை ஆசைப்பட்டு கொஞ்சும்
போதும் குத்துற மீசை கருப்புத்தான்”[157]

என்ற பா.விஜய்யின் பாடலில் கருப்பான பொருட்கள் எல்லாம் ஒன்று சேர்க்கப் பெற்று ஒப்புமைக் கூட்ட அணியாக விளங்குகிறது.

“முதலாம் சந்திப்பில் நான் அறிமுகம் ஆனேனே
இரண்டாம் சந்திப்பில் என் இதயம் கொடுத்தேனே
மூன்றாம் சந்திப்பில் முகத்தை மறைத்தேன்
நான்காம் சந்திப்பில் நகத்தை கடித்தேன்”[158]

என்ற பாடலில் சந்திப்புகளின் கூட்டம் ஒப்புமைக் கூட்டமாகின்றது.

இவ்வாறு ஒப்புமைக் கூட்ட அணியைத் திரைக்கவிஞர்கள் கையாண்டுள்ளனர்.

**விரோத அணி**

ஒரு பாடலில் சொற்களோ அல்லது பொருள்களோ முரண் அமைப்பில் விரோத அமைப்பில் அமைந்தால் அவ்வகை அணி விரோத அணியாகும். திரையிசைப் பாடல் ஆசிரியர்கள் இதனை பலமுறை பயன்படுத்தியுள்ளனர்.

**கண்ணதாசன் பாடல்களில் விரோதவணி**

கண்ணதாசன் பல பாடல்களை விரோத அணி கொண்டு எழுதியுள்ளார்.

"கரும்பினினும் நுனிக்கரும்பு வேம்பு போல கசக்குது!
கருணையுள்ள நெஞ்சம் கூட தரும வாழ்வை வெறுக்குது!
இரும்பு கூட நெருப்பில் போட்டால் மெழுகு போல உருகுது!
இரண்டு எண்ணங் கொண்ட நெஞ்சில்
இன்பம் துன்பம் பெருகுது!"[159]

என்ற பாடலில் இனிப்பு-கசப்பு, தர்மம் - அநீதி , உறுதி-உருகு, இன்பம் -துன்பம் போன்ற விரோதச் சொற்கள் நிறைந்துள்ளதால் விரோத அணி வந்துள்ளது என்பது தெளிவாகின்றது,

"காலங்களாலே தென்றல் வருக புயலே வரவேண்டாம்
மேகங்களாலே மழையே வருக வெள்ளம் வரவேண்டாம்"[160]

என்ற தாயே உனக்காகப் படத்தில் இடம்பெறும் பாடலிலும்

"இரவில் மலர்ந்த தாமரை கதிரைக் காண மறந்தது
பகலில் மலர்ந்த அல்லியோ நிலவைக் காணத் துடித்தது."[161]

என்ற பாடலடிகளிலும் விரோத அணி அமைந்துள்ளது.

**பட்டுக்கோட்டையாரின் பாடலில் விரோத அணி**

பூமி உருண்டையாக உள்ளதால் சுழன்று கொண்டு இருக்கிறது. இரவும் பகலும் மாறி மாறி வருகிறது. அதில் ஏற்றம் இறக்கம் இருக்குது என்பதைத் தன் பாடலில் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் காட்டுகிறார்.

"உருளுது பெரளுது உலகம் சுழலுது
ஓடுது ஆடுது கூடுது கொறையது
உண்மையைத் தெரிஞ்சுக்குங்க!
இரவும் பகலும் இருட்டுது மெரட்டுது
ஏறுது இறங்குது இடையிலும்
மாறுது இடம் கண்டு நடந்துக்குங்க சாமி
இடம் கண்டு நடந்துக்குங்க!"[162]

என்ற பாடலில் ஒன்றுக்கொன்று முரண்பட்டு நின்று விரோதம் அணி ஆகின்றது.

**வாலியின் பாடல்களில் விரோதவணி**

"முட்டை போடும் காளைமாடு தினம்
மூணு வேளை கறக்குது
குட்டிபோடும் கொண்டைச் சேவல்
கொம்பைக் காட்டி காட்டி முணக்குது"[163]

என்ற அடிகளில் பொருள் மாறுபாட்டுடன் உரைக்கப்படுவதால் பொருள் விரோத அணி இடம்பெறுமாறு பாடியுள்ளார் வாலி.

**வைரமுத்துவின் பாடலில் விரோத அணி**

வைரமுத்துவும் பல பாடல்களில் விரோத அணியைக் கைக்கொண்டுள்ளார்.

“எதிரெதிர் துருவம் இணைகின்ற போது
புது மின்சாரம் உருவாகும் பனித்துளிக்குள்ளே
கடலினைத் தேடிஅலைவது தானே மனமாகும்”[164]

என்ற பாடலில் பனித்துளிக்குள் கடல் என்பதும், எதிர் எதிர் துருவம் இணைவது மின்சாரத்திற்கு என்பதும் விரோத அணியாகிறது.

“ தந்தியில்லா வீணை சுரம் தருமோ
புயல் வரும் வேளையில் பூவுக்கு
சுயம்வரமோ பாவையின் ராகம சோகங்களோ
நீரலை போடும் கோலங்களோ”[165]

என்ற பாடலிலும்,

“நீருக்குள்ளே மூழ்கியே தீயை வைக்கப் பார்க்கிறாய்
பார்வையாலே பாலை வார்க்கிறாய்- என்பக்கம்
வந்து என்னை ஏய்க்கிறாய்”[166]

என்ற பாடலிலும்,

“மெய்சொல்லி மெய்சொல்லி தாழ்ந்தோருண்டு
பொய்சொல்லி பொய்சொல்லி வாழ்ந்தோருண்டு”[167]

என்ற ‘வாய்க்கொழுப்பு’ படத்தில் வரும் பாடலிலும்

“கொஞ்சம் நிலவு கொஞ்சம் நெருப்பு
ஒன்றாய்ச் சேர்ந்தால் எந்தன் தேகம்
கொஞ்சம் நஞ்சு கொஞ்சம் அமுதம்
ஒன்றாய்ச் சேர்ந்தால் எந்தன் கண்கள்”[168]

என்ற ‘திருடா திருடா’ படப் பாடலிலும் விரோத அணி பயின்று வந்துள்ளது.

"எனது சொந்தம் நீ எனது பகையும் நீ
காதல் மலரும் நீ கருவில் முள்ளும் நீ
செல்ல மழையும் நீ சின்ன இடியும் நீ
பிறந்த உடலும் நீ பிரிந்த உயிரும் நீ
மரணம் ஈன்ற ஜனனம் நீ"[169]

என்ற அடிகளில் சொந்தம் - பகை, மலர் - முள், இடி – மழை, பிறந்த - பிரிந்த, உடல் - உயிர் எனச் சொற்கள் மாறுபட உரைத்தலால் சொல்விரோதமாகவும் மரணம் ஈன்ற ஜனனம் எனப் பொருள் மாறுபட உரைத்தலால் பொருள் விரோத அணி பயின்று வந்துள்ளதை அறிய முடிகின்றது.

**பா. விஜய் பாடலில் விரோத அணி**

தாயின் பாசம் கூட குழந்தைக்கு இறுதிவரை கிடைப்பதில்லை எனவே, பாசமும் சிலகாலம் போடும் வேஷம்தான். இன்பம் என்பது இறைவனுக்கு மட்டும்தான் அது மனிதனுக்கில்லை. தண்ணீரின் சொந்தம் கடலுக்கா? கடற்கரைக்கா? போன்ற முரண்பாடான செய்தியை உணர்த்தும் பாடல் வரிகள் விரோத அணியாக உள்ளன.

"பாசம் எல்லாம் வேஷத்தின் சொந்தம்
சோகம் தானே நிரந்தர சொந்தம்
இன்பம் மட்டும் தெய்வத்தின் சொந்தம்
துன்பம் தானே மனிதரின் சொந்தம்
சொந்தமில்லையே சொந்தமில்லையே
சொந்த நிழலே நமக்கு சொந்தமில்லையே"[170]

எல்லாம் சில காலம் தான் எதுவும் நிலையில்லை என்று தெரிந்தும் மனிதன் எல்லாமே தனக்கு சொந்தமாக நினைக்கும் வினோதமான செயலைக் குறிப்பிட்டுள்ளதால் இப்பாடல் விரோதவணி நயம் பெற்றுள்ளதை அறியமுடிகின்றது.

"நள்ளிரவில் தொலைபேசி செய்கிறாய்
குட்மானிங் சொல்லி நீயும் சிரிக்கிறாய்"[171]

என்ற பாடலில் இரவினில் காலை வணக்கம் சொல்லும் நிலை முரணாகிறது.

"இன்னொரு ஜென்மத்தில் பெண்ணே நீ என்னைப் போல்
ஆணாகப் பிறந்து வருவாய் உன்போல பெண்ணை நீ
அப்போது நேசித்தால்என் நெஞ்சத்தின் வேதனை நீ அறிவாய்"[172]

என்ற பாடலிலும் விரோத அணிகள் இடம்பெற்றுள்ளன.

"நெருங்கினால் குளிர்கிறாய் விலகினால் சுடுகிறாய்
ஒரு நொடி மலர்கிறாய் மறுநொடி உலர்கிறாய்"[173]

என்ற பாடலிலும்

"தித்திக்கும் அமிலம் நீ கசக்கும் அமுதமும் நீ
மிரட்டும் கவிதை நீ மெல்லிய பூகம்பம் நீ"[174]

என்ற பாடலிலும் விரோத அணி இடம்பெற்றுள்ளது. இவ்வாறு திரைப்படப் பாடலாசிரியர்கள் விரோத அணியைப் பெரிதும் பயன்படுத்தியுள்ளார்.

**மாறுபடு புகழ்நிலையணி**

தான் கருதிய பொருளை மறைத்து அதனைப் பழிப்பதன் பொருட்டு வேறொன்றைப் புகழ்வது மாறுபடு புகழ்நிலையணியாகும்.

**கண்ணதாசன் பாடலில் மாறுபடு புகழ்நிலை அணி**

"கண்ணனுக்கும் கள்வனுக்கும் பேதமில்லை தோழி- அவன்
கன்னம் வைத்துத் திருடிவந்த கதைகள் பலகோடி
நல்லதற்குத் திருடுவதும் நாணயந்தான் தோழி-அதை
நாட்டி வைக்க கண்ணனுக்கு வாழ்த்துரைப்போம் வாடி"[175]

என்ற திருமால் பெருமை படப்பாடலில் கள்வன், கண்ணன் இருவரும் காட்டப்பெறுகின்றனர். கள்வனைப் பழித்து, கண்ணனை கள்வன் வழியிலேயே புகழ்கிறது இப்பாடல். கள்வன் தனக்காகத் திருடுகிறான். கண்ணன் நல்லதற்காக திருடுகிறான் என்ற நிலையில் இப்பாடல் மாறுபடு புகழ்நிலையணியாகின்றது.

**பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரத்தின் பாடலில் மாறுபடு புகழ்நிலையணி**

நாட்டில் வாழும் மனிதர்களிடம் வீரமில்லை, காட்டில் வாழும் பெண்கள்கூட வீரம் மிக்கவளாக உள்ளனர் எனப் பாராட்டும் நிலையில் அமையும் பட்டுக்கோட்டையின் பாடல் மாறுபடு புகழ்நிலை அணியாகின்றது.

“தென் பொதிகை எங்கள் மலை சாமியோ!-சாமி
தேக்குமரம் பாக்குமரம்-எங்கள் தென்னை
மரம் புன்னைமரம்-எங்க
வாழ்க்கை எல்லாம் காட்டுக்குள்ளே ஏங்சாமியோ சாமி!
நாங்க வந்ததில்லே நாட்டுக்குள்ளே!
வேலன் பேரைச் சொல்லவில்லை எடுப்பா
மீறி வரும் புலியை வீரத்தினால் அடக்கி
ஏறிமிதிச்சுக்கிட்டுப் பல்லைஎடுப்பா!
நாட்டுக்குள்ளே வாழும் மக்களுக்கு வீரமில்லை”[176]

என்ற பாடலில் மனித வீரத்தைப் பழித்து வேடப் பெண்ணின் வீரத்தை மிகுத்து உரைக்கப்பெற்றுள்ளதால் இப்பாடல் மாறுபடு புகழ்நிலையணியாகின்றது.

**புகழாப் புகழ்ச்சியணி**

பாடலில் ஒன்றை பழிப்பது போலக் கூறி, அதன் மேன்மையைப் புகழ்வது புகழாப் புகழ்ச்சியணியாகும். இதனையும் திரைப்படப்பாடலாசிரியர்கள் கையாண்டுள்ளனர்.

“கோடியில் ஒருவர்தான் முனிவராகலாம்

கோட்டையில் ஒருவர்தான் அரசராகலாம்

ஒவ்வொரு மனிதனும் துறவியாவதா உலகிலே

தலைமுறை முடிந்து போவதா?

புத்தரும் வாழ்ந்துதான் காடு தேடினார் புலவரும்

வாழ்ந்துதான் கவிதை பாடினார்

பக்தரும் காதலை மறுத்ததில்லையே

பரமனும் பெண்களை வெறுத்ததில்லையே”[177]

என்ற கண்ணதாசன் பாடலில் பெண்களை வெறுக்கும் நிலையில் தொடங்கி பெண்களை உயர்த்தும்நிலைக்குக் கொண்டு செல்வதால் இது புகழாப் புகழ்ச்சியாகின்றது.

“பணத்தால் நல்ல உள்ளம் பேயானது

குணத்தாலே அது மீண்டும் தாயானது”[178]

என்ற கண்ணதசான் பாடலில் நல்ல உள்ளம் பேயாகி தாயாகிறது என்ற நிலையில் இதுவும் புகழாப் புகழ்ச்சியாகின்றது

“அரண்மனை அறிவான் அரியனை அறிவான்

அந்தப்புரம் ஒன்று இருப்பதை அறியான்

வருகின்ற வழக்கைத் தீர்த்து முடிப்பான்

மனைவியின் வழக்கை மனதிலும் நினையான்”[179]

என்ற பாடலில் அரண்மனை அறிந்தவன், அரியணை அறிந்தவன் அந்தப்புரத்தை கூட நினைக்காமல் ஆட்சி செய்கிறான் என்ற நிலை வெளிப்பட உரைத்தலால் புகழாப் புகழ்ச்சியாகின்றது.

“வீரத்தில் வேங்கை என்றாலும் -அந்தி

நேரத்தில் மானிடம் சாயும் -இது

இது ஆயிரங்காலத்து வேதம்

ஐயையையே இன்னும் சொல்லவா"[180]

என்ற பாடல் அடிகளில் கண்ணதாசன் தலைவனின் வீரத்தை புகழ்வது போல் பழித்து இல்லறத்தின் மேன்மையைக் கூறுவதால் புகழாப் புகழ்ச்சியாகின்றது.

"கண்ணில் வரும் காட்சி எல்லாம் கண்மணிய உறுத்தும்

காணாத உன் உருவம் கண்ணுக்குள்ள இனிக்கும்"[181]

என்ற பாடலடிகளில் கண்களில் தெரியும் உருவம் உறுத்துகிறது. தலைவியின் வடிவம் கண்டதும் இனிக்கிறது. இந்நிலையும் புகழாப்புகழ்ச்சி யாகின்றது.

"உடம்பு என்பது உண்மையில் என்ன?

கனவுகள் வாங்கும் பை தானே?

தூக்கத்தில் பாதி ஏக்கத்தில் பாதி

போனது போக எது மீதம்?

பேதை மனிதனே கடமையை

இன்றே செய்வதில் தானே ஆனந்தம்?"[182]

என்ற பாடலில் உடல் கனவுகள் சுமக்கும் பை என இழித்துரைக்கப்பெற்று அதன்பின் அது கடமையாற்ற தேவை என்பது உணர்த்தப்பெற்றுள்ளது.

"பசும் பொன்னா பித்தளையா

தவறாக நான் நினைச்சேன்

நேரில் வந்த ஆண்டவனே"[183]

என்ற பாடலில் பித்தளை என்ற மதிப்பிழப்பு, பின்பு ஆண்டவனாகி மதிப்புப் பெறுகிறது. இவ்வகையில் இதுவும் புகழாப்புகழ்ச்சி அணி ஆகிறது.

**நிதர்சனவணி**

இயற்கையாக நிகழும் நிகழ்ச்சிகளால் ஏற்படும் பயனை வேறு ஒரு பொருளுக்கு நன்மை, தீமை செய்வதாகக் காட்டுவது நிதர்சனவணியாகும்.

கண்ணன் சிறு குழந்தையாக இருக்கும் போது பெண்களோடு விளையாடுவதை விரும்புவான். பெண்களும் அவனைக் கட்டியணைத்து முத்தம் கொடுப்பார்கள். ஆனால், காதலருக்கு நடுவிலே கண்ணபிரான் தோன்றினால் காதலுக்கு இடையூறாகத் தோன்றுவதை விளக்கும் பாடல் வரிகள் பின்வருமாறு,

"கண்ணனுக்கு தேவையென்ன முத்தம் தானே
கைகளுக்குள் வட்டமிடும் திட்டம் தானே
கண்ணன் என்றால் பெண்களுக்கு இஷ்டந்தானே
காதலுக்கு நடுவில் வந்தால் கஷ்டந்தானே"[184]

என்ற பாடலில் காதலர்களுக்கு விருப்பமான கண்ணன் காதலர்க்கு இடையில் இடையூறாகிறான். இதனால் இப்பாடல் நிதரிசனம் சொல்வதாகிறது.

"விலைமகள் ஒருத்தி கலைமகளானால்
குலமகள் என்னாவாள்- என்ன ஆவாள்?- அவள்
வேதனை மிகுந்து நாயகன் தனக்கே
சோதனைப் பெண்ணாவாள் "[185]

என்ற 'வாழ்ந்துகாட்டுகிறேன்' படப் பாடலும் நிதரிசனமாகின்றது. விலைமகள் கலைமகள் ஆகும் செயல் குலமகளைப் பாதித்து அவள் சோதனைப் பெண்ணாகிறாள்.

"இசையை மறந்த ஒரு மனிதன் மிருகமாகிவிடக் கூடும்
இசையை ரசிக்கும் ஒரு மிருகம் மனிதனாகித் தலையாட்டும்"[186]

என்ற பாடலில் இசையில் நிதர்சனம் விலங்குகளையும் மனிதர்களாக ஆக்குகின்றது. இவ்வகையில் நிதர்சன அணியைப் பாடலாசிரியர்கள் கையாண்டுள்ளனர்.

**புணர்நிலையணி**

வினையாலும் பயனாலும் இருண்டு பொருள்களுக்கு ஒரு சொல்லே முடிக்கும் சொல்லாகப் பொருந்துமாறு சொல்வது புணர்நிலை அணியாகும்.

"சமயபுரத்து மகமாயி! சகல உலக மாகாளி
கண்ணபுரத்து மகமாயி! காஞ்சிபுரத்து காமாட்சி
குறைகள் தீரக் கொடுமைகள் மாறக்
கருணைக் கண்ணால் பாரும் அம்மா!
கும்பிடு போடும் ஏழை எங்கள் குடும்பம்
வாழ வேணும் அம்மா!"[187]

என்ற பாடலில் மகமாயி, மாகாளி, காமாட்சி எல்லா அம்மன்களும் ஒரே முடிவான கண்ணால் பார்க்க இந்தப் பாடல் கேட்கிறது. இதனால் இவ்வடிகளால் இது புணர்நிலையணியாகிறது.

"கண்ணுக்கொரு வண்ணக்கிளி
காதுக்கொரு கானக்குயில்
நெஞ்சுக்கொரு வஞ்சிக்கொடி நீதானம்மா"[188]

என்ற பகுதியில் வண்ணக்கிளி, கானக்குயில் இரண்டும் நீதானம்மா என முடிவு பெற்று புணர்நிலை அணியாகிறது. இவ்வாறு இவ்வணியையும் கவிஞர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

"வட்டி கொடுப்போரும் வாங்கிமுடிப்போரும்
மறக்க முடியாதது – காதல்
கட்டி அணைப்போரும் கலந்து மிதப்போரும்
கடக்க முடியாதது "[189]

என்ற அடிகளில் காதல் என்ற பண்பு பணத்தின் மேலுள்ள காதல் என்பது கொடுப்போர், முடிப்போர் என இரண்டுக்கும் பொருந்துமாறு புணர்நிலையில் பாடப்பெற்றுள்ளது.

**பரிவருத்தனை அணி**

ஒரு பொருளின் தன்மையைப் பிரிது ஒரு பொருள் பெற்றுச் சிறப்பிப்பது பரிவருத்தனை அணியாகும். இதனையும் திரையிசைப்பாடலாசிரியர்கள் கைக்கொண்டுள்ளனர்.

**கண்ணதாசன் பாடலில் பரிவருத்தனை அணி**

"பூமாலை நீதந்து சீராட்டினால் புகழ்
மாலை நான் தந்து தாலாட்டுவேன்"[190]

என்ற கண்ணதாசனின் பாடலடிகளில் பூமாலை, புகழ்மாலை ஆகியன பரிவருத்தனையாகின்றன.

**வாலி பாடலில் பரிவருத்தனை அணி**

"இடது வழியில் தூசி விழுந்தால்
வலது விழியும் கலங்கி விடுமே
இருட்டில் கூட இருக்கும் நிழல்தான்
இறுதி வரைக்கும் தொடர்ந்து வருவேன்
சொர்க்கம் எதற்கு என்பொன்னுலகம்
பெண்ணுருவில் பக்கம் இருக்கு அன்பே வா"[191]

என்ற வாலியின் பாடலில் சொர்க்கம் பெண்ணுலகாக பரிவருத்தனை ஆகி அணியாகின்றது.

